சோவியத் சிறுகதைகள்

# சோவியத் இனமொழிச் சிறுகதைகள்

அயல் மொழிப் பதிப்பகம்
மாஸ்கோ

## பொருளடக்கம்

நோரா ஆதம்யான் (பிறப்பு 1910). தோட்டக் கலை நிபுணி, கால்நடை வளர்ப்பு நிபுணி, விஞ்ஞான நிபுணி — இவர்களே நோரா ஆதம்யானின் கதைகளில் வரும் முக்கியப் பாத்திரங்கள். உதாரணமாக, ''ஐரேவ்ஷான் டாக்டர்'' என்னும் கதையில் வரும் ஜாரிக் என்ற பாத்திரத்தை எடுத்துக்கொள்வோம். அவள் அடக்கமுள்ள யுவதி. முன்பு குடியானவப் பெண்ணாயிருந்தவள். வைத்தியக் கல்லூரியில் கற்றுத் தேர்ந்து, வீடு திரும்பித் தன் சொந்த கிராமத்தினருக்குத் தொண்டு செய்கிருள். ஆர்மீனியா முழுவதற்கும் ஐம்பதே மருத்துவர்கள் இருந்த காலம் எப்போதோ போய்விட்டது. இப்போது பல ஆண்டுகளாக மருத்துவத் தொழிலில் தேர்ச்சிபெற்ற ஆயிரக் கணக்கான பெண்களும் ஆடவரும், நோயாளிகள் எங்கிருந்தாலும், மிக மிக எட்டாக் கையிலிருக்கும் கிராமங்களில் இருந்தாலுங்கூட, எந்நேரத்திலும் சென்று அவர்களுக்கு உதவத் தயாராயிருக்கிருர்கள். அதிலும் இந்தத் தொண்டு இலவசமாகச் செய்யப்படுகிறது. ஜாரிக்கின் கிராமத்தில் செய்யத்தக்க நற்பணிகளுக்கு எல்லையும் உண்டோ? மக்களுக்குத் தன்னல் இயன்ற வகையிலெல்லாம் சேவை புரியாமல் அவளால் மன நிறைவும் மகிழ்வும் கொள்ள முடியுமோ?

தமது கதாநாயகியைப் பற்றி ஆசிரியை மிதமாகவே, தமது உணர்ச்சிகளை மறைத்துக் கொண்டே எழுதுவது போல நமக்குப் படுகிறது. ஆயினும் ஜாரிக் போன்றவர்கள் மீது, ஆர்மீனியாவின் புதல்வர், புதல்வியர் மீது ஆசிரியை எத்தகைய அன்பு கொண்டிருக்கிறார் என்பதை நம்மால் உணராமலிருக்க முடியாது.

## ஜரேவ்ஷான் டாக்டர்

சனிக்கிழமை யன்று ஜாரிக்குக்கு டிஸ்பென்சரியில் வேலை வழக்கத்தைவிடக் குறைவான நேரமே இருந்தது. அறுவடை தொடங்கி விட்டது. இந்த நாட்களில் கூட்டுப்பண்ணைக் காரர்கள் டாக்டரைத் தொந்தரவு செய்வது அபூர்வந்தான். வெளிவேலைக்கான மருந்துப் பெட்டியுடன் ஜாரிக் அருகாமையிலிருந்த வயல் களில் வேலை செய்யும் விவசாயிகளைப் பார்வை யிட்டாள்; சில சிறு காயங்களுக்குக் கட்டுப் போட்டாள். கதிரடிக்கும் களத்திலே வேலை செய்பவர்களுக்கு எப்போதும் ஏதாவது தூசி தும்புகள் கண்களில் புகுந்து தொல்லை கொடுக் கும், எனவே கண்களைச் சுத்தம் செய்யும் மருந் தும் பட்டித் துணித் துண்டுகளும் எடுத்துக் கொண்டு அங்கே போனாள். தொற்றுநீக்கி மருந்

தில் தோய்த்த துணித் துண்டுகளை யோகித்தபின் சலசலவென்று கொட்டும் தானியத்தை வியப்புடன் பார்த்துக்கொண்டு நின்ருள்.

''இந்தா ஜாரிக், இங்கே வா என் அருகே!'' என்று கூவிஞள் ஆஸ்ப்ராம். கறு கறுவென்ற கேசம். சிறுகூடான தேகம். அவளது தோள்கள் மீதும் தலை மேலும் தட்டுத் தட்டாகப் புழுதி படிந்திருந்தது.

''இப்படி வா ஜாரிக், எங்களுக்குக் கொஞ்சம் ஒத்தாசை பண்ணேன்!'' — புது விளைச்சல் தானியத்தைச் சாக்குகளில் நிரப்பிக் கட்டிக் கொண்டிருந்த பெண்கள் இவ்வாறு கூவிஞர்கள்.

இவர்களெல்லாம் ஜாரிக்கின் குழந்தைப் பருவத் தோழிகள். பரீட்சையில் தேறி மருத்துவப் பட்டம் பெறுவதற்கு முன் ஜாரிக் இதே களத்தில் இவர்களுடன் சேர்ந்து அடிக்கடி வேலை செய்திருக்கிருள். இப்போதோ அவ்வாறு செய்ய முடியாது. அவளுக்கென்று தனியான கடமைகள், சொந்தக் கவலைகள்.

கூட்டுப்பண்ணைத் தொழிலாளர் கோஷ்டித் தலைவன் அவாக் ஸாந்த்ரோஸ்யான் அவள் மனதைப் புண்படுத்தியிராவிட்டால் ஜாரிக் இன்னும் சிறிது நேரம் களத்தில் தங்கியிருந்திருப்பாள். அகன்ற அலகுகளும் நீண்ட கைப்

பிடிகளும் உள்ள அள்ளு மண்வெட்டிகள் சாமான் அறையில் கிடைத்தன என்றும் அவை சதுப்பு நிலத்தைத் தூர்க்கும் வேலைக்கு மிக வும் ஏற்றவை என்றும் அவள் அவாக் ஸாந்த் ரோஸ்யானிடம் ஒரே மகிழ்ச்சியுடன் தெரிவித் தாள். அவனோ, வேறுபுறம் பார்த்தவாறு மலங்க மலங்க விழித்து, ''சதுப்பு நிலத்தைத் தூர்க்கும் வேலை இந்த வாரம் நடக்காது'' என்று மென்று விழுங்கிக்கொண்டு பதிலளித் தான்.

ஜாரிக்குக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''நடக்காதா? ஏனும்?''

''தோழர் காலூரஸ்த் கட்டளை. அறுவடை வேலையை முடிக்க வேண்டுமாம்.''

இப்படி நடக்கும் என்பது அவளுக்குத் தெரிந்தது தான். எல்லாம் கூட்டுப்பண்ணைத் தலைவர் செய்கிற வேலை. மக்களுக்கு மலேரியா நோய் வந்தால் வரட்டுமே, அவருக்கென்ன கவலை? இந்த மனிதனின் பார்வை மூக்கு நுனிக்கு முன்னே செல்வதே யில்லை.

''எங்கே அவர் காலூரஸ்த்? எங்கேயிருக்கி றார் தலைவர்?'' என்று மறுபடி மறுபடி கேட் டாள் ஜாரிக்.

அவரை எங்குமே காணவில்லை. அவர்தான் மலைமேலிருந்த வயல்களைப் பார்வையிடச்

சென்றுவிட்டாரே, அன்று முழுவதும் அங்கிருந்து திரும்பமாட்டாரே.

மிகுந்த மன வேதனையுடன் டிஸ்பென்சரிக்குத் திரும்பிய ஜாரிக், வழியில் கோடைகாலத்துக்கான சிசு பராமரிப்பு நிலையமாகப் பயன்பட்டுவந்த பள்ளிக்கூடத்திற்குள் சென்று பார்த்தாள். ஜன்னல் திரைகள் போடப்பட்டு, அறைகள் குளுகுளுவென்று அமைதியாக இருந்தன. குழந்தைகள் உறங்கிக் கொண்டிருந்தன. சின்னஞ்சிறு கட்டில்களின் வரிசைகளுக்கிடையே மெதுவாகச் சுற்றிவந்தாள் ஜாரிக். இதோ படுத்திருக்கிறாள் கழுக்கு மொழுக்கான ஆனூஷ், ஆஸ்பிராமின் குழந்தை. அவளுடைய கைகள் பரத்திக் கிடந்தன. சின்னஞ்சிறு முஷ்டிகள் இறுக மூடியிருந்தன. ஒரே நிதானமாக மெல்லென இழையோடிக் கொண்டிருந்தது மூச்சு. இன்னொரு கட்டிலில், துப்பட்டியை உதைத்துப் பின்னே தள்ளிவிட்டு, சிண்டாணிக் கால் வெளியே தெரியும்படி படுத்திருந்தான் எல்லோருக்கும் செல்லப்பிள்ளையான அஷோத்திக். அவனுடைய படுக்கையருகே இன்னும் சில விநாடிகள் தாமதிக்க வேண்டுமென்ற அடக்க முடியாத ஆசை ஜாரிக் உள்ளத்திலே பொங்கியது. எனினும் மளமளவென்று மேலே சென்றுவிட்டாள். அஷோத்திக் அவளுடைய மருமகன். தன் உறவினர்களின் குழந்தைகளை டாக்டர் அதிகமாகக்

கவனிக்கிறுர் என்று ஒருவர் நினைக்கும்படி வைத்துக் கொள்ளக் கூடாது அல்லவா? வரிசைக் கடைசியிலிருந்த படுக்கைக்கு அருகே மட்டும் ஜாரிக் நீண்ட நேரம் நின்ருள். அதில் படுத்திருந்தது மிக மெலிந்த, மென்மையான பெண் குழந்தை. பிறந்தபோது இந்தக் குழந்தைக்கு மூச்சில்லை. அதன் நீலத் தளிருடலுக்குள் அணையும் நிலையிலிருந்த உயிர்ச் சுடரைத் தூண்டி விடும் பொருட்டு ஜாரிக் பட்ட பாடு அவளுக்கே தெரியும். ''என்ன செய்கிருய் ஜாரிக்? இது வீண் வேலை. இறந்தவரை எங்கேயாவது பிழைப்பூட்ட முடியுமா? போதும், விடு!'' என்று எல்லாரும் சொன்ஞர்கள். கடைசியில் குழந்தைக்கு உயிர் வந்துவிட்டது. உலக மக்கள் இனத்திற்கு ஒரு குழந்தைச் செல்வம் கிடைத்தது. அதிலும் எத்தகைய இனிமையான குழந்தை!

ஜாரிக்கின் பின்னே, அவளுடைய குதிகால்களை மிதித்துவிடுவாள் போல இழுகிப் பிழுகிக் கொண்டு வந்தாள் மானிஷ் என்ற பருத்த வாயாடிப் பெண்பிள்ளை. சிசு பராமரிப்பு நிலையத்தை அவள்தான் மேற்பார்வை செய்து வந்தாள். அதிலே அவளுக்கு ஒரே பெருமை.

''இன்றைக்குக் காலையில் வெண்ணெய் வாங்குவதற்காக உக்கிராணத்துக்குப் போனேன். பார்க்கிறேஞே, உப்பிட்ட வெண்

ணெய்! எப்படியிருக்கிறது சேதி? குழந்தைக ளுக்கு உப்பிட்ட வெண்ணெயாம்! அப்படியும் நான் பதற்றப்படாமல், 'புது வெண்ணெய் யாருக்காக வைத்திருக்கிருய், அப்பா?' என்று உக்கிராணக்காரனை அமைதியாகவே கேட் டேன். 'புது வெண்ணெயா? பட்டணத்திற்குக் கொண்டுபோய் விற்கிறேம். தலைவர் உத்தரவு அப்படி' என்ருனே. எனக்கா மண்டிக்கொண்டு வந்தது கோபம். உப்பு வெண்ணெயை எடுத்துச் சளப்பென்று அவன் மூஞ்சியிலே அப்பினேன் பாரு....''

மானிஷை உறுத்துப் பார்த்தாள் ஜாரிக்.

''அப்பினேன் என்ருல் அப்பினேனு? வெண் ணெயைப் பீப்பாயில் கடாசினேன்'' என்று திருத்திக்கொண்டாள் மானிஷ். '' 'இதோ பார். இந்த வெண்ணெயை நான் வாங்கிக் கொள்ள மாட்டேன். இந்த மாதிரி வெண்ணெ யைக் குழந்தைகளுக்குக் கொடுத்தேனுனல் டாக் டர் என்ன செய்வாள், தெரியுமா? என் கழுத் தைத் திருகிப் போட்டுவிடுவாள்' என்றேன். அதற்கு அவன் என்ன சொன்னுன் என்று நினைக் கிருய்? 'எந்த டாக்டர்? நம்முடைய ஸாக்கோ ஸாரோயானின் மகளைத் தானே சொல்லுகிருய்? ஒன்றும் பிரமாதமில்லை. இதற்கெல்லாம் மிரளு கிறவன் நான் அல்ல' என்கிருன்.''

''வெண்ணெய் என்ன ஆயிற்று?''

''வெண்ணெய் தந்தான். தராமல் இருந்து விடுவானா எனக்கு? முழியைப் பிடுங்கிவிட மாட்டேனா?...''

ஜாரிக் அறையிலிருந்து வெளியே வெயி லொளி நிறைந்த வராந்தாவிற்கு வந்தாள். மஞ்சள் நிற வீதி வெறுமையாயிருந்தது. அதிலே ஒரு சிறுமி வெறுங்காலுடன் பள்ளிக்கூடத்தை நோக்கி ஓடிவந்து கொண்டிருந்தாள்.

''விரைவாக வா, ஜாரிக், எங்கள் வீட்டில் ஆமோவுக்கு உடம்பு சரியாயில்லை'' என்று மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கக் கூறினாள் அச்சிறுமி.

சிறுமியுடன் அவள் வீட்டை நோக்கிப் போகும் வழியில் ஜாரிக்கின் மனத்தில் பலவித எண்ணங்கள் எழுந்தன. கல்லூரிப் படிப்பு முடிந்தபின் சொந்த கிராமத்திலேயே வேலை செய்யும் பொருட்டு அவள் திரும்பி வந்தது சரிதானா? இங்கே வராவிட்டால் வேறு எங்கே போயிருக்க முடியும்? இங்கே ஐரேவ்ஷானில் அவளுடைய வீடு இருக்கிறது, காதல் கணவன் இருக்கிறான்; உறவினர்களும் நண்பர்களும் இருக்கிறார்கள். இங்கே எல்லாம் அவளுக்குப் பழக்கமானவை, விருப்பமானவை. எனவே தான் அவள் இங்கே வந்தாள்.

நடப்பிலே அவளது அனுபவம் அவள் எண்ணியது போல் சரளமாக இல்லை. எல்லோ

ரும் அவளைச் சின்னப் பெண்ணாகவே நினைவில் வைத்திருக்கிறார்கள். எல்லோருமே, குழந்தைகள்கூட, அவளைப் பெயர் சொல்லிக் கூப்பிடுகிறார்கள். இத்தகைய இடத்தில் டாக்டருக்குரிய மதிப்பைப் பெறுவது கடினம். உதாரணமாக, கூட்டுப்பண்ணைத் தலைவரை எடுத்துக் கொள்ளலாம். அவருக்கு அவளைப் பார்த்தால் அதிகாரியாகவே தோன்றவில்லை. அதனால்தான் அவர் அவளுடைய வேண்டுகோள்களை மதிப்பதே கிடையாது. சதுப்பு நிலத்தைத் தூர்க்க வேண்டுமென்று மாவட்ட நிர்வாகக் கமிட்டியும் கிராம சோவியத்தும் உத்தரவு பிறப்பித்த போதிலும், கூட்டுப்பண்ணைத் தலைவர் அதற்காக ஒரு முறைக்கு மேல் ஆட்களை அனுப்ப

ஜாரிக் நோயாளியின் வீட்டிற்குள் புகுந்தாள். 'தக்தா' எனப்படும் மஞ்சத்தின் மீது படுத்திருந்தான் ஓர் அழகிய இளைஞன். நினைக்கவே அரிய பளபளப்பான வண்ணங்களுடன் கண்ணைப் பறிக்கும் கனத்த கம்பளி அவன் உடல்மீது போர்த்திருந்தது. சிவுசிவென்றிருந்த முகம் அவனுக்குக் கடுஞ்சுரம் என்பதைக் காட்டியது.

"உன் உடம்புக்கு என்ன, ஆமோ?" என்று பரிவுடன் வினவினாள் ஜாரிக்.

ஆமோவின் கண்கள் இரத்தச் சிவப்பேறியிருந்தன. "ஏதாவது செய், ஜாரிக். நான்

வெட்டியாகப் படுக்கையில் கிடப்பதற்கு இது நேரமல்ல'' என்று மன்றுடினுன் அவன்.

''நீயே சொல்லு, ஜாரிக், நீயே சொல்லு இவனுக்கு. வேலைக்குப் போக வேண்டுமென்று துடியாய்த் துடிக்கிருன், பார். போகக் கூடாத இடத்திற்குப் போகாமலிருந்தால் இப்போது உடம்புக்கு ஒன்றும் வந்திராதல்லவா?''

''அம்மா!'' என்று அழாக்குறையாய் முன கிஞன் ஆமோ.

''எங்கே போனுனும்?'' என்று வெப்ப மானியைப் பார்த்தவாறே இயந்திரம் போலக் கேட்டாள் ஜாரிக். ''ஆ, அப்படித்தான் நினைத் தேன். சுமார் நாற்பது டிகிரி'' என்று தொடர்ந்து கூறிஞள்.

''உன்னிடம் சொல்லாமலென்ன? அவான்லூ விற்குப் போயிருந்தான். அநேகமாக ஒவ்வோர் இரவும் அங்கே சவாரி. அதன் பலன் தான் உடம் பைக் கிடத்திவிட்டது'' என்ருள் ஆமோவின் தாய்.

நோயாளியை மல்லாந்து படுக்கச் செய்து, அவனது வயிற்றை அழுத்திப் பார்த்தாள் ஜாரிக். உண்டையாக வீங்கியிருந்த மண்ணீரல் அவள் விரல்களுக்குத் தட்டுப்பட்டது. அப்படியா சேதி! அதனுல்தான் கிழவி அவான்லூவைப் பற்றிச் சொன்னுளோ!

''மலேரியா'' என்ருள் ஜாரிக்.

''நானும் அப்படித்தான் சொன்னேன்'' என்று கூடப்பாடினுள் ஆமோவின் தாய். வெளியே முற்றத்தில் ஜாரிக்குக்குக் கைகளைக் கழுவ நீர் ஊற்றுகையில் அவள் தன் மகனுக்குச் சப்பைக்கட்டுக் கட்டுவதுபோல, ''அவனுடைய காதலி அவான்லூரவில் இருக்கிருள். இலையுதிர் காலத்தில் திருமணம்...'' என்ருள்.

இந்த முற்றத்திற்குக் கீழ் செங்குத்தான சரிவு. ஐரேவ்ஷான் கிராமம் மலைமேல் எவ்வளவு உயரத்தில் இருந்தது என்பதை இங்கு நின்று காண முடிந்தது. பொங்கும் அலைகள் போல நெடுந்தொலை சென்ற மலைகள் மேலும் மேலும் அதிகச் செங்குத்தாகிக் கொண்டே போய், தொடுவானத்தை அடைந்ததும் வானுற வோங்கிய மலைத் தொடர்களாக நிமிர்ந்து விசாலமான பள்ளத்தாக்கை அடைத்துக் கொண்டு நின்றன. கீழே, மலைச் சரிவின் அடியில் வளைந்து வளைந்து சென்று அவான்லூவுக்குப் பாய்ந்தோடியது ஒரு சிற்ருறு. இந்தச் சிற்ருறுதான் ஆமோவின் நோய்க்குக் காரணம், ஜாரிக்கின் முதன்மையான கவலை. இளவேனில் காலத்திலும் கோடையிலும் மலைச் சிகரங்களில் பனி உருகும் போது ஆற்றில் வெள்ளம் கரைபுரண்டு ஓடும். கரைக்கு வெளியே ததும்பிய நீர் சிறு சதுப்பு நிலமாகத் தேங்கி நிற்கும். இதை எவரும் கவனிக்கவில்லை. அவான்லூரவிலும்

ஜரேவ்ஷானிலும் சிலர் மலேரியா நோயுற்ற பின்பு தான் இதன் மீது ஜனங்களின் நாட்டம் விழுந்தது.

ஆர்மீனியக் குடியரசு முழுவதிலும் மலேரியாக் கொசுக்களின் உறைவிடங்கள் வெகு காலத்துக்கு முன்பே அடியோடு அழிக்கப்பட்டு விட்ட படியால் இப்போது இந்த நோய் காண்பதே அரிதாகி விட்டிருந்தது. எனவே அவான்லூவிலும் ஜரேவ்ஷானிலும் மலேரியா தோன்றியது அவ்வூராருக்கு மிகுதியும் வருத்தமளித்தது.

ஜாரிக்கின் முயற்சியாலேயே ஒரு விசாரணைக் குழு இந்த இடத்தை வந்து பார்த்து, ''சதுப்பு நிலத்தைத் தூர்க்கவேண்டும்'' என்று உத்தரவிட்டது. இதைப் பற்றி ஜாரிக்குக்குக் கொஞ்சம் பெருமைதான்.

சதுப்பு நிலம் பெரிதல்ல. மலேரியாக் கொசுக்களின் லார்வாக்களைக் கொல்வதற்கான மருந்து அதன்மீது தெளிக்கப்பட்டது. சதுப்பு நிலத்தின் நீரை வெளியேற்றி அதைத் தூர்க்கும் வேலை அவான்லூ, ஜரேவ்ஷான் கூட்டுப் பண்ணைக்காரர்களுக்குக் கொடுக்கப்பட்டது.

''கொல்லி மருந்து சரியாகத் தெளிக்கப் படவில்லை போலும். அவான்லூவில் இருப்பதைவிட ஜரேவ்ஷானில் அதிகம் பேருக்கு மலேரியா காண்பதேனோ தெரியவில்லையே!

அவான்லூரவைச் சேர்ந்த இடத்தில் அவான்லூ வின் அருகாமையில் இருக்கிறது சதுப்பு நிலம். ஆனால் அவான்லூரவாசிகளில் அபூர்வமாகத் தான் யாருக்காவது மலேரியா கண்டிருக்கிறது. ஊருக்குப் புதிதாக வருபவர்களும் ஐரேவ் ஷானிலிருந்து பள்ளத்தாக்கிற்கு இறங்கிச் சென்றவர்களும் தான் நோய்ப்பட்டிருக்கிறார் கள். பக்ராத் ஸெர்கேயெவிச்சிடம் இதைப் பற்றிக் கட்டாயமாகக் கேட்க வேண்டும்.'' முனகிக் கொண்டிருந்த ஆமோவை நோக்கிய வாறே ஜாரிக் வருத்தத்துடன் இப்படி எண்ண மிட்டாள்.

சதுப்பு நிலந் தூர்க்கும் வேலையோ அன்று நடக்கப் போவதில்லை. ஆகவே, நோய்களைப் பற்றித் தான் சேகரித்துள்ள புதிய விவரக் குறிப்புகளை எடுத்துக் கொண்டு அவான்லூ சென்று பக்ராத் ஸெர்கேயெவிச்சைக் கண்டு வந்தால் நன்றாயிருக்கும் என நினைத்தாள் ஜாரிக்.

மக்களின் மதிப்பைப் பெறுவது எப்படி என்று அறிந்தவர் பக்ராத் ஸெர்கேயெவிச் தான்! ஜாரிக்கைப்போல இரவோ, பகலோ, எப்பொழுது வேண்டுமானாலும் நோயாளிகளைப் பார்க்கப் போவதே கிடையாது அவர். மிக மிக நெருக்கடியான நோயாயிருந்தால் ஒரு கால் போவார். இல்லாவிட்டால் வேலை நேரத்

துக்குப் பின் அவரை வெளியே கிளப்ப முடியாது. ''நான் விஞ்ஞான ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறேன். எனக்கு வேண்டியது அமைதி'' என்று அவர் கருராகக் கூறிவிட்டார். அவர் பேச்சுக்கு மறு பேச்சே கிடையாது. எல்லோருக்குமே, கூட்டுப்பண்ணைத் தலைவருக்குக் கூட, பக்ராத் ஸெர்கேயெவிச் என்ருல் அவ்வளவு அச்சமும் மதிப்பும்.

''நமது டாக்டர் இருக்கிருரே, பேராசிரியர்களைவிட அறிவாளியாக்கும்'' என்று கூட்டுப்பண்ணைக்காரர்கள் அவரைப் பற்றிச் சொல்லிக் கொள்வார்கள். தன்னைவிட அவர் அறிவில் மேம்பட்டவர் என்பதை ஜாரிக் எப்போதுமே ஒப்புக்கொண்டு வந்தாள். இதனுல் ஜாரிக்கின் சுயமதிப்பு அடிக்கடி புண்பட்ட தென்ருலும் இவ்வளவு அறிவும் அனுபவமும் உள்ள நிபுணர் ஒருவர் அருகாமையிலிருந்தது நல்லது தானே.

ஜரேவ்ஷான் கூட்டுப்பண்ணைத் தலைவரின் மாமியார் நீண்ட காலமாகக் கீல்வாதத்தால் துன்பப்படுபவள். ஒரு நாள் அவள், ''நான் அவான்லூாவுக்குப் போகிறேன்! டாக்டர் பக்ராத் களிம்பு தருவார். அது ரொம்ப இதமாயிருக்கிறது'' என்று அறிவித்தாள்.

ஜாரிக்குக்குச் சுள்ளென்று உறைத்தது. ''ஏன், நானே இந்தக் களிம்புக்குச் சீட்டெழுதித்

தருகிறேனே. டாக்டர் பக்ராத் உன்னைப் பார்க்க மாட்டார். அவருக்கென்ன தலைப் பொறுப்பு உன்னைப் பார்க்கவேண்டுமென்று?'' எனக் கடுப்புடன் கூறினள்.

கிழவி தந்திரமாகச் சிரித்துக்கொண்டே, ''கட்டாயம் பார்ப்பார். அதற்கெல்லாம் வழி தெரிந்து வைத்திருக்கிறேன். முதலில் அவருடைய தாயாரைப் போய்ப் பார்ப்பேன். தகுந்த மதிப்பு, மரியாதை என்றால் அவளுக்குப் பிடிக்கும்'' என்றாள். இப்படிச் சொல்லி வரும் போதே அவள் ஜாரிக்கின் முகத்தில் தென்பட்ட வேதனையைக் கண்டு, அவளைத் தேற்றுவதற்காக, ''கோபித்துக்கொள்ளாதே. நீயும் நன்றாகத்தான் மருந்து கொடுக்கிறாய்'' என்று கூறினள்.

ஜாரிக் அடிக்கடி பக்ராத் ஸெர்கேயெவிச்சிடம் யோசனை கேட்க வேண்டியிருந்தது. எனினும் இம்மாதிரிப் பேச்சுக்களைக் கேட்கும் போது அவளுக்கு ஒரே எரிச்சலாயிருக்கும்.

''சக ஊழியரே, உங்கள் வட்டாரத்தில் ஏற்படும் தொற்று நோய்களைப்பற்றி விவரமான குறிப்புகள் எழுதி வைத்துக்கொண்டீர்களானால் எனக்கு மிகுந்த உதவி செய்தவராவீர்கள்'' என்று பக்ராத் ஸெர்கேயெவிச் அறிமுகமான முதல் நாளன்றே ஜாரிக்கைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

அதற்குப்பின் ஓர் ஆண்டுக்கு மேல் கழிந்து விட்டது. இப்போது நெடுநாட்களாகவே பக்ராத் ஸெர்கேயெவிச் ஜாரிக்கைப் பெயர் சொல்லி நீ நானென்று அழைத்துவந்தார். தான் குண்டு குண்டாகத் தெளிவாக எழுதியிருந்த குறிப்புக் களைத் தவறாமல் அவரிடம் கொண்டு கொடுத்து வந்தாள் ஜாரிக். விஞ்ஞான ஆராய்ச்சியில் தானும் ஒரு சிறிதாவது பங்கு கொள்வதில் அவளுக்கு ஆனந்தம்.

டிஸ்பென்சரிக்குத் திரும்பியதும் ஜாரிக் கஞ்சிப் பசையால் பளபளவென்றிருந்த வெள் ளைக் கோட்டைக் கழற்றி வைத்தாள். அவள் கல்லூரிப் படிப்பை முடித்து எவ்வளவோ நாட்களாகிவிட்டன. இருந்த போதிலும் இப் போது கூட அந்தக் கோட்டைப் பார்க்கும் போது ஜாரிக்குக்கு உள்ளாரப் பெருமை பொங்கும். லேசான கோட்டா அது! மருத்துவக் கல்லூரி மாணவர்கள் முதுகிலும் மணிக்கட்டு களிலும் நாடாவால் முடிந்துகொள்ளுவார் களே, அதல்ல இது. டாக்டர்கள் மட்டுமே அணியும், பெரிய சிப்பிப் பொத்தான்களும், பிரம்மாண்டமான பைகளும் கொண்ட, விசேஷ மான கோட்டு.

அந்த நேரத்தில் கிராமத் தெருக்கள் வெறிச் சோடிக் கிடந்தன. கிழவிகள் மட்டுமே

மரத் தாழ்வாரங்களில் அமர்ந்து கோதுமை நோம்பிக்கொண்டோ கம்பளி நூற்றுக்கொண்டோ இருந்தனர்.

புழுக்கமும் அமைதியும் நிறைந்த அவ் வேளையில் ஜாரிக்கின் பெண்குழந்தை காரீன்கா மட்டும் ஒரே உற்சாகமும் துறுதுறுப்புமாகக் காணப்பட்டாள். வீட்டு வாயிற் கதவுக்கு வெளியே ஒரு பாய்ச்சலாகப் பாய்ந்து, கைகளை அகல விரித்துக்கொண்டு, கலகலவென்ற சிரிப்புடன் தாயை நோக்கி ஓடினாள் அச்சிறுமி.

"மறுபடி எங்கும் போக மாட்டாயே, மாட்டாயல்லவா?"— எப்போதும் போலவே இன்றும் குழந்தை கேட்ட முதல் கேள்வி இது தான்.

ஜாரிக் விரைவாக முன்வந்து குழந்தையின் கட்டுமஸ்தான சிறு உடலை வாரி அணைத்துக் கொண்டாள்.

"நீ ஏன் குழந்தைப் பள்ளியை விட்டு வந்துவிட்டாய்?"

தாய் இப்படிக் கேட்டதும் காரீன்கா திறுதிறுவென விழித்து, "அங்கே எல்லாரும் தூங்குகிறார்கள். எனக்கோ தூங்குவதென்றாலே பிடிக்கவில்லை" என்று மெல்லென மொழிந்தாள்.

"நீ ஓடி வந்துவிட்டாய்! அப்படித்தானே? நல்லது, நான் உன்னை பக்ராத் மாமா

வீட்டிற்கு அழைத்துப் போகப் போவதில்லை. அழைத்துப் போவதென்று தான் இருந்தேன். இப்போது மாட்டேன், போ'' என்று கடிந்து கொண்டாள் ஜாரிக்.

''அம்மா, நீ பொய்க்காகவாவது சொல்லுகிறாய்... விளையாட்டுக்குத்தானே சொல்லுகிறாய்? என்னைக் கூட்டிக்கொண்டு போவாய் அல்லவா? சொல்லு, அம்மா! நானும் உன்னோடு வருவேன். இல்லையா?''

ஆவல் மிகுதியினால் காரீன்காவின் உடம்பு நடுங்கியது. அழுதுவிடுவாள் போலிருந்தது அவள் தோற்றம்.

''சாயங்காலம் வரை நீ எப்படி நடந்து கொள்கிறாய் என்பதைப் பொறுத்திருக்கிறது...'' என்று பட்டும் படாமலும் பதில் சொன்னாள் ஜாரிக். தன்னுடைய இளகிய சுபாவத்தின் காரணமாக அவளுக்குத் தன்மீதே கோபங் கோபமாய் வந்தது.

முன் முற்றத்தில் மரக் கூரையின் கீழ் உட்கார்ந்து லவாஷ் எனப்படும் நீளச் சப்பாத்திகள் தயாரித்துக் கொண்டிருந்தாள் ஜாரிக்கின் மாமியார். பிசைந்த மாவுண்டையைச் சாமர்த்தியமாகக் கைகளால் தட்டிச் சில விநாடிகளில் நீண்ட சப்பாத்தி செய்து, குழியடுப்பின் செஞ் சூடான சுவரில் சளப்பென்று அப்புவாள். இரண்டு-மூன்று நிமிடங்களில் முனை வளைந்த

கம்பியை அடுப்பினுள் விட்டு முறுமுறென்று ரோஜா நிறமாகச் சுட்ட லவாஷை வெளியில் எடுப்பாள். புதிதாகச் சுட்ட, மணங்கமழும் லவாஷ்களை ஆறுவதற்காக அகல மேஜை மேல் வைப்பாள், இல்லாவிட்டால் வராந்தாவின் மர அழியில் தொங்கவிடுவாள். ஜாரிக்கின் மாமியார் அடுப்புச் சூட்டினுல் சிவந்த கண்களை நிமிர்த்தி ஜாரிக்கைப் பார்த்தவள், முன் முற்றத்தில் காத்துக் கொண்டிருந்த நடுவயதுப் பெண்பிள்ளையைத் தலையசைப்பால் குறித்துக் காட்டினுள். ''உனக்காக!'' என்பது அத்தலையசைப்பின் பொருள். ஜாரிக்கின் மாமியார் தந்தையின் அதிகாரத்தின் கீழ் கண்டிப்புடன் வளர்க்கப்பட்டவள் ஆகையால் அதிகம் பேசுவது கிடையாது.

ஜாரிக்கைப் பார்க்க வந்திருந்தவள் ஸோனு அத்தை என்ற மாது. தனது அகன்ற பாவாடையை முற்றத்தின் கல் தளத்தில் விசிறி போலப் பரப்பியவாறு அமர்ந்திருந்தாள். வெயில் பட்டுச் சுட்ட செங்கல் போன்று சிவப்பேறி யிருந்த அவளது முகம், ஜாரிக்கைக் கண்டதுமே கொடிய துன்பத்தைத் தோற்று

''உயிரை எடுத்துவிடுவாளே இந்தப் பெண் பிள்ளை!'' என்று எண்ணிப் பெருமூச்செறிந்தாள் ஜாரிக்.

ஜாரிக்கின் எண்ணத்திற்குப் பதிலளிப்பவள் போல, ''என்னவோ அம்மா, எனக்கு உடம்பைப் படுத்துகிறது, படுத்துகிறது, அப்படிப் படுத்துகிறது'' என்று நீட்டி முனகி ஒப்பாரியைத் தொடங்கினுள் ஸோனு அத்தை. ''வீட்டுக்காரர் சொன்னுர், 'டிசுபெஞ்சரிக்குப் போயேன்' என்று. நான் நினைத்தேன், 'நான் எதற்காக அங்கே போக வேண்டும்? டாக்டர் என்ன யாராவது வேற்ருளா? நம் ஸாக்கோவின் பெண்தானே! நம் கிக்கோரின் தம்பி பெண்சாதிதானே! நாமென்ன, அல்லாரா அயலாரா? என் பாட்டியும் கிக்கோரின் தாயாரும் ஒன்றுவிட்ட அக்காள்-தங்கைகளா இல்லையா?' அதனுலே நான் சொன்னேன் வீட்டுக்காரரிடம், 'டிசுபெஞ்சரிக்குப் போ என்று நன்ருய்ச் சொன்னீர்களே! அங்கே எல்லாம் போனேனே, ஜாரிக், பாவம், குறைப்பட்டுக்கொள்வாள்' என்று. ஆயிற்ரு. இதோ வந்திருக்கிறேன், பார்த்துக் கொள்!''

ஸோனு அத்தை தன் வீடு தேடி வந்திருப்பதைக் குறித்து ஜாரிக் பெருமைப்பட வேண்டும் என்பது போலிருந்தது அவள் சொன்ன மாதிரி.

''இவளுக்கு இரத்த அழுத்தம் அதிகமாயிருக்க வேண்டும்.'' — இவ்வாறு எண்ணினுள் ஸோனு அத்தையின் பருத்த உடலையும்

சிவப்பேறிய கன்னங்களையும் நோட்டமிட்ட ஜாரிக்.

''இராத்திரி எல்லாம் தூக்கமே வரமாட்டேன் என்கிறது. நெஞ்சைக் குத்திக் குத்தி வலிக்கிறது. முதுகிலும் வலி, கைகளிலும் வலி. ஒரே சீக்குக்காரி நான். 'அறுவடை முடியும்வரை கோழிப்பண்ணையில் வேலை செய்யேன்' என்கிறார் தலைவர். எனக்கு என்னமா அம்மா முடியும்? நானோ ஒரே சீக்குக்காரி!'' இப்படி ஸோனு அத்தை நொண நொணத்தாள்.

ஜாரிக்கின் மாமியார் மாவைக் கைகளால் அடையாகத் தட்டியவாறே ஸோனு அத்தையை உற்றுப்பார்த்துவிட்டு, ஜாரிக் வேலையிலிருந்து திரும்பியதும் வழக்கமாகக் கேட்பது போலவே, ''பசியாயிருக்கிறதா?'' என்று கேட்டாள்.

அந்தப் பார்வையிலிருந்தும் அவள் ஸோனு அத்தையின் பேச்சில் குறுக்கிட்டதிலிருந்தும் இந்த உறவுகாரியை மாமியாருக்குப் பிடிக்கவில்லை என்று ஜாரிக் புரிந்துகொண்டாள்.

''எப்படியும் நீங்கள் டிஸ்பென்சரிக்கு வந்துதான் ஆகவேண்டும். என்னுடைய கருவிகளும் மருந்தும் அங்கேதான் இருக்கின்றன'' என்றாள் ஜாரிக்.

''இப்போதைக்கு இரண்டு வரி எழுதிக் கொடேன், இவளுக்கு உடம்பு சரியில்லை என்று...'' என ஆரம்பித்தாள் ஸோனு அத்தை.

அவளை எப்படிச் சமாளிப்பதென்று ்
குள் ஜாரிக் அறிந்துகொண்டாள்.

''ஊஹூம். அது கூடவே கூடாது. வேளை உங்களுக்குக் கடுமையான நோய் கண்டிருக்கலாம். பட்டணத்தில் நிபுணர் ஒருவரிடம் உங்களை அனுப்ப வேண்டி வரலாம்'' என்று சமத்காரமாகச் சொன்னாள்.

மிகுந்த சிரமத்துடன் எழுந்து, பாவாடை ஊசலாட ஆடி அசைந்து கொண்டு வாயிற்புறம் போனாள் ஸோனா அத்தை.

''நீ சாப்பிடு. காத்திராதே. ஆர்ஷோ எப்போது வருகிறானோ, யார் கண்டது?'' என்றாள் மாமியார்.

ஜாரிக் தலையை அசைத்தாள். விதைப்பு நாட்களிலும் அறுவடைக் காலத்திலும் அவள் கணவன் வாரக் கணக்காகக் கண்ணில் படமாட்டான். இது அவளுக்குப் பழகிப் போன விஷயம். இருந்தாலும் இப்போது தன் கஷ்டங்களை எல்லாம் யாரிடமாவது வாய்விட்டுச் சொல்லி ஆற மாட்டோமா என்று ஜாரிக் ஆவல் கொண்டு துடித்தாள்.

''இந்த அறுவடை வந்தாலும் வந்தது, எல்லாவற்றையும் தலைகீழாக்கிவிட்டது. வேலையைச் சரிவரத் திட்டப்படுத்தவே இவர்களுக்கு முடியவில்லை. மற்றெல்லாக் காரியங்களும் அறுவடை முடியும்வரை அப்படி அப்படியே நிற்க

வேண்டுமாம்!'' என்று சிடுசிடுப்புடன் கூறிக் கையை வீசி ஆட்டிவிட்டு விர்ட்டென்று அறைக் குள் போய்விட்டாள்.

அன்று முன்மாலையில் கூட்டுப்பண்ணை 'த்ரோஷ்க்கி' வண்டி ஜாரிக் வீட்டுக்கு முன் வந்து நின்றது. காரீன்காவின் விளையாட்டுத் தோழர்கள் வண்டியைச் சூழ்ந்துகொண்டார் கள். தாயாருக்கு முன்னதாகப் பரபரவென்று வண்டியிலேறி வண்டிக்காரன் பக்கத்தில் உட் கார்ந்த காரீன்கா, தன் தோழர்களை வெற்றிக் குறியுடன் நோக்கினாள்.

ஐரேவ்ஷான் கிராம எல்லை கடந்ததும் பக்ராத் ஸெர்கேயெவிச் வாழ்ந்த அவான்லூ கிராமம் நன்றாகக் கண்ணுக்குப் புலப்பட்டது. பல தோட்டங்கள் செறிந்த அவ்வூர் கீழே பள்ளத்தாக்கில் பெரிய கறுப்பு மறு போலத் துலங்கியது. அகன்ற சமதளமான பாதையில் குதிரைகள் த்ரோஷ்க்கியை அனாயாசமாக இழுத்துச் சென்றன. வெக்கை தணிந்து வானம் தெளிந்துவிட்டது. புழுதி அடங்கிவிட்டதால் காற்று தூய்மையுடன் விளங்கியது. ஆற் றின் புறமிருந்து குளுகுளுவென்று இளந்தென் றல் வீசியது. ஆற்றின் இரு கரைகளிலும் தளதளவென்று அடர்ந்திருந்த பசிய கோரைப் புதர்கள், சதுப்பு நிலப் பகுதிகளைத் துல்லிய மாக வரையறுத்துக் காட்டின. ஜாரிக் கீழே

பார்த்தாள். அதோ, ஓரத்தில் கூட்டுப்பண்ணைக்காரர்கள் செய்து முடித்திருந்த வேலையின் அடையாளங்கள் தென்பட்டன. இங்கிருந்து பார்ப்பதற்கு வடிகால்கள் நூலிழைகள் போல நுண்ணியவையாகத் தோன்றின. அடேயப்பா! வேலை எவ்வளவு கொஞ்சமாக நடந்திருக்கிறது!

மெல்ல மெல்ல வளைந்து வளைந்து சரிந்து சென்ற பாதை வழியே போய்க் குதிரைகள் கணவாய்க்கு உள்ளே புகுந்தன. தூரம் என்னவோ பதினைந்து மைல்தான் என்றாலும் மலை மேலிருந்து பள்ளத்தாக்குக்கு வந்திருக்கிறோம் என்று துலக்கமாகத் தெரிந்தது. ஈரப் பசையற்ற தூய மலைக்காற்றை நெட்டித் தள்ளிக் கொண்டு நசுநசுப்பான நெடிக்காற்று அவர்களை நோக்கிப் பாய்வது போலத் தோன்றியது. குதிரைகள் மேகலை போன்றமைந்த சுற்றுச் சோலைகளையும் வரிசை வரிசையாக இருந்த திராட்சைத் தோட்டங்களையும் கடந்து கிராமத்திற்குள் சென்றன.

இந்த இரண்டு ஊர்களுக்குமிடையே இருந்த வேறுபாடு எவ்வளவு மிகுதியானது என்று எண்ணி ஜாரிக் எப்போதும் வியப்புறுவாள். செட்டாக, அளவறுத்துத் தீட்டிய மஞ்சள் வண்ணமும் பழுப்பு நிறமுமாகப் பொலிந்தது ஜரேவ்ஷான். அங்கே பார்த்த

இடமெல்லாம் களிமண்ணோ, மணலோ, கோது மையோதான் தென்படும். அவான்லூ பச்சைப் பசேலென்று காட்சி யளித்தது. பிஷ்த்தா மரங்களின் மங்கிய கரு வெண்ணிறம், இளந் திராட்சைக் கொடிகளின் மென்மையான மரகத நிறம், நுரை பொங்குவது போல உச்சியில் குடை கவிந்திருக்கும் கொட்டை மரங்களின் கரும்பச்சை, இவற்றிற்கிடையே பசுமையில் இன்னும் எத்தனை வண்ண வேறுபாடுகள் முடியுமோ அத்தனையும் அங்கே காணலாம். ஜரேவ்ஷான் ஈரமற்ற குளிர்ச்சி வீசியது. கலகலவென்று பண் மிழற்றும் ஓடைகளும் வாய்க்கால்களும் மிகுந்த அவான்லூவோ ஈர ஆவிக்காற்றை வெளிவிட்டது. பழக்க வழக் கங்களிலும் வீடுகளில் புழங்கும் பாத்திரம் பண்டங்களிலும் கூட இரண்டு ஊர்களுக்கு மிடையே வேறுபாடு காணப்பட்டது. ஜரேவ் ஷானில் புழங்கியவை தட்டையான, அகன்ற பாத்திரங்கள்: ஸாலி, பெரிய பின்னல் கூடை கள், தானியத்தை உலர்த்தவும், உமி நீக்க வும், நோம்பவும் உதவும் சுளகுகள், வட்டத் தட்டுகள் முதலியன இவற்றில் சில. அவான்லூ வில் கராஸி எனப்படும் பெரிய மண் குதிர் கள், அழகிய குறுங்கழுத்துள்ள கரகங்கள், சாராயம், திராட்சை மது, மல்பெரி மது ஆகிய வை நிரப்புவதற்கான, வைக்கோல் பின்னல்

வளைந்த பாட்டில்கள் முதலியன புழங்கி வந்தன. வாழ்க்கையின் லயமே இரண்டிடங்களிலும் வெவ்வேருயிருந்தது. மலைமேல் அறுவடை நடந்து கொண்டிருந்ததால் ஐரேவ்ஷான் மக்கள் எல்லோரும் மும்முரமாக வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். பள்ளத்தாக்கிலிருந்த அவான்லூவிலோ ஜனங்கள் ஓட்டசாட்டமற்ற நிதான வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்தனர். அவான்லூவில் கோதுமை வயல்கள் பெரியவை அல்ல. தாழ்நிலமாதலால் கதிர் முன்னதாக முற்றி அறுவடை வெகு நாட்களுக்கு முன்பே முடிந்துவிட்டது. அவான்லூவின் முக்கிய விளைபொருள் முந்திரிப்பழங்கள். திராட்சைக் கொடிகளிலோ இப்போதுதான் காய்பிடித்திருந்தது. கனத்த பசுமணிக் குலைகள் தொங்கிக் கொண்டிருந்தன.

''டிஸ்பென்சரி'' என்று எழுதப்பட்ட அடையாளப் பலகை தொங்கிய தூய வெள்ளைக் கட்டிடத்தின் வாயிலில் ஜாரிக்கையும் அவளுடைய மகளையும் எதிர்கொண்டார் பக்ராத் ஸெர்கேயெவிச்.

''காரீன்கா, ஓடு அம்மாவிடம்!'' என்று உத்தரவிட்டுவிட்டு அவர், ''இன்று ஒரு நோயாளியைப் பார்வையிட்டேன். ஒருகால் நொய்யம்மையாயிருக்கலாம்'' என்று ஜாரிக்கிடம் சொன்னுர்.

காரீன்கா ஒரே மகிழ்வுடன் தோட்டத்தின் பின்பக்கமாக, பழக்கமான வீட்டை நோக்கி விரைந்தோடினுள். இளமை ததும்பும் கரு விழி யளான பருத்த கிழவி ஒருத்தி தன் வரவை எதிர்நோக்கிப் புன்னகையுடன் வீட்டு வாயி லில் நின்றிருப்பாள் என்பது குழந்தைக்குத் தெரியும்.

பக்ராத் ஸெர்கேயெவிச்சின் கண்களும் தாயின் கண்களே அச்சு. சிறிதளவு உப்பியவை, உயிரோட்டம் ஒளிர்பவை. உலகத்தை அவை மகிழ்ச்சியுடனும் ஓரளவு தந்திரமாகவும் பார்த்து, ''நீ ஒன்றும் சொல்லவே வேண்டாம். எல்லாம் முன்னதாகவே தெரியும் எனக்கு'' என்று கூறுவன போலத் தோன்றின.

தன்மீதும் தன் திறமைகளிலும் கலக்க மற்ற இத்தகைய நம்பிக்கைதான் ஜாரிக்குக் குக் கிடையாது. டாக்டருக்கோ இந்த குணம் இன்றியமையாதது! ''எந்த மருத்துவனுவது, தனது மனக்கலக்கத்தையோ தயக்கத்தையோ நொடிப் பொழுதுக்குக் கூட நோயாளி கண்டு கொள்வதற்கு இடம் கொடுத்தானே, அவன் கால் காசு பெறமாட்டான். நோயாளிக்கு மருத்துவன் மீதிருந்த நம்பிக்கை போய்விடும். அப்புறம் என்ன மருந்துச் சீட்டு எழுதிக் கொடுத்தாலும் பயன்படாது. மருத்துவன் ஓரளவு நடிகனுகவும் இருக்க வேண்டும். மருத்து

வர்களாகிய நமது ஆயுதங்களில் ஒன்று மிடுக்கு. ஆமாம்'' என்று பக்ராத் ஸெர்கேயெவிச் ஒரு முறை அவளிடம் சொல்லியிருந்தார்.

அவருக்கோ தோற்றத்திலேயே கம்பீரம். மிடுக்கைப் பற்றிப் பேசுவது அவருக்குச் சரி தான். ஜாரிக் அதற்கு எங்கே போவாள்? வேலை நியமனமானதும் மாவட்டச் சுகாதார இலாக்காவிற்கு வந்த ஜாரிக்கிடம் அங்கிருந் தவர்கள், ''இந்தா தங்கச்சி, உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டது அவளுக்கு ஒருகாலும் மறக்காது.

பக்ராத் ஸெர்கேயெவிச்சின் டிஸ்பென்சரி யில் எப்போதும் கச்சிதமான ஒழுங்கு நிலவும். பளிச்சென்று துப்புரவான அறைகள். வேண்டிய சாமான்கள் எல்லாம் கைக்கு எட்டினாற் போல அதனதன் இடத்தில். இந்த ஒழுங்கும் வசதியும் தனது ஜரேவ்ஷான் டிஸ்பென்சரி யில் ஏற்படுத்துவதற்கு ஜாரிக் எவ்வளவு முயன் றும் முடியவில்லை. அவான்லூவுடன் ஒப்பிடும் போது ஜரேவ்ஷான் மிகச் சிறிய கிராமம் தான்; அவான்லூ டிஸ்பென்சரியில் மூன்று அறை கள். மருந்துக் கடையும் ஆஸ்பத்திரியும் வேறே. ஜரேவ்ஷானில் இத்தகைய வசதிகள் கிடை யாது. இதெல்லாம் உண்மையே. இருந்தாலும் இப்படிச் சொல்லிப் பொறுப்பைத் தட்டிக் கழிக்க முடியுமா?

''டிஸ்பென்சரியில் கண்ணை மூடிக்கொண்டு வேலை செய்ய முடிய வேண்டும். ஒவ்வொரு சாமானும் அதனதன் இடத்தில் இருக்க வேண்டும்'' என்று பக்ராத் ஸெர்கேயெவிச் அவளிடம் சொல்லுவார்.

இப்படிச் செய்வதற்கு ஜாரிக் எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. டிஸ்பென்சரி முழுவதையும் தூசி துலக்கித் துப்புரவு செய்வாள். ஆனால் நாள்தோறும் ஒருசீராக ஒழுங்கை நிலைநாட்டுவதற்கு வேண்டிய பொறுமையோ நேரமோ அவளிடம் இல்லை. ''கண்ணை மூடிக்கொண்டு'' வேலை செய்வதாவது ஒன்றுவது! சில நாட்களுக்கு முன்புதான்—சொல்லவே வெட்கமாயிருக்கிறது! — பொடாசியம் மாங்கனேட் சீசாவைத் தேடிக் கண்டுபிடிப்பதற்கு, அதிலும் நோயாளியின் கண்ணெதிரே, அவளுக்கு ஐந்து நிமிடங்கள் பிடித்தன.

ஜாரிக் நீண்ட பெருமூச்சு விட்டு, பளபள வென்று வெள்ளைச் சாயம் பூசியிருந்த முக்காலி மீது அமர்ந்தாள்.

''இதோ ஒரு நிமிடத்தில் வேலையை முடித்து விட்டு வருகிறேன். பின்பு தேநீர் அருந்துவோம்'' என்றார் பக்ராத் ஸெர்கேயெவிச்.

''நான் உங்களுக்காக இன்னும் குறிப்புகள் கொண்டுவந்திருக்கிறேன். எங்கள் கூட்டுப் பண்ணை டிராக்டர் ஓட்டி ஆமோ இப்போது

தான் சில நாட்களுக்கு முன் பயிற்சி முடிந்து ஊர் திரும்பினன். அவ்வளவுதான், படுத்த படுக்கையாகிவிட்டான். அதுவும் அறுவடைக் காலத்தில். மறுபடியும் மலேரியா. நோயின் போக்கு கடுமை. உடல் வெப்பம் நாற்பது டிகிரி.''

''அற்புதம், அற்புதம்! இது மிக மிக முக்கியமான விவரம்!'' என்று ஆர்ப்பரித்தார் பக்ராத் ஸெர்கேயெவிச்.

''இதில் அற்புதம் என்னவாம்? அறுவடை மும்முரமாக நடந்து கொண்டிருக்கும் போது தேர்ந்த டிராக்டர் ஓட்டி படுக்கையில் கிடப்பது அற்புதமா?'' என்ருள் ஜாரிக்.

அரைகுறையாகத் திறந்திருந்த டிஸ்பென்சரிக் கதவின் பின்னே யாரோ இருமினர்கள். பின்பு கதவை மெதுவாகத் தள்ளி விரியத் திறந்தார்கள்.

''உங்களைத் தானே! இப்படி உள்ளே வாருங்கள்!'' என்று குரல் கொடுத்த பக்ராத் ஸெர்கேயெவிச், ஒரு புறமாக, ''யாரது இந்த வேளையில்?'' என உரக்கவே சொல்லிக்கொண்டார்.

முதிய பண்ணைக்காரர் ஒருவர் உள்ளே வந்தார். உயரமல்ல. சற்றே கூனிய தோள்கள். சுரசுரப்பான பழுப்புநிறத் தோல். அதன்மேல் வலைப்பின்னல் போன்ற வெளிறிய சுருக்கங்

கள். டாக்டரிடம் வரும் பொருட்டு அவர் கவனமாகத் தயாரித்துக் கொண்டிருக்கிருர் என்பது பார்த்தாலே தெரிந்தது. பளபளப்பான நீல ஸாட்டின் சட்டையும் புதிய கம்பளிச் கோட்டும் மடிப்பு விழுந்திருந்தன. அவற்றிலிருந்து பூச்சி மருந்தின் நெடி வீசியது. கிழவனுர் புன்னகையால் முகமன் தெரிவித்து, தலை தாழ்த்து வணங்கி, மேஜையருகே யிருந்த முக்காலியில் பதபாகமாக அமர்ந்து, பெரிய பழுப்புக் கைகளை முழங்கால்கள் மீது வைத்துக் கொண்டார்.

''உடம்புக் கென்ன, யெகீஷே மாமா? சொல்லு கேட்போம்'' என்று குறிப்புக் கடுதாசிமேல் பேனுவைத் தயாராகப் பிடித்த வண்ணம் கேட்டார் பக்ராத் ஸெர்கேயெவிச்.

''எனக்கு உடம்புக் கென்ன? அப்படி ஒன்றும் பிரமாதமில்லை, டாக்டர்'' என்று ஆரம்பித்தார் கிழவர். ''வீட்டுக்காரிதான் விடாமல் தொந்தரவு செய்கிருள், கேட்டாயா? அவள் சொல்லித் தான் இங்கே வந்தேன். எனக்குக் கடுமையான வலியோ ஜுரமோ, அதெல்லாம் ஒன்றும் கிடையாது. வயிறுதான் ஒரு பொருக்கு உள்ளே போனதுமே உப்புசங் கொண்டு ஒரேயடியாகக் கனக்கிறது — ஏதோ நான் முழு ஆட்டையும் விழுங்கிவிட்டதுபோல. நெஞ்சுக்கு மேலே பாருங்கல்லை வைத்தாற்

போலிருக்கிறது. தளர்வும் முன்னைவிட அதிகந் தான். வேறே ஒன்றுமில்லை.'' இப்படிச் சொல்லி நிறுத்தினுர் பெரியவர்.

இடுப்புவரை உடைகளை யெல்லாம் களை யும்படி நோயாளிக்கு உத்தரவிட்டார் பக்ராத் ஸெர்கேயெவிச். யெகீஷே மாமா தட்டித்தடவிக் கோட்டுப் பொத்தான்களைக் கழற்றிவிட்டுக் கோட்டையும் சட்டையையும் உள்ளாடையை யும் களைந்தார். பழுப்பு முகத்துக்கும் கை களுக்கும் நேர்மாருகக் கிழவனுரின் உடல் மஞ் சள் பாரித்திருந்தது. அவர் ஏதோ சொல்ல வாயைத் திறந்தார், ஆனுல் பக்ராத் ஸெர்கே யெவிச் தாட்சணியமில்லாமல் அவரை அடக்கி விட்டார்.

''இதோ பார், அப்பனே! இப்போது கம்மென்றிரு. எது வேண்டுமோ நானே கேட் டுக்கொள்கிறேன். மல்லாந்து படு'' என்ருர் அவர்.

கிழவனுர் படுத்தபின் டாக்டர் அவர் அருகே உட்கார்ந்துகொண்டு அவரது அடிவயிற் றின் மேல் கையால் அழுத்தினுர். ''இப்போது மூச்சிழு. ஆழ்ந்து, இன்னும் ஆழ்ந்து....''

யெகீஷே மாமா அவர் சொன்னபடியே செய்தார். பக்ராத் ஸெர்கேயெவிச் எழுந்து நின்று ஜாரிக்கை நோக்கிச் சைகை செய்தார்: ''நீயே பார்த்துக்கொள்'' என்று அவர் கண் கள் கூறின.

ஜாரிக் கட்டில் பக்கமாகக் குனிந்தாள். அவளுடைய விரல்கள் கிழவரின் அடிவயிற்றை நெருடின. சிறிய, கடினமான கட்டி யொன்று விரல்களுக்குத் தெளிவாகத் தட்டுப்பட்டது.

''உன் வயது என்னவென்று சொன்னாய், யெகீஷே மாமா?'' எனக் கேட்டார் பக்ராத் ஸெர்கேயெவிச்.

''அறுபதாகப் போகிறது, மகனே.''

கிழவனார் நிதானமாக, சாவகாசமாக உடையணிந்துகொண்டார்.

பக்ராத் ஸெர்கேயெவிச் அவரிடம் இன்னும் சில கேள்விகள் கேட்டார். அவற்றின் துல்லியத்தையும் தெளிவையும் ஜாரிக்கால் வியக்காமலிருக்க முடியவில்லை. ஒவ்வொரு கேள்வியும் நோயை மூடியிருந்த போர்வையைச் சிறிது சிறிதாக அகற்றி, அதை முழுவதும் துலாம்பரமாக வெளிக் காட்டியது போல இருந்தது.

''நல்லது. நான் சொல்லுகிற யோசனை இதுதான். நீ உடனே பட்டணம் போக வேண்டும், அப்பனே! அங்கே ஆஸ்பத்திரியில் உன் கட்டியைச் சத்திரம் வைத்து அகற்றிவிடுவார்கள். தெரிந்ததா?'' என்று நறுக்குத் தெறித்தாற் போலக் கூறி முடித்தார் பக்ராத் ஸெர்கேயெவிச்.

யெகீஷே மாமா கடகடவென்று சிரித்து, ''இதென்ன டாக்டர், நீ ஒன்று! இப்போது தான் நான் நன்ருக நடமாடிக் கொண்டிருக் கிறேனே. எல்லாம் எப்படியாவது தானே குணமாகிவிடும் பார்'' என்ருர்.

'' 'எப்படியாவது தானே குணமாகப்' போவதில்லை இது. சத்திரம் வைத்தாக வேண் டும். சொல்லிவிட்டேன்'' என்று கூறியவாறு துவாலையில் கை துடைத்துக்கொண்டார் பக் ராத் ஸெர்கேயெவிச். அவர் குரலில் ஆழ்ந்த சிந்தனை தொனித்தது.

கிழவஞர் உடனே எச்சரிக்கையாகி விட் டார். அவர் கண்களில் பளிச்சிட்ட புன்னகை மறைந்து, கடுமையும் பிடிவாதமும் தென்பட் டன.

''சத்திர சிகிச்சைக்கு நான் ஒருப்படவே மாட்டேன்'' என்று முறைப்புடன் கூறிஞர் அவர்.

''பார்த்துக்கொள், யெகீஷே மாமா. ஒரு மாதம் சென்றபின் என்னிடம் வந்து, 'கொஞ் சம் ஒத்தாசை பண்ணேன், டாக்டர்' என்பாய். அதற்குள் உரிய நேரம் தப்பிவிடும். ஆமாம்.''

நோய் இன்னதென்று தான் அறிந்தபடி ஜாரிக் லத்தீன் மொழியில் தெரிவித்தாள்.

''ஆமாமாம். சந்தேகத்துக்குத் துளிக்

கூட இடமே இல்லை. அதுவே தான்! அதன் ஆரம்பகால அழகுகள் எல்லாம் துலங்க!'' என்றார் பக்ராத் ஸெர்கேயெவிச்.

எவனுடைய தலைவிதியை இவ்வார்த்தைகள் ஈவிரக்க மின்றி, மாற்றவே முடியாத படி தீர்த்துக் கட்டினவோ, அவனுக்குப் புரியாத மொழியில் தாம் இருவரும் இவ்வாறு பேசிக் கொண்டது ஜாரிக்குக்குப் பெருத்த ஏக்கமா யிருந்தது.

எச்சரிக்கையும் கேள்விக்குறியும் தோன்றிய கண்களால் இரண்டு மருத்துவர்களையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு நின்றார் யெகீஷே மாமா.

''ஏதாவது மருந்து கொடுப்பதானால் கொடு. ஆஸ்பத்திரிக்கு நான் போகவே மாட்டேன்!'' என்று திடீரெனத் தீர்மானமாகக் கூறினார் கிழவர்.

வேறு வழியில்லை என்ற ஜாடையில் தோள்களைக் குலுக்கினார் பக்ராத் ஸெர்கேயெவிச். ஏதோ சில மருந்துத் துளிகள் இருந்த சீசா ஒன்றை எடுத்து யெகீஷே மாமாவிடம் கொடுத்தார். அந்தப் பயனற்ற மருந்தை ஜாக்கிரதையுடன் கையில் பிடித்த வண்ணம் கிழவனார் வெளியேறினார்.

''அவ்வளவு தான். வா தேநீர் பருகப்

போவோம்'' என்று கடிகாரத்தைப் பார்த்த வாறு கூறினார் டாக்டர். மேஜை மேலிருந்த காகிதங்களை யெல்லாம் கச்சிதமாக அடுக்கி எடுத்தார். யெகீஷே மாமா பற்றிய குறிப்புக் கடுதாசியை ஒரு முறை படித்துப் பார்த்து விட்டு, ''சத்திர சிகிச்சை செய்துகொள்ள மறுத்து விட்டான்'' என நோய் விவரத்தின் அடியில் எழுதினார். பின்பு வெண் கோட்டின் பொத்தான்களைக் கழற்றத் தொடங்கினார்.

''அவர் விஷயமாக இனி என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று கவலையுடன் வினவினாள் ஜாரிக்.

ஒன்றுமே தலைகால் புரியாதவர் போல அவள் பக்கம் திரும்பி, ''யார் விஷயமாக?'' என்று கேட்டார் பக்ராத் ஸெர்கேயெவிச்.

ஜாரிக் குறிப்புக் கடுதாசியைச் சுட்டினாள்.

''அவன் விஷயத்தில் நான் செய்வதற்கு என்ன இருக்கிறது? அவனென்ன குழந்தையா? ஆப்பரேஷன் செய்துகொண்டால் அவன் வாழ் நாள் இன்னும் மூன்று வருஷத்திற்காவது கட்டாயமாக நீடிக்கும்தான். சில நோயாளி கள் விஷயத்தில் ஆப்பரேஷன் நிலையான பயன் அளித்ததையும் கண்டிருக்கிறேன்.''

''ஆப்பரேஷன் செய்யாவிட்டால் அவர் நிச்சயம் இறந்து போவார்....''

''ஆமாம். இன்னும் மூன்று-நான்கு மாதங்கள் தான் அவனுக்குக் கெடு. அதிகமாய்ப் போனால் அரை வருடம் நீடிக்கலாம். கிழவன் வலுவான ஆளாயிற்றே.''

''அப்படியானால் ஆப்பரேஷன் செய்து கொள்ளத்தான் வேண்டுமென்று கட்டாயப் படுத்த வேண்டும் போலிருக்கிறது!''

''அதற்காக அவனைப் பலவந்தமாக இழுத்துக் கொண்டுபோய் ஆப்பரேஷன் மேஜைமேல் கிடத்தச் சொல்கிறாயா? அப்படிச் செய்வதற்கு எனக்குத் துளிக்கூட விருப்பமில்லை, உரிமையுமில்லை. பேச்சோடு பேச்சாக ஒன்று சொல்லி விடுகிறேன். எனக்கு....''

பக்ராத் ஸெர்கேயெவிச் படபடப்பாகப் பேசினார். அவருக்குக் கோபம் வந்துவிட்டதென்று தெளிவாகப் புலப்பட்டது. ஆயினும் ஜாரிக்கால் அத்துடன் விடமுடியவில்லை.

''இந்தக் கிழவரின் இடத்தில் உங்களுக்கு வேண்டிய உறவினரோ நண்பரோ இருந்தால்? அப்போது என்ன செய்வீர்களாம்?''

''ஒரு விஷயத்தை மறந்துவிடாதே, ஜாரிக். நீயும் நானும் வேலை செய்வது கிராமாந்தரத்தில். ஆப்பரேஷனுக்குப் பிறகு கிழவன் இறந்து போய்விட்டால் என்ன ஆகும் தெரியுமா? நான்தான் அவனைக் கொலைக் களத்துக்கு அனுப்பினேன் என்று ஊர் அடங்கலும் ஓல

மிடும். மருத்துவனின் நன்மதிப்பை நாம் எல்லாவற்றிலும் உயர்வாகக் கருத வேண்டும். தெரிகிறதா?'' என்று கடுமையும் கண்டிப்பும் தொனிக்கச் சிடுசிடுத்தார் பக்ராத் ஸெர்கேயெவிச்.

''என்னவோ சென்றொழிந்த நூற்றாண்டில் வாழ்பவர் போலப் பேசுகிறீர்கள், நீங்கள்'' என்று துயரந் தோய்ந்த குரலில் சொன்னாள் ஜாரிக்.

உரையாடல் ஒரு பயனுமின்றி முடிந்தது. மேலும் வாதாடுவதற்கு ஜாரிக் விரும்பவில்லை.

டிஸ்பென்சரியின் வரவேற்பறையில் கைக் குழந்தையுடன் ஒரு பெண்பிள்ளையும் சிறு கூடான கிழவி ஒருத்தியும் இன்னும் உட்கார்ந்திருந்தனர்.

''நேரமாகிவிட்டது. நீங்கள் முன்னதாகவே வந்திருக்க வேண்டும்'' என்று பக்ராத் ஸெர்கேயெவிச் அவர்களிடம் சொன்னார்.

கைக்குழந்தைக்காரி ஏதோ சொல்ல வாயெடுத்தாள். ஜாரிக் நின்றுவிட்டாள். பக்ராத் ஸெர்கேயெவிச் மட்டும் கண்களை இறுகச் சுருக்கிக்கொண்டு தலையை அசைத்தார். அவர் எதையும் காதில் போட்டுக் கொள்ளத் தயாராயில்லை என்று அந்தத் தலையசைப்பும் கண் சுருக்கும் தெளிவாக உணர்த்தின.

''ஊம், நாளைக்கு, நாளைக்கு! நானும் மனிதன் தானே! எனக்கும் ஓய்வு வேண்டும். நீங்கள் என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறீர்களோ?''

தாயின் கையிலிருந்து குழந்தையை வாங்கி, அவனுக்கு என்ன உடம்பு என்று பார்க்க வேண்டும் என்னும் இயல்பான ஆசை ஜாரிக்கின் மனத்தில் எழுந்தது. கடுமுயற்சி செய்து அதை அடக்கிக்கொண்டாள்.

இருவரும் மௌனமாக நடந்து டாக்டரின் அழகிய சிறு வீட்டை அடைந்தார்கள். அதன் சுவர்கள் மீது திராட்சைக் கொடிகள் சுருண்டு படர்ந்து மண்டியிருந்தன. ஜாரிக்குக்கு வீட்டினுள் போக வழிவிட்டவாறே பக்ராத் ஸெர்கேயெவிச், ''இவர்களுக்கு ஒரு தரம் இடம் கொடுத்தோமோ, தொலைந்தது. அப்புறம் ஒரு வினாடிகூட ஓய்வு தரமாட்டார்கள்'' என்று முணுமுணுத்தார்.

பக்ராத் ஸெர்கேயெவிச்சின் தாய் கூர்மையான அறிவும் விவகார சாமர்த்தியமும் உள்ளவள். ஜாரிக்கை அவள் தன் மகனுடைய ''சிஷ்யை'' என்று எப்போதும் அழைப்பது வழக்கம். இப்போது தன் மகனுக்கும் அவன் ''சிஷ்யை''க்கும் ஏதோ மனத்தாங்கல் என்று அவள் விரைவிலேயே கண்டுகொண்டாள். எனவே, இரு மடங்கு அன்பும் பரிவும் காட்டினாள்

பக்ராத் ஸெர்கேயெவிச்சின் மனக் கடுப்பு மறைந்து மகிழ்ச்சி திரும்ப வந்துவிட்டது. சூடான தேநீர் கிளாஸைக் கையில் பிடித்து அவ்வப்போது உறிஞ்சிக் குடித்தபடியே அறையில் குறுக்கும் நெடுக்குமாக உலவிக்கொண்டு பேசலானார்.

''உன் மனநிலைமையை நான் அறிவேன், ஜாரிக். நீ இன்னும் இளம் பெண்ணல்லவா? அதனால் தான் மன உளைச்சல் படுகிறாய். இதெல்லாம் இல்லாமலே நமது வேலை கடினமானது. உலகத்தின் துன்ப துயரங்களையெல்லாம் வேறு எதற்காகத் தலைமேல் சுமத்திக் கொள்ள வேண்டும்? நோயாளிகளுக்கு மருந்து கொடுத்துச் சிகிச்சை செய்வது உன் வேலை, புரிகிறதா? இதை நிதானமாக, அமைதியாக ஏற்றுக்கொள்ள வேண்டும். நான் உனக்கு இன்னொன்று சொல்ல விரும்பினேன். சதுப்பு நிலம் தூர்க்கும் வேலையில் தலையிட்டிருக்கிறாய். கவினுறும் கற்பனை அது. வெறும் வேலை. நமது தலையீடு இல்லாமலே சதுப்பு நிலம் தூர்க்கப்பட்டு விடும். எல்லாவற்றிற்கும் முன்னதாகவும் மேலாகவும் நீ நினைக்க வேண்டியது உன் தகுதியைப் பற்றி, தொழிலில் அதிகத் தேர்ச்சி பெறுவது பற்றி. ஒரு முறை ஒரு குழந்தை விஷயத்தில் ஏற்பட்டதே, அத்தகைய விபரீதம் மறுமுறை

நிகழாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். எப்போதும் நான் உன் அருகிலேயே இருக்க மாட்டேன் என்பதை மறந்துவிடாதே.''

ஆம். அத்தகைய வெட்கிக்கத்தக்க நிகழ்ச்சி நடந்தது உண்மையே. ஒரு குழந்தைக்குக் கண்டிருந்த சாதாரண முழைப்பை ஸார்க்கோமா எனப்படும் அபாயகரமான சதைக் கட்டி என்று ஜாரிக் தவருக எண்ணிவிட்டாள். இரவுக்கிரவே அவான்லூாவுக்கு ஓடிச் சென்று நட்ட நடு நிசியில் பக்ராத் ஸெர்கேயெவிச்சை எழுப்பினுள். அவள் பட்ட பதற்றத்தைக் கண்டு குழந்தையின் தாய் தந்தையர் விதிர்விதிர்த்துப் போய்விட்டார்கள்.

''அதைப்பற்றிப் பரவாயில்லே. அதிகப் படிப் பயிற்சி வகுப்புக்கான பாடங்களே எனக்கு அனுப்பிவைப்பதாகக் கல்லூரி அதிகாரிகள்வாக் களித்திருக்கிருர்கள். மலேரியா நோயாளிகளுக்கு மருந்து கொடுத்துக் கொடுத்து எனக்குப் போதும் போது மென்ருகிவிட்டது. நோய் விளேயும் பண்ணேயையே ஒரேயடியாக ஒழித்துக் கட்டி விட்டால் அப்புறம் ஏன் இந்தப் பாடு? இது நடக்கக் கூடிய வேலே தானே. இதை நிறைவேற்றுவது யார் பொறுப்பு? கட்டாயமாக என் பொறுப்புத் தான்!'' என்று பிடிவாதமாகக் கூறினுள் ஜாரிக்.

''உங்களுடைய பொறுப்புங்கூட'' என்று சொல்ல வாயெடுத்தவள் சொல்லாமல் விட்டு விட்டாள்.

''ரொம்ப சரி. அப்படியே வைத்துக் கொள்வோம்'' என்று பெருந்தன்மையுடன் ஒப்புக்கொண்ட பக்ராத் ஸெர்கேயெவிச், ''அது உன்னுடைய பொறுப்பு. இதுவோ — என் பொறுப்பு!'' என்று கூறித் தமது பைலைப் பெருமையுடன் தட்டினார். ஜாரிக் கொடுத்த குறிப்புக்களை அப்போதுதான் அந்த பைலுக்குள் திணித்துக் கொண்டிருந்தார்.

''ஆராய்ச்சிக் கட்டுரைக்கான விவரங்கள்'' என்று தலைப்பிடப்பட்டிருந்த அந்தப் பருத்த பைல் மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகக் காணப்பட்டது. பார்த்தாலே மதிப்பு வைக்கத் தோன்றியது. சதுப்பு நிலத்தின் ஓரத்தில் வெட்டப்பட்டிருந்த குறுகிய, அற்ப வடிகால்களை நிதானமாக நினைத்துப் பார்த்துக் கொண்டாள் ஜாரிக். அவளுடைய பொறுப்பு சரியாகவே நிறைவேறவில்லை.

வெளியே தெருவில் த்ரோஷ்க்கிச் சக்கரங்களின் கடகடப்பு கேட்டது. அரைத்தூக்கமாயிருந்த காரீன்கா திடுக்கிட்டு விழித்துக்கொண்டு தாயை அவசரப்படுத்தினாள். வாயில் வரை வந்து அவர்களை வழியனுப்பிவிட்டு டிஸ்பென்சரிக்குத் திரும்பினார் பக்ராத் ஸெர்கேயெவிச்.

வாயிலருகே கிராமவாசிகளின் கும்பல் ஒன்று கூடியிருந்தது. அவான்லூ கூட்டுப்பண்ணைத் தலைவரும் அவர்களுடன் நின்றிருந்தார். திரண்ட தோள்களும் பருத்த இடையும் உள்ள இம்மனிதர் பெரிய அலப்புவாயர்.

''வணக்கம்!'' என்று கூவினார் அவர்.

வேண்டா வெறுப்பாகத் தலையசைத்துப் பதில் வணக்கம் தெரிவித்த ஜாரிக், அவரை நெருங்கியதும் தன் போக்கில் முறைத்துக் கொண்டு போக மனமில்லாதவளாய் வண்டியை நிறுத்தச் செய்தாள்.

''ஆமாம், நீங்கள் என்ன, சதுப்பு நிலத்தைத் தூர்க்கப் போகிறீர்களா இல்லையா? மாவட்ட நிர்வாகக் கமிட்டியின் ஆணை உங்களுக்குப் பெரிதாகப் படவில்லையோ ஒருவேளை?'' என்று கேட்டாள்.

''படாமல் இருக்குமா? எப்படி இருக்க முடியும்? படத்தான் செய்கிறது'' என்று முகமெல்லாம் புன்னகை தவழக் கூறினார் தலைவர்.

''இப்போதும் கேலியாகத் தானிருக்கிறதோ, பாணை மூஞ்சி!'' எனக் கோபத்துடன் நினைத்துக்கொண்டாள் ஜாரிக்.

கூட்டுப்பண்ணைக் கம்யூனிஸ்ட் கட்சிச் செயலாளர் தலைவருக்கு அருகே நின்று கொண்டிருந்தார். இணை சேர்ந்த சிறு கண்களால்

அவர் ஜாரிக்கைப் பார்த்தாரே தவிர வாய்
ல.
கே எல்லாரும் ஒன்றுக்குள் ஒன்று
தான்'' என்று ஜாரிக் எண்ணமிட்டாள்.

ஆத்திரத்தை யெல்லாம் சிரமத்துடன் அடக்கிக் கொண்டு நிதானமாக, ''அப்புறம் வேலை எப்போது தொடங்குவதாக உத்தேசம்?'' என்று கேட்டாள்.

''அன்பு மிக்க அயலாரே, நீங்கள் தொடங்கிய அந்தக் கணமே நாங்களும் வேலைக்கு வந்துவிடுவோம். பின்தங்கவே மாட்டோம்.''

''எங்களுக்கு அறுவடை முடிந்தாகவில்லை. தவிர நிலம் உங்களது தானே?''

''நிலம் கட்டாயமாக எங்களது தான். நிலம் எங்களதில்லை என்று நாங்கள் சொல்லவில்லையே. ஐரேவ்ஷானும் அவான்லூரவும் ஒன்ருகச் சேர்ந்து வேலை செய்ய வேண்டுமென்று ஆணையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அவான்லூரக்காரர்களான நாங்கள் மட்டும் பாடுபட வேண்டுமென்பது ஏனும்? இது நியாயமில்லை. இங்கேயுள்ள ஜனங்களைக் கேட்டுப் பாருங்கள். நியாயம் எதுவென்று சொல்லுவார்கள்.''

இவ்வாறு கூறிய தலைவர், தமது கூற்றை ஆதரிக்கும்படி கூடியிருந்தவர்களை அழைப்பதுபோல அவர்கள் பக்கம் கையை வீசினுர். அவர்கள் எல்லோரும் இளிப்பதைக் கண்ட

ஜாரிக்குக்குத் தலைவர்மீது வெறுப்பு பொங்கியது.

''வேலை செய்வதற்கு நாங்கள் தயங்கவில்லை. வேலை செய்வது அவசியம். அது சரிதான். ஜரேவ்ஷான் ஆட்கள் வேலைக்கு வர வேண்டியதுதான் தாமதம், நாங்களும் வந்து விடுவோம், அதே நிமிடம்! உங்கள் வயல்களில் அறுவடை நடக்கிறதோ நடக்க வில்லையோ, எங்களுக்கு அக்கறையில்லை. நீங்கள் வேலைக்கு வாருங்கள், நாங்களும் வருகிறோம். இதுதான் நடுக்கண்ட நியாயம். என்ன நான் சொல்கிறது, டாக்டர் ஐயா?''

இவ்வாறு விளிக்கப்பட்டவர் டாக்டர் பக்ராத் ஸொர்கேயெவிச். ஜாரிக் தலையைத் திருப்பிப் பார்த்தாள். அதற்குள் அவர் வாயில் முகப்பிலிருந்து உள்ளே நழுவிவிட்டார்.

மறுநாள் காலை வெயில் தோன்று முன்பே ஜாரிக் விழித்தெழுந்தாள். நாற்புறமும் இளஞ் செவ்வொளியும் குளுமையும் திகழ்ந்தன. ஜாரிக்கும் பார்க்கிருள், வாழ்வில் ஒரு நாள் கூட மாமியாருக்கு முன்னதாகப் படுக்கைவிட்டு எழுந்திருக்க அவளால் முடியவில்லை. மாமியார் அதற்குள் காலையாகாரத்திற்கு எல்லா ஏற்பாடுகளும் நறுவிசாகச் செய்து முடித்து

விட்டாள்: வாசனைப் பூண்டுகளால் மணம் ஊட்டப்பட்டு இதமாக நெடியடித்த முறமுறப்பான பாலடையை ஜாடியிலிருந்து வெளியே எடுத்து வைத்திருந்தாள். அடுக்கிய லவாஷ் ரொட்டிகள் மீது தண்ணீர் தெளித்துப் பதப் படுத்தியிருந்தாள். புழைக்கடை ஓடையில் முகங் கை கழுவிக்கொண்டு வந்திருந்த ஆர்ஷோ— ஜாரிக்கின் கணவன்— நீண்ட பூந்துவாலையால் உடம்பு துடைத்துக் கொண்டிருந்தான்.

''இதோ காலையுண்டி அருந்தி விட்டு வெளியே போனாரானல் நாள் முழுவதும் வீடு திரும்பமாட்டார். இவருடன் பேசுவதற்கு எப் போதுதான் தருணம் வாய்க்குமோ?'' என்று எண்ணமிட்டாள் ஜாரிக்.

ஆர்ஷோ தொலைவிலிருந்தே ஜாரிக்கை நோக்கிப் புன்னகை பூத்தான். அம்மா மாத் திரம் இப்போது இங்கே இல்லாவிட்டால் மனைவியைக் கைகளால் அலாக்காகத் தூக்கி உயரே எறிந்து பிடித்திருப்பான். முதிய தாயின் முன்னிலையிலோ, மனையாளின் கையைத் தொடு வதற்குக் கூட அவனுக்குக் கூச்சமாயிருந்தது. அவள் அருகே வந்து குனிந்து, கண்ணோடு கண் ணிணை பொருந்தப் பார்த்து, ''ஜாரோ!'' எனக் கனிவுடன் அழைத்தான்.

வெறுங்கால்கள் வராந்தாவின் பலகைத் தளத்தில் தப்புத் தப்பென்று அடிக்க, தூக்கக்

கலக்கமும் கலைந்த தலைமயிருமாய்த் தளர்நடை நடந்து வந்து, ஒரு வார்த்தை பேசாமல், ஆழ்ந்த நோக்குடன் மெதுவாகத் தகப்பன் மடியிலேறி உட்கார்ந்தாள் குழந்தை காரீன் கா. குழந்தையை ஆர்வத்துடன் முத்தமிட்ட ஆர்ஷோ, மிகமிக ருசியான ரொட்டித் துண்டு களாகப் பொறுக்கி அவளுக்கு ஊட்டலானான். மேஜை மீது முழங்கைகளை ஊன்றி உட்கார்ந்த படியே ஜாரிக் முந்திய நாள் நடந்தவற்றை எல்லாம் கணவனிடம் சொல்லித் தீர்த்தாள்.

''நன்றாக வாங்கிக் கட்டிக் கொள்ளப் போகிறான் அவன், பார்த்துக்கொண்டே யிரு!'' என்றான் ஆர்ஷோ, அவான்லூ கூட்டுப்பண்ணைத் தலைவனைப் பற்றி. ''தன் கூட்டுப்பண்ணை யைப் பத்துலட்ச ரூபிள் வருமானமுள்ள கூட்டுப்பண்ணைகளின் வரிசையில் எப்படியா வது சேர்த்துவிட வேண்டும் என்பது ஒன்று தான் அந்த மனிதனுக்குக் குறி. அவனிடம் நீ பேசியதே வீண். ஏதேனும் குத்தலாகப் பேசினா னோ உன்னிடம்? ஊம்? என்ன செய்கிறேன் பார்

ஆர்ஷோவின் புருவங்கள் நெரிந்தன. கணவன் படுகோபி என்பதை அறிந்த ஜாரிக் அவனுடைய நீலச் சட்டைக் கையை வருடி னாள்.

ஆர்ஷோவின் படபடப்பு விரைவிலேயே அடங்கிவிட்டது.

''ஆ, என் அன்பே, எதற்காக நீ வருத்தப் படுகிருய்? எதற்காக மனம் உளேந்து நோகி ருய்? இதோ அறுவடை முடிந்துவிடும். ஆணே யிட்டுச் சொல்கிறேன், டிராக்டரோடு வந்து சதுப்பு நிலத்தைத் தூர்க்காவிட்டால் அப்புறம் சொல். என் வார்த்தையில் உனக்கு நம்பிக்கை இல்லேயா?''

''இல்லே. உங்களே யெல்லாம் நான் நன் ருக அறிவேன். அறுவடையை முடிப்பீர்கள், இயந்திரங்களேச் செப்பனிடத் தொடங்குவீர் கள், செப்பனிட்டு முடிந்ததும் விதைப்பில் முனேந்து விடுவீர்கள். இது மட்டுமல்ல.... இங்கே வேலே செய்வதற்கு நான் இசைந்த தே வீண். எனக்கு இங்கே எந்த விதமான அதிகாரமோ, மதிப்போ கிடையாது. எல்லாங் கிடக்க அவான்லூரவில் நான் பார்த்த நோயாளி வேறு என் மனத்தைவிட்டு அகலவே மாட்டேன் என்கிருன்....''

''அவான்லூரவுக்கென்று தான் தனியாக டாக்டர்கள் இருக்கிருர்களே. இருக்கிற தெல் லாம் போதவில்லேயா உனக்கு, அவர்கள் காரியத்தில் குறுக்கிடுகிருய்?''

''நன்ருய்த் தான் இருக்கிறது உங்கள் பேச்சு! 'ஐயோ வழிப்பறி செய்கிருர்களே

காப்பாற்றுங்களேன்!' என்று கத்திஞனும் ஒரு வன். 'இந்த வட்டாரம் என்னைச் சேர்ந்ததல்ல' என்று பதிலுக்குக் கத்திவிட்டு நடையைக் கட்டிஞனும் போலீஸ்காரன். இப்படிப் பழைய கதை ஒன்று உண்டு. அது போல அல்லவா இருக்கிறது நீங்கள் சொல்லுவது!''

''எனக்கு அதொன்றும் தெரியாது. வெளி மெக்கானிக் எவஞவது டிராக்டர் நிலையத்தில் என் தொழிற்கூடத்துக்கு வந்து இது நொட்டை அது நொள்ளை என்று தொனதொனக்க ஆரம்பித்தாளுே, அரை நொடியில் அவனை வெளியே தள்ளிவிட்டு மறுகாரியம் பார்ப்பேன். வேறிடத்தில் வேலை பார்ப்பதாக நீ சொல்லு வதிருக்கிறதே, இது வெட்டிப் பேச்சு. இனி இதைப்பற்றி ஒரு சொல் கூடக் கேட்க நான் தயாராயில்லை. வேறு எங்கே வேலை செய்ய வேண்டுமென்கிருய்? உன் வீடு இங்கே, குடும் பம் இங்கே. நன்ருய் உன்னைப் போக விட்டுவிடு வோமே! அதிகாரமும் மதிப்பும் இல்லை என் ருல் அது உன் குற்றம்தான்.''

பெட்ரோல் நாற்றம் வீசிய மேல் சட்டை யை அணிந்துகொண்டு ஆர்ஷோ குழந்தையை முத்தமிட்டான்; ஜாரிக்கின் கன்னத்தை அன் புடன் வருடிஞன்; பின்பு வெளியே போய்விட் டான். வாயிற்படியில் உட்கார்ந்து கணவன் செல்வதைப் பார்க்கலாஞள் ஜாரிக். அவ

ளுடைய மாமியார் மெல்ல அவள் அருகே வந்து நின்றுகொண்டாள். வாயே திறவாமல் அலுப்புச் சலிப்பின்றி வீட்டு வேலைகளை யெல்லாம் தன்னந் தனியாக நிர்வகித்தாள் அந்த முதியவள். குழந்தை காரீன்காவைப் பராமரித்தவளும் அவள்தான். இருந்த போதிலும் தனது வளர்ந்த குழந்தைகளிடம் அவள் சற்றுக் கூச்சப்படுவதாகவே ஜாரிக்குக்கு எப்போதும் தோன்றி வந்தது. ஆகவே இப்போது அவளது சதைப் பற்றற்ற சிறு கை தன் தலையை வருடியதை உணர்ந்து ஜாரிக்குக்குப் பெரு வியப்பு உண்டாயிற்று.

''உன் கடமை என்ன? மக்களைச் சாவிலிருந்து காப்பாற்றுவது தானே? அதற்காகத் தானே உனக்குக் கற்றுக் கொடுத்திருக்கிறார்கள்? அப்படியே செய்'' என்று மென்குரலில் கூறினாள் கிழவி.

கணவனுக்கும் தனக்கும் நடந்த உரையாடலை மாமியார் கேட்டுக் கொண்டிருந்திருக்கிறாள் என்று ஜாரிக் புரிந்துகொண்டாள்.

''நோயாளி நம் ஊரில், ஜரேவ்ஷானில் இருந்தால் அல்லவா நான் எதுவும் செய்வதற்கு? அவன் அவான்லூ வாசியாயிற்றே. அங்கே தனியாக மருத்துவர்கள் இருக்கிறார்கள். நான் அவர்கள் வேலையில் குறுக்கிடக் கூடாது. அப்படிச் சட்டமே இருக்கிறது. மருத்துவர்களின்

தொழில் நியதி என்று அதற்குப் பெயர்'' எனச் சொன்னுள் ஜாரிக்.

''உடைப்பில் போடு அந்தச் சட்டத்தை! உயிர் எல்லோருக்கும் கற்கண்டு, குழந்தாய். அதை விட்டுப் பிரிவது கஷ்டம். இந்த நோயாளி இருக்கிருனே, இவன் புத்திகெட்டவன். அவனுக்குப் புரியவில்லை ஒன்றும். புரிந்து கொள்ளும் போது துடியாய்த் துடிக்கப் போகிருன். அவனுக்கு அறிவு புகட்டுவது உன் கடமை'' என்ருள் மாமியார்.

உளநெகிழ்வால் உந்தப் பட்டு ஜாரிக் மாமியாரின் கையைக் கன்னத்தில் ஒத்திக் கொண்டாள். அவளோ, பழக்கமில்லாத இந்தச் சீராட்டால் மிரண்டு போனவள் போல மருமகளை மெல்ல அப்பால் தள்ளிவிட்டு வீட்டிற்குள் போய்விட்டாள்.

உரிய நேரத்துக்கு முன்பே டிஸ்பென்சரிக்கு வந்த ஜாரிக், நோயாளிகள் வருவதற்குள் எங்கும் பெருக்கித் துடைத்துத் துப்புரவாக்குவதில் முனைந்தாள். வழக்கமாக உதவி செய்யும் பெண்ணை வயலுக்கு அனுப்பிவிட்டு, பிரஷினுல் ஜன்னல் கண்ணுடிகளையும் தரையையும் ஒரு பொட்டு மாசுமறுவின்றிப் பளபளக்கும் படி துப்புரவு செய்தாள். மருந்து அலமாரியில் எல்லாவற்றையும் ஒழுங்கு படுத்திஞள். கருவிகளை எல்லாம் பெட்டியில் முறைப்

படி அடுக்கிவைத்தாள். இப்போது அவளுடைய டிஸ்பென்சரி டாக்டர் பக்ராத்தின் டிஸ்பென் சரிக்கு எவ்விதத்திலும் குறைந்ததா யில்லை.

கவனமாகக் கைகளைக் கழுவித் துடைத்துக் கொண்டு, கஞ்சி போட்டு முடமுட வென்றிருந்த மேலங்கியையும் தொப்பியையும் அணிந்து கொண்டாள் ஜாரிக். அவளுடைய ஏக்கமெல்லாம் எங்கேயோ போய் விட்டது. ''நெஞ்சில் துயர்புகுந்தால் வீட்டைத் துப்புரவு செய்'' என்ற ஆர்மீனியப் பழமொழி உண்மை தான் போலும்.

கதவைத் தட்டி அனுமதி பெருமலே திடுமென அறைக்குள் வந்தாள் ஸோனு அத்தை. அவளுடைய முகத்தில் முன்போன்ற இன் முறுவல் இப்போது இல்லை. அவள் விருந்தாளியாகவோ, சொந்தக்காரர் வீட்டிற் கோ வரவில்லையாதலால் முறைப்பும் கடு கடுப்புமாக இருந்தாள். ஜாரிக் மட்டும் என்ன, சளைத்தவளா? அவளுக்கும் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று தெரிந்திருந்தது. ஸோனு அத்தையை ஏறெடுத்துக் கூடப் பார்க்காமல், இச்சோதனைக்காகத் தேவையில் லாத பளபளக்கும் கருவிகளை மேஜைமீது ஒழுங்காக வைத்தாள். இந்த யுக்தி விரும்பிய பலனைத் தந்தது. ஸோனு அத்தை பெட்டிப் பாம்பாக அடங்கிவிட்டாள். ஜாரிக்கின் கேள்வி

களுக் கெல்லாம் பணிவுடன் விடை யளித் தாள். அவளது இரத்த அழுத்தத்தை ஜாரிக் அளவெடுத்தபோது கையில் சுற்றிக் கட்டிய நாடாவையும் ரப்பர்ப் பந்து போன்ற காற்றுக் கருவியையும் கண்டு ஸோனு அத்தை அரண்டு போய் வீறிட்டுவிட்டாள்.

ஜாரிக்கோ, பக்ராத் ஸெர்கேயெவிச் போல வே கடுமையான குரலில், ''நிறுத்து கூப்பாட் டை! என் வேலைக்கு இடைஞ்சலாயிருக்கிறது'' என்று வெடுக்கென்று கூறி அவள் வாயை அடக்கி விட்டாள். அதன் பின்பு ஸோனு அத்தை சித்திரப் பதுமையாய் உட்கார்ந்திருந்தாள்.

ஸோனு அத்தையின் இரத்த அழுத்தம் அதிகமாகத் தான் இருந்தது என்றாலும் உயி ருக்கு அபாயம் விளைக்கும் அளவு மிகுதியாக

''நீ வேலை செய்யலாம். அதனால் நன்மை யுங் கூட'' என்றாள் ஜாரிக்.

''ஐயோ, எனக்கு வந்திருப்பது கொடிய நோய். சற்றே எழுதிக்கொடேன் அதன் பெயர் என்னவென்று. உன்னை ரொம்பக் கேட்டுக் கொள்கிறேன். ஒருவேளை நான் பட்டணம் போனாலும் போவேன், பெரிய டாக்டரிடம்....''

''வேண்டாம் உனக்குப் பெரிய டாக்டர். அனுவசியம்.''

''எதற்கும் எழுதிக் கொடேன் சற்றே....''

நோயின் பெயரையும் இரத்த அழுத்தத்தின் விவரங்களையும் ஜாரிக் ஒரு காகிதத்தில் எழுதிக் கொடுத்த பின்பு தான் ஸோனு அத்தை அகன்றாள். காகிதத்தின் மீது கண்ணோட்டிய வாறு, தன்மீதே உண்டான பரிதாபத்தினால் தலையை அசைத்துக் கொண்டு தெரு வழியே நடந்து சென்றாள் அத்தைக் கிழவி.

டிஸ்பென்சரிக்கு வந்த நோயாளிகளைப் பார்த்து முடிந்ததும் ஜாரிக் குழந்தைப் பள்ளிக்கும் சிசு பராமரிப்பு நிலையத்துக்கும் போய் விட்டு, படுத்த படுக்கையா யிருந்த நோயாளிகளைக் காணச் சென்றாள்.

டிராக்டர் ஓட்டி ஆமோவை வீட்டிலே காணோம்.

''இன்று காலையில் தலைவர் வந்திருந்தார். ஆமோ அவரோடு எங்கேயோ போயிருக்கிறான். வேண்டாம், வேண்டாம் என்று தடுத்தேன். நீ கொடுத்திருந்த சீட்டையும் காட்டினேன். ஒருவரும் என் பேச்சைக் கேட்கவில்லை'' என்றாள் ஆமோவின் தாய்.

கிராமத்துக்குச் செல்லும் வழியில் எரிச்சலும் புடைச்சலுமாக வந்தது ஜாரிக்குக்கு. ''நல்ல ஆசாமி இந்தத் தலைவர்! சதுப்பு நிலத்தைத் தூர்ப்பதற்கென்றால் ஆளையே கண்டு பிடிக்க முடிவதில்லை. நோயாளிகளைப் படுக்கை

யிலிருந்து கிளப்பி வேலைக்கு இழுத்துச் செல்வதற்கோ தாமே நேரில் வருவது அவருக்கு இளப்பமாகப் படக் காணும்!''

இப்படி எண்ணியபோது ஜாரிக்குக்குக் கோபம் பொங்கியது. இந்த நிலைமையில் தலைவரின் சற்றே கூனிய நெட்டை உருவம் முன்னே தெரிந்ததும் அவளுடைய நிதானமெல்லாம் காற்றோடு போய்விட்டது. தலைவரை எட்டிப் பிடிப்பதற்காகப் பாய்ந்தோடினாள்.

''காலூஸ்த் மாமா!''

குழந்தைப் பருவம் முதல் அவரை இப்படியே அழைத்துப் பழக்கமாகிவிட்டதால் இப்போது அவரை அழைப்பதற்கு இதைவிட ஏற்ற முறையை அவளால் சிந்திக்க முடியவில்லை. ''காலூஸ்த் மாமா! இன்னும் எவ்வளவு காலம் இப்படியே இழுத்தடிக்கப் போகிறீர்கள்? சதுப்பு நிலத்தைத் தூர்ப்பதற்கு ஆட்கள் அனுப்பப் போகிறீர்களா, இல்லை, நமது மக்கள் எல்லோருக்கும் மலேரியா வரட்டும் என்று விடப் போகிறீர்களா?''

பெரும்பாலான மலைவாசிகள் போலவே ஒடிசலான காலூஸ்த், முன்சாய்ந்த தலையும், குவிந்த உதடுகளுமாக விடுவிடென்று நடந்தார். அவருக்குச் சரியாகச் செல்வதற்காக ஜாரிக் ஓடவேண்டியிருந்தது. அந்த மனிதரோ, தனது சிறு காரியாலய அறை போய்ச் சேரும்

வரை அவளுடைய கேள்விக்கு ஒரு வார்த்தை கூடப் பதில் சொல்லவில்லை.

''இதோ வட்டாரக் கமிட்டிக்குப் போன் செய்யப் போகிறேன்!''— தனது வாதங்கள் எல்லாம் பயனற்றுப் போனபின் ஜாரிக் இவ்வாறு கூறினாள்.

''போன் செய். தாராளமாகப் போன் செய்துகொள். இல்லாவிட்டால் இங்கே எனது இடத்தில் உட்கார்ந்து, அறுவடை முடிப்பதைப் பற்றியும், பனிக்காலக் களஞ்சியங்கள் கட்டுவதைப் பற்றியும், பள்ளிக்கூடக் கட்டிடத்தைச் செப்பனிடுவதைப் பற்றியும், மலை மேலுள்ள வயல்களைப் பற்றியும், சதுப்பு நிலத்தைப் பற்றியும் கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லு. வா, இப்படி இந்த நாற்காலியில் உட்கார்... வேலை செய்!'' என்று மிகத் தணிந்த குரலில் சீறினார் தலைவர்.

அவருடைய ரௌத்திராகாரமான கோபத்தைக் கண்டபின்னும் சுளுவாகப் பணிந்து போக ஜாரிக்கின் சுபாவம் இடங்கொடுக்க

''இதோ பாருங்கள், காலூஸ்த் மாமா, உங்கள் வேலையைச் செய்ய என்னால் முடிந்தாலும் முடியலாம். ஆனால் என் வேலையை நிறைவேற்றிக் கொடுக்க உங்களால் இயலாது. ஆக

வே நமது பேச்சினுல் ஒரு பயனுமில்லை'' என்று நிதானமாகக் கூறினுள்.

''உன்னுல் எல்லா வேலையும் செய்ய முடியும். என்னுடைய வேலையில் குறுக்குச் சால் ஓட்டவும் உன்னுல் முடியும்.... ஒவ்வொருவனும் எனக்கு இன்றியமையாது தேவைப்படுகிற வேளையில் எல்லாருக்கும் நோய்க்கால விடுமுறைக்குச் சீட்டுகள் வினியோகித்துக்கொண்டு திரிகிருய் நீ!'' என்று தலைவர் மறுமுறையும் பயங்கரமாகச் சீறினுர்.

சட்டைப் பைக்குள் விரல்களைவிட்டு, பல கசங்கிய காகிதத் துண்டுகளை எடுத்து மேஜை மேல் விசிறினுர்.

ஆமோவுக்குத் தான் அளித்திருந்த விடுமுறைச் சீட்டை எடுத்துக் கசங்கலை நேராக்கிய வண்ணம், ''இதில் என்ன தவறும்?'' என்று கேட்டாள் ஜாரிக். ''நேற்று அவனுக்குக் கடுமையான ஜுரம். நீங்கள் அவனைக் கரகரவென்று இழுத்து வயலுக்கு ஓட்டியிருக்கிறீர்களே! நாளைக்கே முறைக் காய்ச்சல் கண்டு அவன் மலையிலே சுருண்டு விழப் போகிறுன். அப்போது என்ன செய்வீர்களாம்? எந்தச் சதுப்பு நிலத்தைத் தூர்ப்பதற்கு நீங்கள் மறுக்கிறீர்களோ அதனுல் வந்த வினைதான் இதெல்லாம். அரசின் நலன்களைப் பாதுகாப்பதாக

முழங்குகிறீர்களே, அது இதுதானு என்று கேட்கிறேன்'' எனத் தொடர்ந்து கூறினுள்.

ஜன்னலின் அருகே நின்று கொண்டிருந்த காலூஸ்த் அவள் பக்கம் திரும்பவே இல்லை. ஜாரிக் இன்னெரு காகிதத் துண்டை எடுத்து நேராக்கினுள். அன்று காலை முன்பின் யோசியாமல் அவள் ஸோனு அத்தைக்கு எழுதிக் கொடுத்திருந்த குறிப்பு அது.

ஜாரிக் தலைவர் அருகே சென்ருள்.

''ஸோனு அத்தையை வேலைக்கு வரச் சொல்லுகிறேன். சதுப்பு நிலத்தை இந்த இலையுதிர்காலத்திற்குள்ளாவது நாம் தூர்த்துத் தீர வேண்டும்'' என்ருள்.

''அறுவடை முடியும் வரை பொறுத்துக் கொள்'' என்று தணிந்த குரலில், சீறல் இல்லாமல் சொல்ல ஆரம்பித்தார் தலைவர். ''நான் இதைப் புரிந்துகொள்ளவில்லை என்று நினைக்கிருயா?'' இப்படிச் சொல்லி ஜாரிக்கை நோக்கி, ''பாரப்பா வேடிக்கையை! ஸாக்கோ ஸாரோயானின் நேற்றுப் பிறந்த மகள் அரசின் நலன்களைப் பாதுகாப்பது பற்றி எனக்குப் போதனை செய்ய வந்துவிட்டாள்!'' என்று கெக்கலித்தார்.

''பின்னே என்னவாம்?'' என்று அலட்சியமாகக் கூறிவிட்டு நிமிர்ந்த தலையுடன் அறையிலிருந்து வெளியேறினுள் ஜாரிக்.

நடுப் பகலுக்குப் பின் ஜாரிக் மீண்டும் அவான்லூவுக்குப் புறப்பட்டாள். இம்முறை அவள் கல்லுங் கரடுமான ஒற்றையடிப் பாதையில் நடந்து சென்றாள். சிற்சில இடங்களில் பாதை செங்குத்தாகச் சரிந்திருந்தது. இடுக்குகள் வழியே கீழிறங்கியும், பாறைக்குப் பாறை தாவியும் சென்ற ஜாரிக், தன் மனதை எல்லாவற்றிலும் அதிகமாக அலட்டிக் கொண்டிருந்த விஷயத்தைப் பற்றிச் சிந்திக்காதிருக்க முயன்றாள். எண்ணங்களை வேறு புறம் திருப்பும் பொருட்டுத் தன் குழந்தைப் பருவத்தை நினைவுபடுத்திக்கொண்டாள். இப்போதுதான் நிகழ்ந்தது போலிருக்கிறது, வெயில் பட்டுப் பழுப்பேறிய உடலும் வெறுங்கால்களுமாக அவள் தன் தோழி தோழர்களுடன் இதே பாதைவழியாக ஆற்றை நோக்கி எத்தனையோ முறை ஓடியிருக்கிறாள். சில வேளைகளில் அவர்கள் இன்னும் அதிகத் தொலை நடந்து அவான்லூ பழத் தோட்டங்களுக்குச் செல்வார்கள். கிழத் தோட்டக்காரன் ''மலைக் குழந்தைகளுக்கு'' ஷமாம் எனப்படும் கமகமக்கும் சிறு முலாம் பழங்களும், அப்பொழுதுதான் கொடியிலிருந்து பறித்துக் குளுகுளு வென்றிருக்கும் திராட்சைக் குலைகளும் தந்து உபசரிப்பான். இதெல்லாம் நேற்று நடந்தது போலிருக்கிறது. இதற்குள்ளாகவே அவளுக்குக் குடும்பமும் குழந்தையும்

ஏற்பட்டுவிட்டன, அவள் டாக்டர்
டாள், ஒருகால் அவளுடைய பாதி வாழ்நாள் கழிந்தும் விட்டது போலும். திடீரென்று இப்போது அவள் உயிர் போய்விட்டாலோ! எத்தகைய பயங்கரம், எத்தகைய பிடிக்காத விஷயம்! பாவம் யெகீஷே மாமா! கிழவர்தான் என்றாலும் அவருக்குந்தான் சாவது பிடிக்காது. அவரது நோயைக் குணப்படுத்த முடியும், அல்லது அவரது வாழ்நாளைச் சில வருடங்களுக்காவது நீடிக்கச் செய்யமுடியும் என்றால், அவ்வாறு செய்ய முயலாமல் விடுவது கடுங் குற்றமல்லவா? அதே சமயம் பக்ராத் ஸெர்கேயெவிச் என்ன நினைப்பாரோ? அவளுக்காக அவர் எவ்வளவோ செய்திருக்கிறார், கஷ்ட சமயங்களிலெல்லாம் அவளுக்கு உவப்புடன் உதவி புரிந்திருக்கிறார். அப்படிப்பட்டவருக்கு மனத் தாங்கல் ஏற்படுத்துவது சரியாகுமா? இதையெல்லாம் பார்க்கும்போது அவான்லூ போகாமல் திரும்புவதே மேலென்று தோன்றுகிறதே!...

எண்ணங்கள் இப்படி ஓடிய போதிலும் அவள் தன் வசமின்றியே கொடி வழியில் தடதட வென்று இறங்கிச் சென்றாள். செங்குத்தான சரிவுகளில் அக்கம் பக்கம் துருத்திக் கொண்டிருந்த பாறைகளைப் பிடித்துக் கொண்டு நிதானமாக இறங்கினாள். இந்தச்

சீமையில் பிறந்து வளர்ந்த மற்றப் பெண்களைப் போலவே அவளுக்கும் நெருப்பாய்ப் பொசுக்கிய வெயில் ஒரு பொருட்டாகவே தோன்றவில்லை. இவ்வாறு அவள் நெடுநேரம் நடந்தபின், ஒற்றையடிப் பாதை சட்டென்று திரும்பி அகன்ற சாலையில் போய்ச் சேர்ந்தது. அவ்வழியே வந்த முதலாவது கார் அவளை அவான்லூவில் கொண்டுவிட்டது.

பக்ராத் ஸெர்கேயெவிச், இரத்தினக் கம்பளத்தால் அலங்கரிக்கப்பட்டிருந்த தமது துப்புரவான அறையில் அமர்ந்து ஆழ்ந்த கவனத்துடன் ஏதோ படித்துக் கொண்டிருந்தார். அப்போது அங்கு வந்தாள் ஜாரிக். அவளுடைய உடை கசங்கிப்போயிருந்தது. எப்போதுமே அவள் சின்னப் பெண் போலிருப்பாள். இப்போதோ அவளது சிறுமித் தோற்றம் இன்னும் துலக்கமாகத் தென்பட்டது.

எதிர்பாராமல் அவள் வந்தது குறித்துப் பெரியவர் சிறிதும் வியப்படையவில்லை. எந்தக் காலத்திலும், எதைக் கண்டும் வியப்படையாதவர் டாக்டர் பக்ராத் ஸெர்கேயெவிச்.

புத்தகத்திலிருந்து பார்வையைத் திருப்பி, ''போய் முகங் கை கழுவிக் கொண்டுவா! வற்றல் உடம்பும் மேலெல்லாம் புழுதியுமாக உன்னைப் பார்க்கவே பிடிக்கவில்லை'' என்றார் அவர்.

யாருடனுவது உரையாட வேண்டுமென்று அவர் மிக மிக ஆவலாயிருந்தார் என்பது மட்டும் தெளிவாகப் புலப்பட்டது. முகங் கழுவும் பொருட்டு ஜாரிக் தொட்டியருகே சென்ற போது, புத்தகத்தைக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டு அவரும் பின்னே சென்ருர்.

''பார்த்தாயா என்ன எழுதியிருக்கிறதென்று! க்ஷயரோகத்தைப் போக்குவதற்கு இன்னெரு புது மருந்து கண்டுபிடித்திருக்கிருர்களாம்! கடவுளின் தாடியைப் பிடித்து உலுக்குவது போலில்லே?'' என்று உற்சாகமாகக் கூறிஞர்.

''அப்படியா? எவ்வளவு அற்புதமான விஷயம்!'' என்று வியந்தாள் ஜாரிக். முகத்தைக் கழுவிக்கொண்டு, நீளப் பின்னல்களேத் தலேயைச் சுற்றிக் கட்டிக் கொண்டிருந்தாள் அவள்.

''அற்புதந்தான், சந்தேகமில்லே. ஆனுல் எழுதுவதற்கென்ன, எதை வேண்டு மானுலும் எழுதிவிடலாம்!'' என்ருர் பக்ராத் ஸெர்கேயெவிச்.

''புது முறைகளே நீங்களுந்தானே கையாளுகிறீர்கள்.''

''சந்தேகமில்லாமல். என்னே என்ன, பழம் பஞ்சாங்க மென்று எண்ணி விட்டாயா? கையாளத்தான் செய்கிறேன்.''

''ஆமாம், புற்றுநோயைக் குணப்படுத்துவதற்கு ஏதாவது புதிதாகக் கண்டுபிடித்திருக்கிருர்களா?'' என்று பேச்சைத் தான் வந்த விஷயத்திற்கு நைச்சியமாகத் திருப்பிஞள் ஜாரிக்.

''இதிலே ஏதோ எழுதியிருக்கிருர்கள். ஆஞல் ஒன்றும் தெளிவாயில்லை. இதெல்லாம் வெறுங் கதை. புற்றுநோயைப் போக்க ஒரே வழி ஆப்பரேஷன் செய்வதுதான். அதுவும் எவ்வளவு ஆழமாக, எவ்வளவு முழுமையாக முடியுமோ அவ்வளவு.''

''அதே தான் நானும் சொல்கிறேன்'' என்று விரைவாக ஒப்புக்கொண்டு பேச்சை மேலும் தொடர்ந்தாள் ஜாரிக். ''இந்த யெகீஷே மாமாவையே எடுத்துக் கொள்வோமே. அவருக்கு அப்படியொன்றும் முதுமை வந்து விடவில்லை, அவர் எய்த்து இளைத்துப் போய்விடவில்லை. அவரைக் காப்பாற்றுவது முற்றிலும் சாத்தியமே....''

பக்ராத் ஸெர்கேயெவிச் மௌனமாயிருந்தார். பின்பு திடீரென்று, வேருன குரலில், ''இதோ பார், ஜாரிக், உனக்குச் சம்பந்தமில்லாத காரியத்தில் தலையிடாதே, சொல்லிவிட்டேன். இதற்காகத்தான் நடவா நடை நடந்து இங்கே வந்தாயோ?'' என்ருர்.

''தலையிடாமலிருக்க என்ஞல் முடியாது.

எனக்கு உரிமை கிடையாது!'' என்று சொல்லிக் கொண்டே ஜாரிக் பெரியவர் அருகே சென்று அவர் தோளை விரல்களால் மெல்லத் தொட்டு, ''அந்தக் கிழவி ஜோலோ எப்படி இறந்தாள், நினைவிருக்கிறதா? தொண்ணூறு வயதான அந்தப் பழுத்த கிழம் சாக வேண்டுமென்று விரும்பினுள். ஆனாலும் நீங்கள் ஸிரிஞ்சும் கையுமாக அவளருகே உட்கார்ந்து அவளுக்கு ஆக்ஸிஜன் கொடுத்த வண்ணமாயிருந்தீர்கள். அவளுடைய உயிரைக் காப்பாற்றுவதற்காக நீங்கள் ஒவ்வொரு விஞடியும் போராடினீர்கள். எதற்காக?'' என்று கேட்டாள்.

''எல்லா மருத்துவர்களும் செய்வதைத் தான் நானும் செய்தேன். அது என் கடமை'' என்று சட்டெனப் பதிலளித்தார் பக்ராத் ஸெர்கேயெவிச்.

''ரொம்ப சரி! இன்னும் மூன்று மாதமோ அரை வருடமோ கழிந்த பின்பு, மரணப் படுக்கையிலிருக்கும் யெகீஷே மாமாவைப் பார்க்க உங்களை அழைப்பார்கள். நீங்கள் அவர் கட்டிலருகே அமர்ந்து கொண்டு, கற்பூரச் சத்தை ஊசி மூலம் ஏற்றுவதும் அவர் நெஞ்சைத் தேய்த்துவிடுவதுமாகப் பாடுபடுவீர்கள். எதற்காக? அவர் உயிர் இன்னொரு மணி நேரம் நீடிக்க வேண்டும் என்பதற்காக. உங்களுக்கும் மனச்சாந்தியுண்டாகும்—கடமை

யைச் செய்துவிட்டோம் என்ற உணர்வினால்!'' என்று ஆவேசமாகக் கூறினாள் ஜாரிக்.

இந்தக் கடைசி வார்த்தைகளை ஜாரிக் சொல்லியிருக்கக் கூடாது. அவை பக்ராத் ஸெர்கேயெவிச்சின் மனத்தில் சுருக் கென்று தைத்தன. அவளைவிட எவ்வளவோ உயர்ந்தவரான தம்மை, இந்தச் சின்னஞ் சிறுமி குத்திக் காட்டியது போலப் பட்டது அவருக்கு.

''எனக்கு நீ உபதேசம் செய்ய வேண்டாம்!'' என்று சீறிவிழுந்தார்.

ஆனால் ஜாரிக் அசைந்து கொடுக்கவில்லை. ''நான் ஒன்றும் உபதேசம் செய்யவில்லை. கிழவனாரை வற்புறுத்தி ஆப்பரேஷன் செய்துகொள்ளப் பண்ணவேண்டுமென்றுதான் கேட்கிறேன். இதைச் செய்வது உங்களுக்குப் பிரமாதமல்ல'' என்று அழுத்தமாகச் சொன்னாள்.

''முட்டாள்தனம்! குழந்தை முரண்டு!'' என்று கூவினார் பக்ராத் ஸெர்கேயெவிச்.

''அப்படியானால் சரி, நானே அவரிடம் போகிறேன்'' என்றாள் ஜாரிக்.

''நீ செய்வது கொஞ்சங்கூட அழகாயில்லை என்பதை எண்ணிப்பார்த்தாயா?''

''ஆமாம், அழகாயில்லை தான். நானும் இதைப் பற்றி நிறைய எண்ணிப்பார்த்துவிட்டேன். நீங்களும் என்னோடு வந்தீர்களானால்

விஷயம் முற்றிலும் வேறுவிதமாயிருக்கும்'' என்று பதிலளித்தாள் ஜாரிக்.

''இதென்னடா பெரிய வம்பாயிருக்கிறது!'' என்று சிடுசிடுத்தவாறே பக்ராத் ஸெர்கேயெவிச் ஸ்டாண்ட் அருகே சென்று, தொப்பியைச் சரட்டென்று சுண்டி எடுத்துத் தலையில் மாட்டிக்கொண்டு விடுவிடென்று நடந்தார்.

ஜாரிக் அவர் பின்னே விரைந்து சென்றாள். டாக்டர் பக்ராத்தின் தாயார் நடையில் நின்று கொண்டிருந்தாள். அறைக்குள் நடந்த உரையாடல் முழுவதையும் முன்னே நீட்டிய கழுத்தும் வியப்பால் விரிந்த கண்களுமாக அவள் உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். ஜாரிக்கைக் கண்டதும் அவள் முகத்தில் வழக்கம் போலப் புன்னகை அரும்பவில்லை, அவள் வா வென்று சொல்லவுமில்லை. இந்த மாறுதல் காரணமாக ஜாரிக்குக்கு அவளை அடையாளம் கண்டு கொள்வதே கஷ்டமாயிருந்தது. எப்போதும் போல ஜாரிக்கை வாழ்த்தி விடை கொடுக்காமல், குற்றஞ் சாட்டுவது போன்ற கடுமையுடன் மகனையே உறுத்துப் பார்த்துக்கொண்டு நின்றாள் அவள்.

ஜாரிக்கும் பக்ராத் ஸெர்கேயெவிச்சும் வழி நெடுக மௌனமாகச் சென்றார்கள். யெகீஷே மாமாவின் மகன் வர்த்தான் ஆர்யூத்ஸியான் வீட்டு வாயிலில் இருவரும் வாய் பேசாமல்

நின்ருர்கள். தனக்கு இதில் ஒன்றும் ஒட்டில்லை என்பது போல முகத்தை மறுபுறம் திருப்பிக் கொண்டார் பக்ராத் ஸெர்கேயெவிச். ஜாரிக் கதவைத் தட்டினுள்.

வர்த்தான் போர்க்களம் சென்று வந்த வன். ஐரோப்பாவில் பல இடங்களைச் சுற்றிப் பார்த்தவன். பலவகையான மக்களோடு கலந்து உறவாடிப் பழக்கமானவன். எனவே இரண்டு மருத்துவர்கள் ஏககாலத்தில் தன் வீட்டிற்கு விஜயம் செய்ததைக் கண்டு அவனுக்குத் துளிக் கூட வியப்போ கலக்கமோ உண்டாகவில்லை. தங்க நிறக் கூந்தலினளான அவன் மனைவி லூஸிக் குக்கோ, மருத்துவர்களது வருகையால் நெஞ்சு பகீரென்றது. ஏதோ விபரீதம் நடந்து விட்ட தென்று உடனே ஊகித்துக்கொண்டாள். பரபரப் பாக ஓடியாடி, மேஜை விரிப்பை விரித்து, தின் பண்டங்களைக் கொண்டு வைத்தாள். இதற் கிடையில் பக்கத்து வீட்டுக்கு ஒரு நடை சென்று மாமியாரிடம் காதுங்காதும் வைத்தாற்போலத் தகவல் தெரிவித்தும் விட்டாள்.

ஜாரிக் மேஜையருகே அமர்ந்து, பக்ராத் ஸெர்கேயெவிச்சை ஆவலுடன் நோக்கினுள். அழகிய முகத்தில் அதிருப்தியும் வெறுப்பும் தாண்டவமாட உர்ரென்று உட்கார்ந்து, நுனி விரல்களால் மேஜைமீது தாளம் போட்டுக் கொண்டிருந்தார் அவர். வாயே திறக்கமாட்

டேன் என்பது போலிருந்தது அவர் முகத் தோற்றம். பார்த்தாள் ஜாரிக். சற்று நகர்ந்து வர்த்தான் அருகே உட்கார்ந்துகொண்டு தானே பேச்சைத் தொடங்கினாள். அவள் நினைத்தது போலவே, கிழவனார் தமது நோயைப்பற்றி வீட்டில் ஒருவரிடமும் ஒன்றுமே சொல்ல வில்லை என்று தெரியவந்தது.

விஷயத்தை அறிந்ததும் வர்த்தானின் முகம் இருளடித்துப் போயிற்று. பெரிய பழுப் புக் கைகள் பதற்றத்துடன் மேஜை விரிப்பைத் துழாவுவதும் சூரிக் கத்தியை எடுப்பதும் போடு வதும், தட்டுக்களையும் கிளாஸ்களையும் இங்கு மங்கும் நகர்த்துவதுமாகத் தடுமாறின.

திடீரென்று கம்மிப்போன குரலில், ''அப் பா இறந்துவிடுவாரோ?'' என்று கேட்டான்.

''ஆப்பரேஷன் செய்யாவிட்டால் இறந்து விடுவார்'' என்று அழுத்தமாகக் கூறினாள் ஜாரிக்.

வர்த்தான் பக்ராத் ஸெர்கேயெவிச்சை நோக்கினான். அவரும் வேண்டா வெறுப்புடன் தலையசைத்து ஆம் என்று தெரிவித்தார்.

ஒளிவு மறைவற்ற, கனிந்த முகத்தின ளான அழகிய முதுமகள் ஒருத்தி, நடக்கமாட் டாமல் நடந்து அறைக்குள் வந்தாள். அவள் தான் வர்த்தானின் தாய். விருந்தினருக்குக் கம் பீரமாக வணக்கம் தெரிவித்துவிட்டு அவள்

மேஜை யருகே அமர்ந்து, மருத்துவர்களைக் கூர்ந்து பார்த்தாள்.

''அப்பா எப்படியிருக்கிறார், அம்மா! நான் இன்று அவரைப் பார்க்கவே யில்லை'' என்று வர்த்தான் அசடுவழியக் கேட்டான்.

''மோசமில்லை, மகனே. இப்போது அவருக்குக் கொஞ்சம் தேவலை போலிருக்கிறது. தோட்டத்திலே உலாவினார். முட்டைக் கறி பண்ணித் தரச் சொல்லிச் சிறிது சாப்பிட்டார்.''

வர்த்தானின் தாய் அவசரப் படாமல், விவரமாகவே பேசினாள். இருந்தாலும் அவள் எச்சரிப்புடன் எதையோ எதிர்பார்க்கிறாள் என்பது முகத்தில் தெரிந்தது.

''வாருங்கள் அப்பாவிடம் போய்க் கொஞ்சம் பேசலாம்'' என்றான் வர்த்தான்.

யெகீஷே மாமா இருந்தபடியே தலையைச் சாய்த்து விருந்தினரை வணங்கினாரே தவிர மகிழ்ச்சியைக் காட்டவில்லை. உயரமான மஞ்சத்தின் மேல், தலையணைகள்மீது சாய்ந்தவாறு கால்நீட்டி அமர்ந்திருந்தார் அவர். அருகே யிருந்த மேஜை மீது ஆறிப்போன முட்டைக் கறியும், தேனில் குழைத்த வெண்ணெயும், சுவையு ள கோதுமை அடைகளும் வைக்கப் பட்டிருந்தன. கொழுப்புச் சத்தும் ஊட்டமும் மிகுந்த உணவினால் நோயை வென்றுவிடலாம் என்று கிழவர் நினைத்தார். வெகுளித் தன

மான இந்த யுக்தியைப் புரிந்துகொண்ட ஜாரிக்குக் கிழவர்மீது இரக்கம் பொங்கியது.

இராணுவத்தில் அடைந்த பயிற்சியின் காரணமாக வர்த்தான் வெட்டொன்று துண்டிரண்டாகப் பேசப் பழக்கப்பட்டிருந்தான்.

''கேட்டீர்களா, அப்பா, உங்களுக்கு ஆப்பரேஷன் செய்யவேண்டுமென்று டாக்டர்கள் சொல்லுகிறார்கள். நாளைக்கு உங்களைப் பட்டணத்துக்கு அழைத்துப் போகிறேன்'' என்றான் அவன்.

பெரியவர் மகனை முறைத்துப் பார்த்து, ''எனக்குப் பட்டணம் போகத் தேவையில்லை'' என்றார்.

வர்த்தான் ஏதோ மிகச் சாதாரணமான விஷயத்தைப் பற்றிப் பேசுபவன் போல, ''ஆனால் உங்களுக்கு வைத்தியம் பார்த்தாக வேண்டுமென்று டாக்டர்கள் கட்டாயப்படுத்துகிறார்களே'' என மகிழ்ச்சியை வருவித்துக் கொண்டு சொன்னான்.

சிறிது நேரம் ஒருவருமே பேசவில்லை. இந்த மௌனம் பொறுக்க முடியாது போகவே ஜாரிக் ஏதேனும் சொல்வோமென்று வாயைத் திறந்தாள். அதற்குள் பக்ராத் ஸெர்கேயெவிச் திடீரென்று எழுந்தார். கனத்த நாற்காலியை லாகவமாக மஞ்சத்தின் பக்கம் நகர்த்தி, அதில் உட்கார்ந்து, முழங்கால்கள் மீது கைகளை

வைத்துக்கொண்டு பேசலுற்ருர். யெகீஷே மாமாவுக்கு வந்திருந்த நோய் எத்தகையது என்பதை எளிய சொற்களில் தெளிவாக விளக்கிஞர். சின்னஞ் சிறு கட்டி புறப்படுவதிலிருந்து தொடங்கி, திசுக்கள் தவிர்க்கமுடியாத படி சிதைந்து இற்றுப் போவதுவரை, நோயின் போக்கு முழுவதையும், அதன் அபாயத்தை மிகைப்படுத்தவோ மூடிமறைக்கவோ செய்யாமல் விவரித்தார்.

''நீயும் நானும் நெடுங்காலம் வாழ வேண்டும், அப்பனே. பட்டணத்துக்குப் போக ஆயத்தம் செய்!'' என்று நன்கு பதியும்படி கூறிமுடித்துவிட்டு நாற்காலியிலிருந்து எழுந்தார்.

''ஆகா, எவ்வளவு கச்சிதமாக, நறுக்குத் தெறித்தாற் போலக் காரியத்தை முடித்துவிட்டார்! என்ஞல் ஒருபோதும் இது ஆகாது!'' என்று எண்ணி வியந்தாள் ஜாரிக்.

வர்த்தான் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தான். யெகீஷே மாமாவோ, ஜெபமாலையை மெதுவாக உருட்டிக் கொண்டிருந்தார். சட்டென்று அவருடைய மனைவியின் குரல் ஒலித்தது.

''வர்த்தான்!'' என்று மகனை அழைத்தாள். உடனே அவன் பணிவுடன் எழுந்து அவளெதிரே நின்ருன். ''நமது கூட்டுப்பண்ணைத்

தலைவரிடம் போய், நாளைக் காலையில் மோட்டார் வேண்டும் என்று சொல்லிவிட்டு வா. லூரஸிக், ஐந்தாறு லவாஷ்களுக்கு வேண்டிய மாவைப் பிசைந்து வை.''

அவள் அமைதியாகவே இப்படி உத்தர விட்டாள். எனினும் அவளது நெற்றியில் துயரத்தின் ரேகை படிந்ததை ஜாரிக் கண்டாள்.

யெகீஷே மாமா முனகினார், புரண்டு கொடுத்தார்; பின்பு மஞ்சத்தில் நிமிர்ந்து உட்கார்ந்தார். மனைவி அவர் தோள்மீது கையை வைத்தாள்.

''போவோம், யெகீஷே. இது அவசியம் என்று உனக்கே தெரியும்!'' என்றாள்.

யெகீஷே மாமா அவளை ஏறிட்டுப் பார்த்துப் பரிதாபமாக முறுவலித்தார்.

''அப்போ சரி... போகத்தான் வேண்டும் என்றால் போகிறேன். எனக்கு ஒன்றும் தடையில்லை...'' என்றார்.

கிழவி பக்ராத் ஸெர்கேயெவிச் அருகே போய், ''நன்றி, மருத்துவரையா, எங்கள் குடும்பம் முழுவதும் உங்களுக்குக் கடமைப் பட்டிருக்கிறது!'' என்று தழுதழுப்புடன் கூறினாள்.

பக்ராத் ஸெர்கேயெவிச் பெருமிதத்துடன் தலையசைத்து, ''பெரியவரை நன்றாகக்

கவனித்துக்கொள் அம்மா, முக்கியமாக ஆப் பரேஷனுக்குப் பிறகு'' என்ருர்.

ஜாரிக், பக்ராத் ஸெர்கேயெவிச் இருவரும் மீண்டும் மோன வடிவங்களாக வழி நெடுக நடந்தார்கள். ஜாரிக் ஒரேயடியாகக் களைத்துப் போயிருந்தாள். ''டிஸ்பென்சரி அருகிலுள்ள அடக்கமான சிறு வீட்டிற்கு வந்து போவதும், மருத்துவச் சஞ்சிகையின் புதிய இதழ்களைப் பற்றி உரையாடுவதும், அகன்ற மஞ்சத்தில் அமர்ந்து களையாறுவதும் எல்லாம் இன்ருேடு முடிந்துவிட்டன. அதோ பாட்டை இரு கிளை களாகப் பிரியும் இடம் வந்ததும் பக்ராத் ஸெர்கேயெவிச் தன் வீட்டை நோக்கிப் போய் விடுவார், அவள் சாலையோடு நேரே போக வேண்டும், ஏதாவது கார் ஊர்வரை கொண்டு விடாதா என்று ஆவலுடன் எதிர்பார்த்த வண் ணம்.'' இப்படி மனங்கசந்து எண்ணிஞள் ஜாரிக். ஆயினும் அவள் நெஞ்சின் மேலிருந்த பாரம் இறங்கிவிட்டது. அவள் தன் கடமையை நிறை வேற்றிவிட்டாள் அல்லவா?

பாட்டை கிளை பிரிந்த இடத்தில் சிலர் வருவதை ஜாரிக்கும் டாக்டர் பக்ராத்தும் கண்டார்கள். அவான்லூ கம்யூனிஸ்ட் கட்சிச் செயலாளரும் அந்தக் கூட்டத்தில் இருந் தார். அவர்கள் இருவரையும் கண்டதும் அவர்

கை தூக்கி வணக்கம் தெரிவித்து அவர்களை நோக்கிவிரைந்தார். வீட்டுக்குப்போகும்பாதையில் திரும்புவதற்கிருந்த பக்ராத் ஸெர்கேயெவிச் சட்டென்று நின்ருர். இந்த வணக்கம் தனக்குத் தொடர்புடையதல்ல என்று கருதிய ஜாரிக், தனது ஆசானும் கூட்டாளியுமான பெரியவரிடம் விடை பெற்றுக் கொள்ளும் பொருட்டுச் சற்றே தயங்கினுள்.

பழுப்பு நிறமும் உயரக்கட்டையுமான செயலாளரோ, பக்ராத் ஸெர்கேயெவிச்சுக்கு மரியாதையாகத் தலை வணங்கிவிட்டு ஜாரிக்கை நோக்கிப் பேசலானுர்.

''நீ மனதில் போட்டுக்கொள்ளக் கூடாது, டாக்டரம்மா. போன தடவை நமக்கிடையே தவருன பேச்சு வார்த்தை நடந்துவிட்டது. அதை யெல்லாம் மறந்துவிடுவோம். சதுப்பு நிலத்தைத் தூர்ப்பது பற்றி எங்கள் ஜனங்கள் முடிவு செய்துவிட்டார்கள். ஜரேவ்ஷானில் நீங்கள் அறுவடையை முடிக்கும் வரையில் நாங்கள் வேலை செய்வோம். எத்தனை ஆட்கள் எத்தனை மணிநேரம் உழைக்கிருர்கள் என்று கணக்குக் குறித்துக் கொள்வோம். அப்புறம் ஜரேவ்ஷான்காரர்களும் அதே அளவு உழைக்கட்டும். இப்படிச் செய்தால் ஒருவருக்கும் பொல்லாப்பு இராது. இது தான் எங்கள் தீர்மானம்'' என்ருர் அவர்.

''நாங்கள் ஐரேவ்ஷானைப் போட்டிக்கு அழைக்கிறோம்!'' என்று கத்தினன் சுருட்டை மயிர்த் தொப்பி அணிந்திருந்த இளைஞன் ஒருவன்.

''ஆகா, அதற்கென்ன தடை? நீங்கள் சொல்வது முற்றிலும் சரி. ஐரேவ்ஷான் தன் பங்கில் ஒன்றும் சோடை வைக்காது. எங்களுக்கு டிராக்டர் வேறு கிடைக்கும்'' என்று செயலாளருக்கு உற்சாகமாகப் பதிலளித்தாள்.

எல்லோரும் ஒரே நேரத்தில் கசமுசகச முசவென்று பேசினார்கள். வெட்டியாக நின்று கொண்டிருந்த பக்ராத் ஸெர்கேயெவிச், எல்லோரும் உற்சாகமாகப் பேசும் விஷயத்தில் கொஞ்சமும் ஒட்டில்லாத தாம் அங்கே நிற்பது கேலிக்கிடமாகும் என உணர்ந்தார்.

எதையாவது சொல்ல வேண்டுமே என்று மூளையில் துருவித் தேடியவர் சட்டெனச் செயலாளரை நோக்கி, ''இதோ பார், கெராஸிம்! உன் பெண்சாதி ஏதோ மருந்து வேண்டுமென்று கேட்டாளே, அதை வந்து வாங்கிக்கொண்டு போகச் சொல்லு. தயாரித்து விட்டேன்...'' என்று கூறினார்.

செயலாளர் நன்றி தெரிவிப்பதற்கு அறிகுறியாக நெஞ்சின் மீது கையை வைத்து வணங்கினார். கடைசி வார்த்தை தமதே என்ற திருப்தியுடன் வீட்டை நோக்கி நிதானமாக

அடியெடுத்து வைத்தார் டாக்டர் பக்ராத் ஸெர்கேயெவிச்.

''ஒன்றும் குடிமுழுகிப் போய்விடவில்லை! நான் அகந்தை பிடித்தவள் அல்ல. மறுபடியும் உங்கள் வீட்டுக்கு வரத்தான் போகிறேன், டாக்டர் பக்ராத் ஸெர்கேயெவிச்!'' என்று எண்ணமிட்டாள் ஜாரிக்.

அவளுடைய பார்வையை உணர்ந்து கொண்டவர் போல பக்ராத் ஸெர்கேயெவிச் தலையைத் திருப்பி, அவளைப் பார்த்துக் கேலியாகப் புன்னகை செய்தவண்ணம் நாடகபாணியில் தொப்பியைத் தலையிலிருந்து எடுத்து வணங்குவது போல அபினயித்தார்.

நிதானமாக, ஆழ்ந்த சிந்தனையுடன் அவரைப் பார்த்தாள் ஜாரிக். ''இந்த நடிப்பு உங்களுக்குப் பொருந்தவேயில்லை பக்ராத் ஸெர்கேயெவிச், அகந்தையும் ஏளனமும் காட்டுகிற நடிப்பு உங்களுக்குக் கொஞ்சமும் பொருந்தவில்லை!'' என்று மனதுக்குள் சொல்லிக் கொண்டாள்.

தொப்பியைச் சடக்கென்று காதுவரை அழுத்தி வைத்துக்கொண்டு, கூம்பிய தோள்களுடன் வீட்டை நோக்கி விரைந்து நடந்தார் டாக்டர் பக்ராத்.

''போகலாம் வா, ஜாரிக்! எங்கள் கோஷ்டி இப்போது சதுப்பு நிலத்தில் வேலை

செய்யப் போகிறது. லாரியில் டிரைவர் அருகே உட்கார்ந்துகொள். அழைத்துச் செல்கிறோம்'' என்று சொன்னான் சுருட்டை மயிர்த் தொப்பிக் காரன். கைகளைக் கண்ணில் குவித்துச் சூரிய னைப் பார்த்துவிட்டு, ''இன்று இன்னும் மூன்று மணிநேரம் வேலை செய்ய முடியும்'' என்றான்.

''ஆம், பகல் நேரம் இப்போது நீளமாயிற் றே'' என்று ஒத்துக்கொண்டார் செயலாளர்.

இருபுறமும் பசுமை கொழிக்கும் கிராமச் சாலையிலே அவர்களோடு சென்றாள் ஜாரிக்.



## போரீஸ் பொலிவோய்

போரீஸ் பொலிவோய் (பிறப்பு 1908) ருஷ்ய சோவியத் எழுத்தாளர். சோவியத் யூனியனது வீரர் என்னும் பட்டம் பெற்ற விமானி அலெக்ஸேய் மாரேஸ்யேவைப் பற்றி இவர் எழுதியுள்ள ''உண்மை மனிதனின் கதை'' இவரது நூல்கள் எல்லாவற்றிலும் புகழ் வாய்ந்தது. கதாநாயகரான விமானி, பாசிஸ்டுகளுக்கு எதிரான போரில் இரு கால்களையும் இழந்த

பின்பும் தளரா உறுதியுடன் தமது படைக்குத் திரும்பி மீண்டும் விமானியாகத் தொண்டாற்றுகிறார். ''உண்மை மனிதனின் கதை'' என்னும் நவீனம் 53 உலக மொழிகளில் பெயர்க்கப் பட்டிருக்கிறது.

போரீஸ் பொலிவோய் பத்திரிகையாளர், சோவியத் சமாதான ஆதரவாளர்கள் கமிட்டியின் உறுப்பினர். சோவியத் நட்புறவுத் தூதுக் கோஷ்டிகளின் அங்கத்தினராக அவர் பல முறை இந்தியா சென்று வந்துள்ளார். குறிப்பு நோட்டும் கையுமாக சோவியத் யூனியனின் ஒரு கோடியிலிருந்து மறு கோடிவரை சுற்றி வந்திருக்கிறார் பத்திரிகையாளர் போரீஸ் பொலிவோய். இந்தப் பயணங்களின் விளைவாக வெளிவந்தவையே ''சம காலத்தவர்'' முதலிய சிறுகதைத் தொகுதிகள்.

''காதல்'' என்று மகுடமிட்ட இந்தக் கதையில், உண்மை வாழ்வில் தமக்கு எதிர்ப் பட்ட ஒரு நிகழ்ச்சியைச் சித்திரித்திருக்கிறார்

ியர்.

# காதல்

''அதோ அந்த மூலையில் மேஜை அருகே உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்களே, அந்தத் தம்பதிகளை ஒரு முறை பாருங்கள். நன்றாகப் பார்த்துக்கொள்ளுங்கள். இங்கே சௌகரியப்படாது, ஆனால் அப்புறம் என் வீட்டில் அவர்களைப் பற்றிச் சுவையான கதை உங்களுக்குச் சொல்லுகிறேன்....''

எங்கள் நிர்மாண வட்டாரத்தின் கட்சி ஸ்தாபனத் தலைவர் இவான் ப்யோதரவிச் குஸ்மிச்சோவ் ஆட்களை மோப்பங் காண்பதில் ஆச்சரியகரமான திறமை வாய்ந்தவர். ஒவ்வொருவரிடத்திலும், அவர் எவ்வளவு தான் சாதாரணமானவராகத் தோன்றினாலும், ஏதாவது ருசிகரமான விஷயத்தைக் கண்டறிவது அவருக்கு முடியும். அவருடைய இந்த மேதையை நான் அறிந்திருந்தபடியால் அவர்

காட்டிய ஆணையும் பெண்ணையும் மெதுவாக நோட்டமிட்டேன்.

அவன் ஒற்றை நாடி தேகத்தினன். அடர்ந்து, சுருண்டு நரையோடிய கரிய கேசம். கூரிய பக்கத் தோற்றம். எடுப்பான, ஓரளவு பருமனான மோவாய். துருத்திய கன்ன எலும்புகள். இதழ்க் கோடிகளில் ஆழ்ந்த ரேகைகள். ஏதோ காரியத்தில் மும்முரமாக ஈடுபட்டிருப்பது போலக் கத்தியையும் முள்ளையும் லாகவமாகச் செலுத்தி அவன் மௌனமாக உணவருந்திக் கொண்டிருந்தான். அவள் பொன் நிறத்தள். வாட்டசாட்டமான, ஆனால் பொருத்தமுள்ள அங்க அமைப்பு வாய்ந்த மேனி. பரந்த முகம். இணைந்த கரும் புருவங்கள் அதற்குக் கடுமையும் ஊக்கமும் நிறைந்த தோற்றத்தை அளித்தன. அவள் அணிந்திருந்த நீண்ட அங்கியைத் தவிர அவளது தோற்றத்தில் குறிப்பிடத்தக்க அம்சம் எதுவுமில்லை.

ஆனால் அவள் நடந்துகொண்ட மாதிரியில், அதிலும் தன் கூட்டாளிக்கு அவள் கடுகு மசியலையும், முள்ளங்கியையும், மிளகுப்பொடியையும் பார்த்துப் பார்த்து எடுத்துக் கொடுத்த விதத்தில், பேணும் தன்மை, தாய்மை மிளிர்ந்தது. நிர்மாணத் தொழிலாளிகள் நிறைந்திருந்த இந்த உணவு விடுதியில் இப் பெண்பிள்ளை

தானே சொந்தக்காரி போல நடந்துகொண்டாள்.

இங்குள்ளவர்கள் எல்லாம் இந்தப் பெண் பிள்ளைக்கு வணக்கம் செலுத்துகிறார்கள் என்பதும், அவள் இதற்குப் பழக்கப்பட்டவள் என்பதும் தெளிவாகத் தெரிந்தன.

அன்று மாலை குஸ்மிச்சோவும் நானும் கட்சிக் காரியாலய அறையில் சந்தித்தோம். நிர்மாண எஞ்சினீயர் காரியாலயம் போலக் காணப்பட்ட அந்த அறை பெரியதல்ல. மேஜை மீதும், புத்தக அலமாரிகளிலும், ஜன்னல் குறடு மேலும், இரும்புப் பெட்டியின் உச்சியிலும் எங்கும் சிமெண்டு ஜாடிகளும், மண்ணின் மாதிரிகளும், பலவகைக் கருவிகளின் மாடல்களும் நிறைந்திருந்தன.

செயற்கைத் தோல் சோபாவில் என்னை அமர்த்திவிட்டு, குஸ்மிச்சோவ் தானும் சிறுவர்களைப் போல் கால்களை மடக்கிக்கொண்டு என் அருகே அமர்ந்து என் பக்கமாக முகம் முழுவதையும் திருப்பினார். அதில் புன்னகை தவழ்ந்தது. குறும்புத்தனமான அந்தப் புன்னகை, அவரது உதட்டோரங்களிலும் கண்களிலும் மட்டுமல்ல, அவரது இளமை குன்றிய முகத்தின் ஒவ்வொரு ரேகையிலும் பளிச்சிட்டது. ஏற்கனவே வாக்களித்திருந்தபடி அவர் கதையைத் தொடங்கினார்:

''கவர்ச்சிகரமான தம்பதிகள், அல்லவா? ரொம்ப சரி. இப்போது கதையைக் கேட்கத் தயாராகுங்கள். இது அசாதாரணமான கதை என்பதை எடுத்த எடுப்பிலேயே சொல்லிவிடுகிறேன். அந்த மனிதனைப் பற்றி நீங்கள் ஏற்கனவே கேள்விப்பட்டிருக்கிறீர்கள். நமது உழைப்பு வீரர்களைப் பற்றிப் பேசுகையில் இவன் பெயரையும் நான் குறிப்பிட்டேன். அவன் தான் யெகோர் உஸ்த்நீனோவ், கொத்தர் குழுத் தலைவன். அவளைப் பற்றியோ நீங்கள் கட்டாயமாகக் கேள்விப்பட்டிருப்பீர்கள். அவள் தான் ல்யூபோவ் சாபான். எங்களது முதிய கொத்து மேஸ்திரி ஒருவன் குறிப்பிட்டது போல, அவள் ''பெருங்குரல் பெண்மணி''. அவளும் ஒரு கொத்தர் குழுவின் தலைவி. அந்தந்த மாதம் எல்லோரிலும் நன்றாக வேலை செய்யும் குழுவிடம் கொடுத்து வைக்கப்படும் வெற்றிக் கொடியை அவளது குழு சென்ற மாதந் தான் யெகோரின் குழுவிடமிருந்து பறித்துக் கொண்டது. இருவரும் கம்யூனிஸ்டுகள்.''

கதைஞர் திருப்தியுடன் உள்ளங்கைகளை ஒன்றோடொன்று தேய்த்துக்கொண்டார்.

''ஆகா, உங்களுக்குக் கதையில் சுவை பிறந்துவிட்டது அல்லவா? நான்தான் சொன்னேனே, எங்களிடமுள்ள சிலரைப் பற்றிப்

பேசப் பேச, கேட்கக் கேட்கத் தெவிட்டாது என்று.... ஆயிற்று, இப்போது இவ்விருவர் கதைக்குத் திரும்புவோம். யெகோர் உஸ்த்தீனேவ் முதலாவது கொத்தர் கூட்டத்துடன் இங்கே வந்தான்; நேரே த்னீப்பரிலிருந்து. த்னீப்பர் நீர் மின்நிலையம் கட்டுவதில் உழைத்தான், புகழ் அடைந்தான், விருது பெற்றான், த்னீப்பர் வேலை முற்றுப் பெற்றதும் நேரே எங்களிடம் வந்து விட்டான். கொத்துவேலை தொடங்கி வைக்கும் கௌரவத்தை நாங்கள் அவனுக்கு அளித்தோம். அணையின் வானக் கிடங்கில் முதல் கனமீட்டர் காங்கிரீட் போட்டவன் அவன்தான். ஒரு சஞ்சிகையின் முகப்புப் பக்கத்தில் உஸ்த்தீனேவின் புகைப்படம் வெளியாயிற்று. இந்தப் படத்திலிருந்து தான் எல்லாம் ஆரம்பித்தது என்று சொல்லலாம். அதுதான் இந்தக் கதை முழுவதற்கும் வித்து.

''மேற்படி சஞ்சிகை வெளியான இரண்டொரு வாரத்திற்கெல்லாம் இங்கே, கட்சிக் காரியாலயத்தில் என்னைப் பார்க்க வந்தாள் ஒரு பெண். அவளை எனக்கு முன்பின் தெரியாது. பெயர் ல்யூபோவ் சாபான், கட்சி உறுப்பினர், இங்குள்ள மருத்துவ நிலையத்தில் தாதியாக வேலை செய்ய அனுப்பப்பட்டிருக்கிறாள் என்று சிபாரிசுக் கடிதத்தில் கண்டிருந்தது.

''அவளோடு பேச்சுக் கொடுத்தேன். அவள் நல்ல கம்யூனிஸ்ட் என்று எல்லா வகையிலும் விளங்கியது. பள்ளிப் படிப்பையும் மருத்துவப் பயிற்சியையும் முடித்த பின்பு போரில் தொண்டு புரிந்தாளாம். காயமடைந்தாளாம், கௌரவ விருது பெற்ருளாம். போர்முனையில்தான் கட்சியில் சேர்ந்தாளாம். போருக்குப்பின்பு இராணுவ சேவையிலிருந்து விடுபட்டுத் தன் சொந்த இடமான உக்ரேயினுக்குத் திரும்பினாளாம். அங்கே பெரிய கூட்டுப்பண்ணை ஒன்றில் குழந்தைகள் பராமரிப்பு வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருந்தாளாம். ஒரே வார்த்தையில், உண்மையிலேயே ரொம்ப நல்ல பெண், திறமைசாலி என்று எனக்குப் பட்டது. அவளோடு பேசிக் கொண்டிருக்கும் போதே, சிசு பராமரிப்பு நிலையம் பற்றி நிர்மாண வட்டாரத் தலைவருடன் உரையாடியது என் நினைவுக்கு வந்தது. அப்போது எங்கள் சிசு பராமரிப்பு நிலையத்தில் வேலைகள் ஒழுங்காக நடைபெறவில்லை. அதைச் சரிவர மேற்பார்க்கத் தகுந்த ஆள் எங்களுக்குக் கிடைக்கவில்லை.

''சிசு பராமரிப்பு நிலையத்தில் வேலை பார்க்கச் சம்மதந்தானு என்று ல்யூபோவ் சாபானைக் கேட்டேன். 'இதென்ன கேள்வி? தேவையாயிருந்தால் குழந்தைகள் இல்லத்தில்

வேலை பார்க்கிறேன். நான் இங்கே இளைப்பாறுவதற்காக வரவில்லையே. எங்கே வேண்டுமோ வேலை கொடுங்கள். என் உடம்பில் வலுவென்னவோ வேண்டியது இருக்கிறது. திறமையும் அவ்வளவு இருந்தால் நன்ருயிருக்கும்' என்ருள் அவள். அவளுடைய பதில் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. விடை பெற்றுக் கொண்டு கதவுப் பக்கம் போனவள் சடக்கென்று திரும்பி, 'உஸ்த்தீஞேவ் என்பவர் இங்கே வேலை செய்கிருரா என்று சொல்ல முடியுமா? முழுப்பெயர் யெகோர் உஸ்த்தீஞேவ். அவருடைய புகைப்படம் கூடச் சமீபத்தில் சஞ்சிகையில் வெளியாயிற்றே' என்று கேட்டாள்.

" 'உஸ்த்தீஞேவ் இங்கே தான் வேலை செய்கிருர். கட்சியின் எங்கள் கிளைக்காரியாலயத்தில் அவர் பெயர் பதிவாகியிருக்கிறது' என்று பதில் சொன்னேன்.

"இதைக் கேட்டதும் அவள் புருவங்களைச் சற்றே உயர்த்தி (அவளுடைய இந்த வழக்கத்தை இன்று நீங்கள் கவனித்திருக்கலாம்) மிகமிகத் தணிந்த குரலில் (இம்மாதிரி ஆட்கள் தணிந்த குரலில் பேசிஞல் விந்தையாயிருக்கிறது), 'ஆமாம், இந்த உஸ்த்தீஞேவ் கலியாணமானவரா என்ன?' என்று கேட்டாள். அவளுடைய கேள்வி என்னைத் திகைக்கவைத்து

விட்டது என்று ஒப்புக்கொள்ளுகிறேன். 'அவர் உங்களுக்கு என்ன வேண்டும்? சொந்தக்காரரா?' என்று வினவினேன். 'இல்லை. ரொம்ப காலத்துக்கு முந்திப் பழக்கமுண்டு. இப்போது அவர் என்னை மறந்துகூடப் போயிருக்கலாம்.' இப்படிச் சொன்னதும் அவள் முகமெல்லாம் ஜிவு ஜிவென்று சிவப்பேறி, மூக்கந்தண்டில் வியர்வை அரும்பியது.

''எனக்கு நினைவிருக்கிறபடி உஸ்த்தீனேவ் விதுரன் என்றும், வேண்டுமானால் ஒரே நொடியில் நிச்சயமான தகவலை விசாரித்துச் சொல்ல முடியும் என்றும் கூறினேன். ஆனால் அவள் அதைக் கேட்கக் காத்திராமல் எறிந்த பந்து போல விர்ட்டென்று அறைக்கு வெளியே போய்விட்டாள். இதென்னடா இப்படி? ஒரு வேளை இவள் அவனுடைய மாஜி மனைவியாயிருப்பாளோ என்று நினைத்தவனாய் உஸ்த்தீனேவ் பூர்த்தி செய்திருந்த பத்திரத்தை எடுத்துப் பார்த்தேன். இல்லை, அவன் விதுரன், அவனுக்கு மூன்று குழந்தைகள் என்று அதில் துலாம்பரமாகக் குறித்திருந்தது. சந்தர்ப்பம் வாய்க்கும்போது உஸ்த்தீனேவிடமே சாபானைப் பற்றிக் கேட்டுவிடுவது என்று தீர்மானித்தேன். அப்பொழுதென்று சந்தர்ப்பமே வாய்க்கவில்லை.

''ஆயிற்று. ல்யூபோவ் சாபான் தன்னுடைய

வேலைத் திறமையை உடனே காட்டிவிட்டாள். சிசு பராமரிப்பு நிலையத்தில் காரியங்கள் எல்லாம் மளமளவென்று சீர்பட்டன. ஒரு மாதத்துக்குக் கொஞ்சம் அதிகமாகி யிருக்கும், அவ்வளவுதான், அதற்குள்—நான் பெருமை அடித்துக்கொள்ள வில்லை—எங்கள் சிசு பராமரிப்பு நிலையம் இந்த மாவட்டம் முழுவதற்கும் எடுத்துக்காட்டாக விளங்கலாயிற்று.

''ஒன்று மட்டும் உங்களிடம் ஒப்புக்கொள்ள வேண்டும். சாபான் வேலை தொடங்கிய முதல் இரண்டொரு வாரங்கள் எங்களில் ஒவ்வொருவருக்கும் அவளிடமிருந்து பிழைப்பது பெரும்பாடாகி விட்டது. அவள் ஒழுங்கு படுத்த ஆரம்பித்தபின் அவளுடைய அறிக்கையைக் கேட்கும் பொருட்டு கட்சிக் கமிட்டி இரண்டு தடவை கூடியது; வட்டாரத் தொழிற்சங்கத்தினர் அவளுடைய அவசரக் கோரிக்கைகளுக்கு இணங்கி, குழந்தைகளின் தேவைகளைக் கவனிப்பதற்காக ஒரு கமிட்டி நியமித்தனர்; அவளுடைய வற்புறுத்தலின் பேரில் எங்கள் எஞ்சினீயர்களின் மனைவிகள் அவளுக்குக் கூடமாட உதவி செய்தார்கள்; ஸப்ளை நிர்வாகிகளோ, ஒரேயடியாகக் கிலி பிடித்துப் போனார்கள்; அவள் குரல் காதில் விழவேண்டியதுதான், எடுப்பார்கள் ஓட்டம். ஆனால் வெகு தூரமல்ல. அவளிடமிருந்து

தப்புவதெங்கே? மறு கணமே அவள் கோழிக் குஞ்சின் மேல் கழுகு பாய்வது போலப் பாய்ந்து பற்றிக் கொள்வாள். தனக்கு வேண்டியதை எல்லாம் கக்கவைத்த பிறகுதான் அவர்களை விடுவாள்.

''ஒரு தடவை எங்களைப் பார்வையிட மந்திரி வந்தார். நிர்மாண வேலை யாட்களின் தேவைகள் விஷயத்தில் அவர் ரொம்பக் கண்டித மானவர் என்பதை நீங்கள் கேள்விப்பட்டிருப் பீர்கள். முதலாவதாக வேலையைப் பார்வை யிடுவார், பின்பு இருப்பிட வசதிகளைக் காட்டச் சொல்லுவார். அவரை மட்டும் ஏய்க்க முடி யாது! இந்த முறையும் அப்படித்தான். ஒவ் வொரு பம்புக் குழாயிலிருந்தும் தண்ணீரைத் தாமே ருசி பார்த்தார். பின்பு உணவு விடுதி யில் நேரே சமையலறைக்குப் போய் ஒவ்வொரு பாத்திரத்திலிருந்தும் ஒரு கரண்டி எடுத்து மாதிரி பார்த்தார். அப்புறம் ஸ்டோருக்கு விஜயம். அன்றைக்கு என்று ஸ்டோரில் நல்ல ரேடியோ செட்களோ மோட்டார் சைக்கிள் களோ இல்லை. பின்பு கேட்பானேன்! எங்கள் ஸப்ளை ஏஜெண்டுகளுக்குச் சரியான மண்டகப் படி கிடைத்தது. கடைசியில் மந்திரியார் சிசு பராமரிப்பு நிலையத்தையும் பார்வையிட் டார். அங்கே போனதும் நாங்கள் எல்லோரும் அப்பாடா என்று பெருமூச்சு விட்டோம். எதைப்

பார்த்தாலும் பளிச்சென்று துப்புரவாக மின்னியது. குழந்தைகள் கழுக்கு மொழுக் கென்றிருந்தார்கள். அவர்கள் ரோஜாக் கன்னங்கள் ஆப்பிள் பழங்களைப் போல உருண்டையா யிருந்தன. மந்திரியார் புன்முறுவலுடன் ல்யூபோவ் சாபான் பக்கம் திரும்பி, 'நன்றி. இங்கே உங்கள் விடுதியில் எல்லாம் நன்ருயிருக்கின்றன' என்ருர். அதற்கு அவள் என்ன சொன்னுள் என்று நினைக்கிறீர்கள்? 'தோழர் மந்திரி யவர்களே, நீங்கள் எங்களிடம் எதிர்பார்ப்பது மிகமிகக் குறைவு' என்று வெட்டொன்று துண்டிரண்டாகப் பேச ஆரம்பித்தாளே பார்க்க வேண்டும்! 'இதைப் போய் நன்ரு யிருக்கிறது என்று சொல்கிறீர்களே. திட்டப் பிரகாரம் எங்கள் குழந்தைகளுக்கு இரட்டை மாடி வீடு கிடைத்திருக்க வேண்டும். அது எங்கே? இந்தத் தோட்டத்தை நாங்கள் சொந்த உழைப்பைக் கொண்டு போட்டோம். ஆனுல் இதற்கு வேலி எங்கே? எங்கள் பெண்கள் இந்தக் கன்றுகளை எல்லாம் தங்கள் கையினுல் நட்டது ஆடுகளுக்குச் சுவையான உண்டி அளிப்பதற்கு என்று நினைக்கிறீர்களா?' இப்படி ஒன்றுக்குப் பின் ஒன்ருகப் பொழிந்து தள்ளிவிட்டாள். 'இது ஒரு பெரிய நிர்மாண ஸ்தலம். இங்கே உள்ள ஒவ்வொன்றும் எல்லாவற்றிலும் நல்லதாக, அழகானதாக இருக்க வேண்டும்...' என்ருள். எங்களில்

சிலர் மந்திரியாரை அச்சத்துடன் ஓரக் கண்ணுல் பார்த்தோம். ஒன்றுமில்லே, கேட்டுக் கொண்டிருந்தார். ஆழ்ந்த கவனத்துடன் கேட்டுக் கொண்டிருந்தார், ஆனுல் கண்களில் மட்டும் சிரிப்பு மின்னிட்டது. 'நீங்கள் சொல்வது சரி, ரொம்ப சரி' என்ருர் அவர். அத்தோடு அவள் விட்டுவிட்டாள் என்று நினேக்கிறீர்களா? அதுதான் இல்லே. 'சொல்வது சரி என்பது எனக்கே தெரியும். நான் சொன்னவை எல்லாம் குழந்தைகளுக்குக் கிடைக்குமா இல்லேயா? அதைச் சொல்லுங்கள் முன்னே' என்று கேட்டாள். 'கிடைக்கும், திட்டத்தில் குறிப்பிட்டிருப்பவை எல்லாம் கட்டாயமாகக் கிடைக்கும்' என்று மந்திரி பதிலளித்தார்.

''அப்பேர்ப்பட்டவளாக்கும் இந்த ல்யூ போவ் சாபான். எங்கள் பெண்கள் எல்லாம் அவளேத் தலேயில் தூக்கிவைத்துக் கொண்டாடிஞர்கள். எங்களுக்கும் ஒரே மகிழ்ச்சி. குழந்தைகள் இல்லத்தை மேல்பார்ப்பதற்கு அவளே விடத் தகுந்தவள் தேடிஞலும் கிடைத்திருக்க மாட்டாள் அல்லவா?

''ஒரு நாள் மாலே நான் இந்தக் காரியாலயத்தில் தன்னந்தனியாக உட்கார்ந்து ஓர் அறிக்கை தயாரிப்பதற்காகப் படித்துக்கொண்டும் விவரங்கள் சேகரித்துக்கொண்டும் இருந்தேன்.

திடீரென்று கதவைத் தட்டிய சத்தம் கேட்டது. பார்க்கிறேன், ல்யூபோவ் சாபான் வந்து நிற்கிருள். 'இவ்வளவு நேரங் கழித்து வந்ததற்கு மன்னிக்க வேண்டும்' என்று சொல்லிவிட்டு, என்னைத் தனிமையில் பார்க்க விரும்பியதாகக் கூறிஞள். இப்போது நீங்களும் நானும் உட்கார்ந்திருக்கிருேமே, இதே சோபாவில் உட்கார்ந்து கொண்டாள்.

" 'இதோ பாருங்கள், ஒரு விஷயம் முன்னதாகவே பேசித் தீர்த்துக்கொள்வோம். நான் சொல்லப் போவது எல்லாம் வெறும் வெட்டிப் பேச்சல்ல. எல்லாவற்றையும் முன்னதாகவே நன்ருக யோசித்து முடிவு செய்திருக்கிறேன்' என்று பீடிகை போட்டாள்.

" 'புரிகிறது. விஷயமென்ன?' என்றேன்.

" 'விஷயம் இதுதான்: சிசு பராமரிப்பு நிலையத்து வேலையிலிருந்து எனக்கு விடுதலை அளியுங்கள். அதோடு கொத்து வேலைப் பயிற்சிப் பள்ளியில் நான் சேருவதற்கு உதவி செய்யுங்கள். அங்கே பெண்களை விருப்பத்துடன் சேர்த்துக் கொள்வதில்லையாம். அதனுல்தான் கேட்கிறேன்.'

"நான் அவள் மனதை மாற்ற முயன்றேன், ஆனுல் அவள் மசியவில்லை.

" 'என்ன நேர்ந்தது? யாராவது தவருக நடந்து கொண்டார்களா? குழந்தைகளோடு

பாடுபடுவது சலித்துப் போயிற்ரு? இல்லை, ஒருவேளை களைத்துப் போய்விட்டீர்களா? விடு முறை வேண்டுமா? ஏதாவது ஓய்வு விடுதிக்குப் போக விரும்புகிறீர்களா?' என்று கேட்டேன்.

''அவள் வேண்டாம் என்று தலையை அசைத்தாள்.

'' 'என்னிடம் தவருக நடந்து கொள் வதற்கு யார் இருக்கிருர்கள்? குழந்தைகளோ, எனக்கு உயிர். களைப்படைவதற்கு என்ருல் முடியவே முடியாது. அப்படி யெல்லாம் ஒன்றும் நேர்ந்துவிடவில்லை. நான் கொத்து வேலை கற்றுக்கொள்வதற்கு அனுமதி கொடுங்கள்' என்ருள். அதோடு கூடவே, 'குழந்தைகள் இல்லத்தில் வேலைகள் ஒழுங்காக நடந்து வருகின்றன. வேலையாட்கள் தேர்ச்சி பெற்று விட்டார்கள். மேல்பார்வைக்கும் ஓர் ஆளைக் குறிப்பிடுகிறேன். அவளை விடத் தகுந்தவர் கிடைப்பது அரிது' என்று மிகவும் யுக்திப் பொருத்தமாக விளக்கிஞள். தன் வேலைக்கு ஓர் எஞ்சினீயரின் மனைவி பெயரைச் சிபாரிசு செய்தாள். அந்தப் பெண் அற்புதமான அறிவுள் ளவள்.

''அப்புறம் நான் என்ன சொல்ல முடியும்? 'அப்படியாஞல், சரி. பொறுப்பை ஏற்றுக் கொள்வதற்கு ஒருவர் இருக்கிருர், உங்களுக் கும் கொத்து வேலைப் பயிற்சி பெறுவதற்கு

மனப்பூர்வமான ஆர்வம் இருக்கிறது. ஆகவே நிர்மாண வேலைத் தலைவரிடம் உங்களைப் பற்றிச் சிபாரிசு செய்கிறேன்' என்று சொன்னேன்.

"அவள் எனக்கு நன்றி தெரிவித்தாளே தவிர வெளியே போகவில்லை.

"'இன்னும் ஏதாவது இருக்கிறதா?' என்று கேட்டேன்.

" 'ஆம், இருக்கிறது. உங்கள் யெகோர் உஸ்த்தீனேவ் இன்னும் பொது விடுதியிலே தனியா யிருக்கிறார். அவருடைய மூன்று குழந்தைகளும் காலூகாவில் அவருடைய கிழ அத்தையுடன் இருக்கிறார்கள். இது சரியல்ல. நமது புதிய வீடுகள் ஒன்றில் அவருக்குத் தனி இருப்பிடம் அளிக்கப்பட வேண்டும். குழந்தைகளைப் பிரிந்திருப்பது தகப்பனுக்கு எளிதென்று நினைக்கிறீர்களா?'

" 'அவன் ஏன் ஒருபோதும் இதைப்பற்றி என்னிடம் சொல்லவில்லை?'

" 'அது அவர் சுபாவம். வேலைக்காக என்றால் தொண்டை கிழியக் கத்துவார். தனக்காக என்றால் குளிர்காலத்தில் பனிக்கட்டித் துண்டு கேட்பதற்குக் கூடக் குரல் எழும்பாது. இத்தகைய விஷயங்களை ஒருவர் கேட்கும்வரை காத்திராமல் நீங்களே முடிவு செய்திருக்க வேண்டும்.'

''மறு நாள் நான் யெகோருடன் பேசி னேன். அவனுடைய சொந்த விஷயங்களைப் பற்றி ல்யூபோவ் கூறியதெல்லாம் சரி என்று அறிந்து எனக்கு வெட்கம் உண்டாயிற்று. ல்யூ போவைப் பற்றி உஸ்த்தீனோவிடம் விசாரிப் பதற்கு இப்போது தான் முதல் முறையாக எனக் குத் தருணம் வாய்த்தது. ஆகவே துருவித் துருவிக் கேட்டேன். சாதாரணமாகவே அவன் கமுக்கமான பேர்வழி. இப்போது ல்யூபோவ் பெயரைக் கேட்டதுமோ வாயை இறுக்க மூடிக் கொண்டுவிட்டான். எங்கள் பேச்சின் பொழுது தரையையே குத்திட்டுப் பார்த்தவண்ணமாய் இருந்தான். அவனிடமிருந்து ஒவ்வொரு வார்த் தையையும் நான் நெம்பு கோல் போட்டுக் கெல்லி எடுக்க வேண்டியதாயிற்று.

'' 'இந்த ல்யூபோவ் சாபான் இருக்கிறு ளே, நல்ல மாதிரி' என்றேன்.

'' 'மோசமில்லை' என்றுன்.

'' 'ரொம்ப காலமாகப் பழக்கமுண்டோ?'

'' 'எட்டு ஆண்டுகளாக.'

'' 'ஒரே ஊர்க்காரர்களா?'

'' 'இல்லை. சண்டை நாட்களில் இரண்டு பேரும் ஒரே ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற் ரேம்.'

'' 'உங்களுக்குள் காதல்—கீதல் ஏதாவது?'

''அவன் வறட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

'' 'அப்போது என் மனைவி உயிரோடு இருந்தாள். தவிர ஆஸ்பத்திரியிலே காதல் எப்படி? நிறையப் பேசிக்கொண்டோம் என்பது உண்மைதான், ஆனால் போர்வீரர்களின் முறையிலே, வாழ்க்கையைப் பற்றியும் மற்ற விஷயங்களைப் பற்றியும்.'

'' 'நல்லது, இப்போது?'

'' 'இப்போது ஒருவரையொருவர் பார்க்கும்போது 'வணக்கம்', 'போய் வருகிறேன்' என்று பொதுவாகச் சொல்லிக்கொள்கிறோம். கட்சிக் கூட்டங்களில் சந்திக்கிறோம். அவள் தான் இப்போது எப்படி ஆகிவிட்டாள் பாருங்களேன்! இந்த வட்டாரம் முழுவதற்கும் அவள் தான் எல்லோரிலும் முதல். இல்லையா?'

'' 'அவளுக்குக் கொத்து வேலை கற்றுக் கொள்ள வேண்டுமாம். உன் கருத்து என்ன? அனுமதிக்கலாமா?'

''இந்தக் கேள்வி அவனைத் திடீரென்று தட்டி எழுப்பியது போலத் தென்பட்டது. ஆனால் கண நேரத்திற்குத்தான். மறு க்ஷணமே அவன் முன்போலவே பட்டும் படாததுமாக, ' இது உங்கள் விவகாரம். அவள் கொத்து வேலையில் நல்ல தேர்ச்சி பெறுவாள் என்பது எனக்குத் தெரியும். எப்போதுமே அவள் எதில் முனைந்தாலும் அதை அடைந்தே தீருவாள். அவள் மாதிரியே அப்படி.... ஆமாம், வேறு

ஏதாவது என்னிடம் கேட்க வேண்டுமா உங் களுக்கு?' என்முன்.

''யெகோர் உஸ்த்தீனேவ் சொன்னது சரி யாயிற்று. அரை ஆண்டுக்குள்ளேயே ல்யூபோவ் சாபான் கொத்து வேலைக்காரி ஆகிவிட்டாள். அதுவும் எப்படிப்பட்ட வேலைக்காரி! கஞ்சி போட்டு இஸ்திரி செய்த கௌனும் வெள்ளை வெளேரென்ற தலைக்குட்டையுமாகவே அவளைப் பார்த்து எங்களுக் கெல்லாம் வழக்கமாகி விட்டது. ஆகவே பயிற்சி முடிந்த பின் கித் தான் உடையும் முரட்டுக் கையுறைகளும் கனத்த ரப்பர் பூட்சுகளுமாக அவளை எதிரே கண்டபோது விசித்திரமாயிருந்தது. ஆனால் புதிய வேலையும் நொடிப்போதில் அவளுக் குக் கைவந்துவிட்டது. அவள் கற்ற கல்வி, அவளுடைய இயல்பான திறமைகள் ஆகியவற் றுடன் கூட, அவளுடைய அறிவு வேட்கை, தன் வேலையில் ஒவ்வொரு புது விஷயத்தையும் கற்றுக்கொண்டு தீர வேண்டும் என்ற உண்மை யிலேயே அடக்க முடியாத ஆசை, அவளுடைய முன்னேற்றத்துக்கு உதவுகிறது என்று நான் நினைக்கிறேன். எங்கள் கட்சி அங்கத்தினர்களின் அரசியல் பயிற்சி பற்றி ஒரு முறை அறிக்கை தயாரித்தபோது அவர்களுடைய புத்தகாலயப் பதிவுச் சீட்டுக்களைப் பார்வையிட்டேன். அடே யப்பா, அந்த ஒரு வருஷத்தில் ல்யூபோவ்

சாபான் படிக்காத புத்தகமே கிடையாது என்று தோன்றியது! அவ்வளவு புத்தகங்கள் அவள் சீட்டில்!

''புதிய வேலையின் நெளிவு சுளுவுகளைத் தெரிந்து கொண்டபின்பு ல்யூபோவ் சாபான் தயக்கமின்றி மளமளவென்று முன்னேறினாள்: சில மாதங்களில் அவள் குழுத் தலைவி பதவிக்கு உயர்த்தப்பட்டாள். அது முதல்தான் யெகோர் உஸ்த்தீனேவுடன் அவளுடைய தகராறுகள் ஆரம்பமாயின.

''நிர்மாணம் பற்றி விவாதிக்கும் பொருட்டு எப்போது கூட்டம் கூடினாலும் ல்யூபோவ் மேடை மீது ஏறி, ஒருவர் பாக்கியில்லாமல் தொலித்துப் போட்டு விடுவாள். அதிலும் யெகோர் உஸ்த்தீனேவை எல்லோரையும் விடக் கடுமையாக. அவளுடைய வார்த்தைகளை உதறித் தள்ளுவதோ, பதில் பேசாமல் அலட்சியமாக விட்டு விடுவதோ நடவாது. அவள்தான் வெற்றுச் சொல் பேசுவதே கிடையாதே. ஒவ்வொரு சொல்லும் காரியார்த்தமானது. யெகோரால் போனால் போகிறதென்று விடவே முடியாது. அதனால்தான் இரண்டு பேருக்கும் மோதல்கள் ஏற்படும். அவன் நல்ல வேலையாளி, புது வழிகளைக் கண்டு பிடிப்பவன். த்னீப்பர் நீர்மின் நிலையத்தில் பல ஆண்டுகள் வேலை செய்து அனுபவம்

பெற்றவன். அவன்கீழ் வேலை செய்த குழுவின ரும் எல்லா வகையிலும் அவனுக்கு ஏற்றவர்கள். அவனுடைய சொல்லுக்கு எல்லோரும் மதிப்புக் கொடுப்பார்கள், அது அவனுக்குப் பழக்கமாகி விட்டது. ல்யூபோவ் இப்படி எடுத்தெறிந்து பேசுவதைக் கேட்டு அவனுக்கு ரோசம் பொத் துக்கொண்டு வரும்.

'' 'அனுபவம் என்னவோ உன்னிடம் ஏரா ளமாக இருக்கிறது, யெகோர் உஸ்த்தீனேவ், ஆனால் அதை மற்றவர்களுக்கு முழுதும் வழங்க உனக்கு மனம் வருவதில்லை. ஒரு சில தந்திரங்களை உள்ளுக்குள்ளே பதுக்கி வைத் துக்கொள்வதும் இந்த உபரி யுக்திகளால் சுளுவாக முதலிடத்தைத் தட்டிக்கொண்டு போவதும் உனக்கு வழக்கமாகி விட்டன' என் பாள்.

''அவன் அனுபவ ஞானத்தைக் கொண்டு அவளைத் தாக்கப் பார்ப்பான். அவளோ, விஞ் ஞான அறிவால் அவனை மடக்கி விடுவாள். பெரிய ஆள் அவள். சொந்த யோசனையின் பேரில் அவளாகவே சிமெண்ட் ஆராய்ச்சி நிலையத்துடனும் லெனின்கிராட் எஞ்சினீயரிங் நிலையத்துடனும் கடிதப் போக்கு வரத்து தொடங்கினுள். நவ நவமான தகவல்கள் எல் லாம் அங்கிருந்து அவளுக்குக் கிடைக்கின்றன.

''ஆரம்பத்தில் புது முறைகள் பற்றிய

அறிவைமட்டும் கொண்டு அவள் யெகோரைத் தாக்கிவந்தாள். ஆனால் பின்போ, வேலையில் அதிக உற்பத்தித் திறனால் அவனைத் திக்கு முக்காடச் செய்துவிட்டாள். அதற்கு முன்பு யெகோருடன் ஒப்பிடுவதற்கு எவரும் இல்லை. அவனுக்கு ஈடு ஜோடி ஒருவருமே கிடையாது. திட்டத்தில் குறித்த அளவுக்கு மேல் அதிகப் படியாக ஐம்பது சதவிகிதமாவது நிறைவேற்றாமல் அவனுடைய குழுவினர் ஒருபோதும் இருந்ததில்லை. விழாநாட்களுக்கு முன்போ குறித்த அளவுக்கு இரண்டு மடங்கு நிறைவேற்றிவிடுவார்கள். இதற்காக அவனை எல்லோரும் பாராட்டுவார்கள். இப்போது என்னடா என்றால் ல்யூபோவும் அவள் குழுவினரும் அவனை நெருங்கிவந்துவிட்டார்கள்; அவன் குதிகாலில் இடறத் தொடங்கிவிட்டார்கள். அவன் ஒரு துளி தளர்ந்தானோ, போச்சு, அவர்கள் கட்டாயமாக முந்திவிடுவார்கள். முந்தியும் விட்டார்கள் போங்களேன். இப்போது வெற்றிச் செங்கொடி ல்யூபோவ் சாபானின் குழு வசம் இருக்கிறது.

''உஸ்த்தீனோவுக்கு இதெல்லாம் வேம்பாய்க் கசப்பதாகவும் ல்யூபோவின் பெயரைக் கேட்கவே அவனுக்கு வெறுப்பாயிருப்பதாகவும் கட்சி அங்கத்தினர்களான கொத்தர்கள் என்னிடம் சொன்னார்கள். உஸ்த்தீனோவ் இப்

போது முன்னிலும் அதிகமாக மௌனம் சாதிக்கலானுன். கடப்பாரை கொண்டு கெல்லிஞல் கூட அவன் வாயிலிருந்து ஒரு வார்த்தை வரவழைக்க முடியவில்லையென்முல் பார்த்துக் கொள்ளுங்களேன்! ஆகக் கடைசியில் நிலைமை எந்த அளவுக்குப் போய்விட்டதென்ருல் அவள் அறைக்குள் நுழைவதும் உஸ்த்தீஞேவ் அறையிலிருந்து வெளியேறுவதும் ஒன்ருய் நடக்கும். இந்தத் தகராறு சொந்த விவகாரத்தின் வரம்பை மீறிப் போகிறது என்று கண்டு நாங்கள் கட்சிக் கமிட்டிக் கூட்டம் கூட்டி அவர்கள் இருவரையும் அழைத்தோம். 'நீங்கள் இருவரும் கட்சி உறுப்பினர்கள். கட்சியைச் சேராதவர்களுக்கு எத்தகைய உதாரணம் நீங்கள் காட்டுகிறீர்கள்?...' என்று குத்திக்காட்டி அவர்களை வழிக்குக் கொண்டுவர முயன்ருேம். அவர்கள் வாயே திறக்கவில்லை. 'நமது இரண்டு தலைசிறந்த கொத்தர் குழுக்களின் தலைவர்களாகிய நீங்கள் ஒருவருக் கொருவர் உதவி செய்ய வேண்டாமா, மற்றவர்களுக்கு முன்னேற வழி செய்ய வேண்டாமா?' என்று சொன்ஞேம். இருவருக்கும் முகம் சிவந்துவிட்டது. குரல் எழும்பவில்லை. நாங்கள் சொன்ன இடித்துரைகளை எல்லாம் தரையில் வைத்த கண் நிமிர்த்தாமல் கேட்டுக் கொண்டிருந்தார்களே தவிர இருவரில் ஒருவராவது முணுக் கென்றுகூடச் சொல்லவில்லை.

'' 'உங்கள் சண்டைக்குக் காரணம் என்ன என்று கட்சிக் கமிட்டிக்கு விளக்கும்படி கோருகிறோம்' என்றோம்.

''இதைக் கேட்டதும் உஸ்த்தீனோவ் கட கடவென்று சிரித்து, 'அவளே சொல்லட்டும். நம்மில் எல்லாரையும் விடக் கெட்டிக்காரி ஆயிற்றே அவள். எல்லோருக்கும் கற்றுக்கொடுக் கிறாள் அல்லவா?' என்று சொன்னான்.

''ல்யூபோவ் அவனை ஏறெடுத்துப் பார்க் காமலே, 'இல்லை, அவரே விளக்கட்டும். அவ ரிடம் அபாரமான அனுபவம் இருக்கிறது. இந்த அனுபவக் களஞ்சியம், புதுமையானது எதை யும் பார்க்க விடாதபடி அவர் கண்களை மறைக் கிறது' என்றாள்.

''ஆக இருவருக்கும் இன்னொரு சொற் போர் தொடங்கி விட்டது. அவர்களுடைய இந்தப் போக்கு காரணமாகக் கட்சிக் கமிட்டி அவர்களைக் கண்டிப்பது அவசியமாகிவிட்டது.

''அவர்களை வழிக்குக் கொண்டு வருவதில் அன்றைக்கு எங்களால் ஒன்றும் முடியவில்லை என்று ஒப்புக்கொள்கிறேன். சம்பிரதாயப்படி பார்த்தால் எல்லாம் சரிவரத்தான் நடந்தேறி யது. தங்கள் காரியத் தொடர்புகளை ஒழுங்கு படுத்திக்கொள்வதாக இருவரும் வாக்களித் தார்கள். இனிமேல் கம்யூனிஸ்டுக்கு உரிய முறையில் மற்றவர்களின் குறைகூறலைக் காது

கொடுத்துக் கேட்டு அவற்றுக் கிணங்க நடப் பதாக உஸ்த்தீனேவ் உறுதி மொழிந்தான். அதெல்லாம் கச்சிதமாகத் தான் முடிந்தது. இருந்தாலும் எனக்கென்னவோ சாராம்சத்தில் ஒரு சிக்கலும் தீரவில்லை, அவர்களுடைய பிணக் குக்குக் காரணம் என்ன என்று தெளிவாக வில்லை, எனவே அது அகற்றப்படவில்லை என்று பட்டது. நான் ஏதோ சாக்குச் சொல்லி உஸ்த் தீனேவை நிறுத்திக்கொண்டேன். அவன் புதிய வீட்டுக்குக் குடியேறியது முதல் நாங்கள் இரு வரும் அனேகமாக அண்டை வீட்டுக்காரர்கள் ஆகிவிட்டோம். ஆகையால், கட்சிக் காரி யாலயத்திலிருந்து ஒன்றுகவே புறப்பட்டோம். இருவரும் தனியே வழி நடக்கையில் அவனை எப்படியாவது மனதைத் திறந்து பேச வைத்து விடலாம் என்று எண்ணினேன். அது ஆகிற காரியமா? முள்ளம்பன்றி முட்களைத் துருத்திக் கொண்டு பந்து போல் சுருண்டு விடுமே, அப் படிக் கெட்டியாகச் சுருண்டுவிட்டான் அவன். பல்லைக் கடித்துக்கொண்டு ஒவ்வொரு வார்த் தையையும் துப்புவதுபோலப் பேசினான்.

“ ‘தெரியாமல் ஒருவர் மனதை ஒருவர் புண்படுத்திவிட்டீர்களோ ஒருவேளை?’

“ ‘இல்லை.’

“ ‘ஏதாவது பழைய தகராறோ?’

“ ‘எங்கிருந்து?’

'' 'அப்படியானல் ஒருவேளை உங்களுக்குள் பொருமையா என்ன, உங்களைச் சைத்தான் வாரிக்கொண்டு போக?'

''இதற்கு அவன் ஒன்றும் பதில் சொல்லவில்லை. பற்களை மட்டும் முன்னிலும் இறுக்கக் கடித்துக் கொண்டான். கன்னத்துத் தசைநார்களெல்லாம் விறைத்து நின்றன. ஒருவேளை இந்த ஆள் அந்தப் பெண் ல்யூபோவ் சாபான் மேல் கண்தலை தெரியாமல் காதல் கொண்டு விட்டானே என்று அப்போதுதான் என் மூளையில் உதித்தது. அந்த நிலைமையில் இப்படித் தோன்றியது விசித்திரந்தான் என்று நினைக்கிறீர்களல்லவா? அது சரியே, இருந்தாலும் வாழ்க்கையிலே எதுதான் நடப்பதில்லை?

''ஏதோ போகிற போக்கில் சொல்வது போல, ல்யூபோவ் சாபான் இங்கே முதல் தடவை வந்ததுமே அவனைப் பற்றி விசாரித்தது, அவனுக்குத் தனி வீடு கொடுக்க வேண்டும் என்று ஆர்ப்பாட்டம் செய்தது, அவன் குழந்தைகளைப்பற்றிக் கவலை காட்டியது எல்லாவற்றையும் நான் அவனிடம் சொன்னேன். என் வார்த்தைகளையெல்லாம் அவன் மௌனமாக, ரொம்பக் கவனிக்காதது போலக் கேட்டுக் கொண்டிருந்தான். ஆனலும் அவனுக்குள் விறைப்பும் வேதனை தரும் இறுக்கமும் உண்

டாவது போல எனக்குப் பட்டது. திடுமென அவன் நின்றான்.

" 'என்னிடம் எதற்காக நீங்கள் பிரசாரம் செய்கிறீர்கள்? அவள் எப்பேர்ப்பட்டவள் என்பதைத் தான் ஆஸ்பத்திரியில் பார்த்த போது முதலே அறிவேனே. உலகமெல்லாம் தேடினாலும் அவளைப் போல இன்னொருத்தி கிடைப்பாளோ என்னவோ. அவள் மட்டும், ஓ....' அவன் கோபத்தோடு கையை உதறி விட்டு, 'போய்வருகிறேன்' என்று மரியாதைக்குக் கூடச் சொல்லாமல், எதிர்ப்பட்ட முதல் சந்துக்குள் திரும்பி விறுவிறென்று நடந்துவிட்டான்.

"எனக்கு நன்றாக நினைவிருக்கிறது, உஸ்த்தீனோவுடன் இந்தப் பேச்சு நடந்தது வியாழக்கிழமையன்று. அடுத்த திங்கள் கிழமை நிர்மாண ஸ்தலத்தை நான் பார்வையிட்டுக் கொண்டிருந்த போது ஓர் ஆள் மூச்சுத் திணற என்னிடம் ஓடிவந்து, 'அணையில் விபத்து! சிமெண்டு பிளாக்கு கொக்கியிலிருந்து நழுவி விட்டது, உஸ்த்தீனோவுக்குப் பலத்த காயம்' என்று கத்தினான்.

"அணை அருகாமையில் தான் இருந்தது. எனவே நான் விபத்து நடந்த இடத்திற்குத் தடதடவென்று போய்ச் சேர்ந்தேன்.

"யெகோர் உஸ்த்தீனோவ் கித்தான் விரிப்

பில் படுத்திருந்தான். இரத்தம் எங்கும் தென்படவில்லை. மூச்சு இழைந்து கொண்டிருந்தது. கண்கள் மூடியிருந்தன. மெழுகு பொம்மை போல அசையாமல் கிடந்தான். அவன் அருகே டாக்டரும் தாதியும் மும்முரமாக வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். இந்த மாதிரிச் சந்தர்ப்பங்களில் எப்போதும் நடப்பது போலவே, காயமடைந்தவனைச் சுற்றி ஒரு கும்பல் கூடியிருந்தது. இருந்தாலும் அங்கே நிலவிய மௌனத்தில் யெகோர் மிகக் கஷ்டத்துடன் கர் கர் என்று விட்ட மூச்சுக் கூடக் கேட்டது.

''திடீரென்று ஒரு பெருங் கூச்சல், நெஞ்சைப் பிளக்கும் பெண்குரல், கேட்டு எங்கள் உடம்பெல்லாம் புல்லரித்தது. ஆடையும் தலையும் ஒரே அலங்கோலமாய், அழுது புலம்பிக் கொண்டு வந்த ஒரு பெண் எல்லோரையும் இடித்து விலக்கி, உஸ்த்தீனோவ் கிடந்த இடத்துக்குச் சென்று, வெட்டுண்ட மரம் போலத் தடாலென்று அவன் அருகே விழுந்தாள்.

'' 'யெகோர், என் கண்ணே, என்ன நேர்ந்தது? என் கட்டிக் கரும்பே, கண்ணைத் திறந்து பாரேன்!' என்று அழுதாள், பாருங்கள், நெஞ்சு வெடித்து விடும் போல அழுதாள். இதைக் கேட்டதும் உஸ்த்தீனோவ் கண்களைத் திறந்தான். அந்தப் பெண்பிள்ளையை ஒரே ஆச்சரியத்துடன் பார்த்தான். தன் மீதே

அவனுக்கு நம்பிக்கை உண்டாகவில்லை போல் இருந்தது. தான் காண்பது உண்மைதானு, இல்லை சுர வேகத்தில் தோன்றும் மயக்கமா என்று நிச்சயப்படுத்திக் கொள்பவன் போல வெறித்து நோக்கினுன். திடீரென்று அவன் கண் கள் பளிச்சிட்டன. அந்தக் காட்சி என் மனதில் மிகமிகத் தெளிவாகப் பதிந்தது. படுகாய மடைந்து இப்போதுதான் உணர்வு பெற ஆரம் பித்திருந்த இந்த மனிதனின் கண்களில் ஒளி விட்டது தூய்மையான இன்பம். வெளியா ளுகிய நான் அதைக் காண்பது முறையாகாது என்று எனக்குப் பட்டது. பின்பு அந்தப் பெண் அவனை மார்பு சேரத் தழுவிக்கொண்டு அவன் தலைமயிரை வருடியவாறே, 'நீ பிழைத்திருக் கிருய், உயிரோடிருக்கிருய், என் அன்பே, என் செல்வமே, எத்தனை வருடங்களாக உன்னை நெஞ்சிலே வைத்துப் பேணிவந்தேன்!' என்று மெல்லிய குரலில் மொழிந்தாள். அவள் கண் களிலிருந்து பெருகிய கண்ணீர் அவன் முகத் தின் மேல் முத்து முத்தாகச் சிந்தியது.

''தலைவிரிகோலமாய், சீர்குலைந்து, கண் ணீரும் கம்பலையுமாக விளங்கிய இந்தப் பெண் வேறு எவருமில்லை, ல்யூபோவ் சாபான் தான் என்பது அப்போதுதான் என் அறிவுக்கு எட்டி யது. எனக்கு ஒரே வியப்பாய்ப் போய்விட்டது. ஆம், அது அவளேதான். எனக்கோ நம்புவதே

கஷ்டமாயிருந்தது. நம்மை அறியாமலே பிற ருடைய இரகசியத்தில் குறுக்கிட்டுவிட்டோமே என்ற எண்ணத்தால் எனக்கு ஒரே கூச்சமாய்ப் போய் விட்டது. அங்கிருந்த மற்றவர்களும் இதே உணர்ச்சியினால் மறு புறம் திரும்பிக் கொண்டு மெதுவாக நழுவத் தொடங்கினார் கள். வைத்தியர் தமது கருவிகளைத் தோல் பைக்குள் வைப்பதில் முனைந்திருந்தார். நிலை மை என்ன என்று அவரைக் கேட்டேன்.

'' 'மோசமில்லை. எலும்புகள் எல்லாம் உருப்படியாக இருக்கின்றன. இவ்வளவு லேசா கத் தப்பியது அவன் அதிர்ஷ்டம் தான்' என்று சொல்லிவிட்டு ல்யூபோவ் சாபான் பக்கம் திரும்பி, 'இந்தா அம்மா, அவனை அலட்டாதே. அவனுக்கு இப்போது அமைதி வேண்டும். தழுவுவதெல்லாம் அப்புறம் வீட்டிலே செய்து கொள்ளலாம்'' என்றார்.

'' 'வீட்டிலே' என்ற சொல் கேட்டதுமே ல்யூபோவ் சாபான் சட்டென்று நிமிர்ந்து, எழுந்து நின்று, கலைந்த தலைமயிரை நருவி சாகக் கோதி, தலைக்குட்டையைப் பாங்காகக் கட்டிக்கொண்டாள். அவள் முகத்தில் எப் போதும் போன்ற கடுத்தம் வந்துவிட்டது. சற்று முன்பு சாதாரணப் பெண்பிள்ளைபோலக் கண்ணீர் விட்டுக் கதறி அழுதவள் இவளல்ல என்னும்படியா யிருந்தது அந்த உருமாற்றம்.

யெகோர் முனகினுன். ல்யூபோவ் சட்டென்று அவனைப் பார்த்தாள். அவள் கண்களில் மீண்டும் மென்மை வந்துவிட்டது. பெண்மைப் புன்முறுவல் இந்த உதடுகளிலிருந்து இனி நீங்காது, கருநாவல் கனிகள் போன்ற இந்தக் கண்களில் ஒளிரும் காதல் சுடர் இனி என்றும் மங்காது என்று நான் அறிந்து கொண்டேன்.

''ல்யூபோவும் உஸ்த்தீனேவும், தங்கள் உள்ளங்களின் உறவைப் புரிந்துகொள்வதற்கு இந்த விபத்துத்தான் உதவியது.

''இந்த விபத்து நடக்காவிட்டால் என்ன நேர்ந்திருக்குமோ, யார் கண்டது? அவர்களுடைய ஆழ்ந்த செருக்கும், எங்களுடைய குறுகிய பார்வையும் சேர்ந்து அவர்களை ஒருவரை யொருவர் நெருங்கவொட்டாமல் தனிப்படுத்தியிருக்கும். ஒரு வார்த்தைகூடச் சொல்லிக்கொள்ளாமல் இருவரும் பிரிந்து போயிருப்பார்கள்.

''இப்போது உள்ளதைச் சொல்லுங்கள், கதை எப்படி, சுவையானதா இல்லையா? சந்தேகமில்லாமல் சுவையானது. கட்சி வேலையில் ஈடுபட்டிருக்கும் என் போன்றவர்களுக்கு இதனுல் ஒரு படிப்பினையும் கிடைக்கிறது. ஜனங்களை ஆழ்ந்து அறிந்துகொள்ள வேண்டும், உரிய

தருணத்தில் அவர்களுக்கு உதவ வேண்டும் என்பதுதான் அந்தப் படிப்பினை.

''மேலே சொல்வதற்கு என்ன இருக்கிறது? இரண்டு பேரும் கலியாணம் செய்து கொண்டார்கள். அவன் குழந்தைகளுக்கு அவள் ஆதர்சத் தாயாக விளங்குகிறாள். நிர்மாண சம்பந்தமான கூட்டங்களில் தொண்டை கிழிய விவாதிப்பது மட்டும் இன்னும் நடந்துவருகிறது. ஆனால் ஒன்று. யெகோர் இப்போது தன் தவறுகளை ஒப்புக்கொள்ள ஆரம்பித்திருக்கிறான். கலியாணம் பதிவான போது அவள் அவனுடைய குலப் பெயரைத் தனதாக்கிக் கொண்டாள். இந்த ஆறுமாதமாக அவளுடைய பாஸ்போர்ட்டில் ல்யூபோவ் உஸ்த்தீனேவா என்ற பெயரே காணப்படுகிறது. ஆனால் நாங்கள் எல்லோரும் — அவள் புருஷன் உள்பட — ல்யூபோவ் சாபான் என்றே அவளை அழைக்கிறோம்.

''இவ்வளவு தான் கதை. சுவையானது என்று தோன்றினால் நீங்கள் பிரசுரித்துக் கொள்ளலாம்.''



யூரீய் ரீத்கேஊ

யூரீய் ரீத்கேஊ (பிறப்பு 1930) சுக்சா இனத்தினர். லெனின்கிராட் பல்கலைக் கழகத்தில் 'ஆஸ்ப்பிராந்த்' எனப்படும் ஆராய்ச்சி வகுப்பில் பயின்று வருகிருர். அவரது தாய் நாடான சுக்கோத்கா தீபகற்பம் எக்காலமும் குளிர் மிகுந்த வெண்பனி யடர்ந்த துந்திர வெளியில் உள்ளது. சுக்சா மக்கள் சிறு தொகையினர் ஆயினும் நுண் திறன் வாய்ந்தவர்கள்,

உழைப்பாளிகள். மென்மயிர்ப் பிராணிகளை யும் கடல்வாழ் உயிர்களையும் வேட்டையாடு வதிலும் எலும்பில் செதுக்கு வேலை செய் வதிலும் மிகத் தேர்ந்தவர்கள்.

சோவியத் ஆட்சிக்கு முன்பு சுக்சா மக்கள் தொகையில் குறுகி அடியோடு அழிந்து போகும் நிலையில் இருந்தார்கள். அதுவரை அவர்களுக்கு என்று எழுத்துக்கள் கூட இருக்கவில்லை. இத் தகைய மக்களில் முதலாவது எழுத்தாளராகத் திகழ்கிறார் யூரீய் ரீத்கேஊ. இவர் சுக்கோத்கா வேட்டைக்காரர் ஒருவரின் புதல்வர். "ஊத் ரோ" ("வைகறை") எனப்படும் வேட்டைக்கா ரர் கூட்டுப்பண்ணையைச் சேர்ந்த தமது கிரா மத்தாரைப் பற்றியும் சோவியத் சுக்கோத்கா மக்களின் புதுவாழ்வைப் பற்றியும் இவர் எழுது கிறார். அவரது சிறு கதைகளும் நாவல்களும் பல மொழிகளில் பெயர்க்கப்பட்டுள்ளன. இந்தத் தொகுதியில் வெளியாகும் "தெக்ரீனேயின் விமானயாத்திரை" என்னும் கதை பெரிதும் இவரது சொந்த வாழ்க்கையை அடிப்படை யாகக் கொண்டது. அறிவை நாடி ஆர்வத் துடன் பாடுபடும் சுக்சா இளைஞர்களை உள்ள படியே சித்திரிக்கிறார் யூரீய் ரீத்கேஊ.

## தெக்ரீனேயின் விமான யாத்திரை

விமானத் திடலில் அடர்ந்திருக்கும் புற்களை வருடுகிற, கண்ணுக்குத் தெரியாத பிரம்மாண்டமான கை யாருடையது?

இந்தக் கை, நொடிப் போது புற்களை நிமிரவிடுகிறது; பின்பு மீண்டும் அவற்றைத் தரையோடு தரையாக அழுத்துகிறது; வருடுகிறது; மேலெழும்ப விடுகிறது; மீண்டும் தடவித் தரையில் அழுத்துகிறது....ஆ, காற்று செய்கிற வேலையா இது! தெக்ரீனே காற்றின் விளையாட்டைக் காண்கிருள்; ஆனல் காற்றை அவளால் பரிசிக்க முடியவில்லை. அவள் தான் விமானத்தின் பிரயாணிகள் அறையில் உட்கார்ந்திருக்கிருளே! கதவோ ஏற்கனவே சாத்தப்பட்டுவிட்டது. இனி வெளிக் காற்று உள்ளே புகவே முடியாது. விமான நிலையத்தின் முகட்டில் பொருத்தியிருக்கும் ஒலிபெருக்கியிலிருந்து

வரும் இராணுவ அணிநடை இசை கூடப் பட்டும் படாமலுமே காதில் விழுகிறது.

விமானத் திடல் மேற்பார்வை அதிகாரி பிரயாணிகளை வழியனுப்ப வந்திருந்தவர்களை விலகிச் செல்லும்படி கூறிவிட்டார். அவர்கள் இப்போது கண்ணுக்குப் புலப்பட வில்லை. விமான ஜன்னல்களின் பருத்த கண்ணாடி வழி யே தென்படுவது காற்றின் பெருங்கரத்தால் தரையோடு தரையாக அழுத்தப்பட்டிருக்கும் புல் மட்டுமே. அதோ புல் பெருக்கெடுத்து ஓடு கிறது, விரைவாக, இன்னும் விரைவாக.

''கிளம்பிவிட்டோம்'' என்கிறார் தெக்ரீ னேக்கு எதிரே உட்கார்ந்திருக்கும் பருமனான பேர்வழி.

விமானம் தரையிலிருந்து மேலெழுந்து விட்டது என்பதை இப்போது தெக்ரீனே தன் கண்களாலேயே காண முடிகிறது. பாய்ந்தோ டும் புற்கள் குறைந்தது இரண்டு கெஜங் களாவது கீழே யிருக்கும். மூன்று கெஜங்கள் கூட இருக்கலாம்.... இரண்டோ மூன்றோ... எதுவானாலும் இந்த உயரத்திலிருந்து தரையில் குதிக்க அவளுக்கு அச்சமாய்த்தான் இருக்கும்.

மேலே, இன்னும் மேலே! தெக்ரீனேக்கு மூச்சுத் திணறுகிறது. தலைமட்டும் கிறுகிறுக்க வில்லை. ''கிறுகிறுக்கவே இல்லை, துளிக்கூட.

எல்லோரும் என்னென்னவோ பயங்கரக் கதை கள் சொன்னுர்களே! அத்தனையும் வீண்தானே. இன்ரீனுக்குக் கடிதம் எழுத வேண்டும். எனக் குத் தலை துளிக்கூடச் சுற்றவில்லை என்று தெரிவிக்க வேண்டும்'' என்று எண்ணுகிருள் தெக்ரீனே.

ஆட்டமோ அசைவோ பெயருக்குக் கூடக் காணுமே. காயாக் படகில் போகும்போது அலைகள் சின்னஞ் சிறியவையா யிருந்தால்கூட ஒரே ஆட்டமாக ஆடும், தூக்கிப் போடுமே. அதோடு ஒப்பிட்டால் இதில் ஆட்டமே இல்லை. காயாக்கில் போவது போல இல்லை இது. ஊஞ் சலைப் போலவோ? ஊஹூம். அதைப் போல வும் இல்லை. பாரமின்மையும், விடுதலையும், உயரமும், வேகமும் — இந்த உணர்ச்சிக்கு எதுவும் ஒப்பாக முடியாது!

விமானம் திரும்புகிறது. அதோ பார், கீழே ஒரு வீடு. விமான நிலையமா யிருக்க முடியுமா இது? ஆம், அதோ நிலையத்துக்கு எதிரே ஜனங் கள் நின்றுகொண்டு கைகளை அசைக்கிருர்கள். அவர்களில் ஒருவர் தெக்ரீனேயின் தகப்பனுர். அவரைத் தனியாக அடையாளம் கண்டுகொள் ளத் தான் முடியவில்லை அவளால். இந்தக் கணத்தில் அவரைப்பற்றி நினைத்துக் கொண் டிராதது அவளுக்குச் சற்று வெட்கமாக இருக்

கிறது. அவரோ நேரமெல்லாம் அவளைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பார். விடை பெற்றுக்கொள்ளும் போது அவருக்குச் சரி யானபடி முத்தங் கொடுக்கக் கூட இல்லை அவள். ஒவ்வொரு தோழியாக முத்தமிட்டு முடிப்பதற்குள் விமானத்தில் ஏற நேரமாகி விட்டது. அப்படி அவசரப்பட்டு ஓடிவந் திருக்க வேண்டியதில்லை தான். ஆனால் அவள் என்ன செய்வாள்? அந்தப் பருமனை மனிதர் அவளுக்கு முன்னே போக வழிவிட்டு ஒதுங்கி நின்றார். ஏறும் படிகளும் குறுகல். தெக்ரீனே சக பிரயாணியைத் தாமதப்படுத்த விரும்ப வில்லை. அது நன்றாயிராதல்லவா? அதிலும் அவள் சின்னஞ் சிறுமி, அவரோ மரியாதைக் குரியவராகக் காணப்பட்டார், தலை நரைத்தவர். ஆகவே அப்பா மெமீல் கன்னத்தில் பட்டும் படாமலும் முத்தம் என்று பெயர் பண்ணி விட்டு தடதட வென்று படியேறிவிட்டாள் தெக்ரீனே.

விமானம் இன்னொரு முறை திடலுக்கு மேலே வட்டமிட்டது. விமான நிலையமும் அதன் எதிரே கூடியிருந்தவர்களும் இன்னொரு முறை தென்பட்டார்கள். ஜனங்கள் இப்போது நுண்ணிய புள்ளிகள் போலத் தெரிந்தார்கள். பின்னர் சமதளமான விமானத் திடல் மறைந்து

அதற்குப் பதில் இளம்பச்சையும் பைம்மஞ்சளுமான மலைகள் கீழே காணப்பட்டன.

''நாம் பாதையில் கிடத்துகிறோம்'' என்று விமான பரிபாஷையில் கூறுகிறார் பருமனான பிரயாணி.

இந்தச் சொல்தொடரைத் தெக்ரீனே இப்போதுதான் முதன் முறையாகக் கேட்கிறாள். இது அவளுக்கு விசித்திரமாகப் படுகிறது. எதற்காகக் 'கிடத்துகிறோ'மாம்?

பருத்த பிரயாணி கடிகாரத்தைப் பார்க்கிறார். ஓ, கடிகாரம் மட்டுமல்ல, திசைகாட்டி கூட அல்லவா கையில் கட்டிக் கொண்டிருக்கிறார்! திசைகாட்டியை விரலால் தட்டி எதிரே சுட்டிக்காட்டியவாறே, ''தெற்கே போகிறோம், நேர் தெற்கே'' என்கிறார்.

தெக்ரீனே முகத்தில் புன்னகை அரும்புகிறது. ''ஆம். விரைவில் இலையுதிர் காலம் வந்துவிடும். இலையுதிர்காலந் தோறும் பறவைகள் உஷ்ணப் பிரதேசங்களை நாடித் தெற்கே செல்லுமே.''

நாமும் பறவை என்று நினைக்கும் போதே எவ்வளவு இன்பமுண்டாகிறது! சக பிரயாணியின் வார்த்தைகள் இப்போது தெக்ரீனேக்குப் புரிகின்றன. நேர் தெற்கே கபாரோவ்ஸ்க் வரையில் கண்ணுக்குத் தெரியாத பாதை ஒன்று இந்த வானக் கடலின் குறுக்காகச் செல்லுகிறது.

விமானத் திடலுக்கு மேலே வட்டமிட்டுப் போதிய உயரத்துக்குச் சென்ற பின்பு விமானி தெற்கு நோக்கி ஓட்டுகிருர். அதாவது அவர் விமானத்தை அதன் பாதையில் கிடத்திவிட்டார். பாதையில் கிடத்தின பின்பு விமானம் மேலும் மேலும் முன்னே பறக்க வேண்டியது தானே! ''பாதையில் கிடத்துதல்'' என்று வாய்க்குள்ளாகவே சொல்லிக்கொள்கிருள் தெக்ரீனே. இப்போது இந்தச் சொல்தொடர் அவளுக்கு வேடிக்கையாகவே படவில்லை. மாருக அதில் ஒரு வகைக் கவர்ச்சி தென்படுகிறது. உத்தியோக பூர்வமான தோரணை அதில் தொனிக்கிறது. தெக்ரீனே மீண்டும் மீண்டும் இந்தச் சொல் தொடரைக் கூறிக்கொள்கிருள். தானே விமானியாகிவிட்டது போல அவளுக்குத் தோன்றுகிறது. விமானியாகவில்லை என்ருலும் மிகுந்த அனுபவமுள்ள பிரயாணியாகவாவது அவள் ஆய்விட்டாள். ஆமாம், முதல் முறை விமானப் பிரயாணம் செய்யும் கற்றுக்குட்டி அல்ல அவள்!

திடீரென விமானத்துக்குள் இருளடைகிறது. ஜன்னல்களுக்கு வெளியே பார்ப்பதற்கு ஒன்றுமே இல்லை. பழுப்பேறிய வெண்போர்வை போல ஏதோ ஒன்று அவற்றை மூடிவிடுகிறது.

''அடேடே, என்ன ஆயிற்று?'' என்று கேட்கிருள் தெக்ரீனே.

எதிரே உட்கார்ந்திருக்கும் பருத்த பிர யாணியோ உறங்கிப் போய்விட்டார். இடப் புற ஜன்னல் அருகே அமர்ந்திருக்கும் வேறெரு பிரயாணி அவளுக்குப் பதில் சொல்லுகிருர்.

''ஒன்றுமில்லை, மேகங்கள். மேகங்களுக்கு நடுவே இருக்கிருேம்'' என்கிருர் அவர்.

நிமிட நேரத்திற்கெல்லாம் விமான அறை மீண்டும் வெளிச்சமாகி விடுகிறது. விமானம் மேகக்கூட்டத்திலிருந்து விடுபட்டு வெளியேறு கிறது. தெள்ளிய காலையொளி ஜன்னல்கள் வழியே உள்ளே பாய்கிறது.

''சுருங்கைக்குள்ளிருந்து வெளிவரும் ரயி லைப் போல. கொஞ்சங் கொஞ்சமாக வெளிச் சமாகிக்கொண்டே வரும். திடீரென ரயில் மலைக்குள்ளிருந்து திறந்த வெளியில் பாயும். அது போலத் தான் இதுவும்'' என்கிருர் இடப் புறப் பிரயாணி.

''நான் ரயிலில் பிரயாணம் செய்ததே கிடையாது'' என்கிருள் தெக்ரீனே.

கீழே நெடுந்தூரம் வரை நீண்டு கிடக்கின் றன மலைகள். அவற்றினிடையே வெள்ளி நாடா போல நெளிந்து நெளிந்து ஓடுகிறது ஓர் ஆறு. சிற்சில இடங்களில் தான் தரை பழுப்புவெண்மைத் திட்டுக்களால் மூடப்பட்

டிருக்கிறது. இவை மேகங்கள் என்று தெக்ரீனே இப்போது அடையாளங் கண்டுகொள்கிறாள். ஒவ்வொரு மேகத்தின் வலப்புறத்திலும் அதன் நிழல் தரையில் படிந்திருப்பது இப்போது அவளுக்குப் புலனாகிறது.

விமானம் மேகங்களுக்கு மேலே பறக்கிறது. தெக்ரீனே கபாரோவ்ஸ்க் நோக்கிச் செல்கிறாள்.

துந்திர வெளி. கொடி போல் துவளும் ஒடிசல் உடம்பினளான பள்ளிச் சிறுமி ஒருத்தி மலர்கள் கொய்து கொண்டிருக்கிறாள். அவள் கையிலிருப்பது? இல்லை, பூங்கொத்தல்ல அது, ''வட புலத்து மலர்கள்'' என்ற தலைப்புக் கொண்ட ருஷ்யப் புத்தகம். அந்தத் தடித்த புத்தகத்தின் பக்கங்களுக்கிடையே அவள் சேகரித்த மலர்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. புத்தகத்திலே ஒரே மாதிரியான மலர்கள் இரண்டு இல்லவே இல்லை. ஒவ்வோர் இனத்துக்கு ஒரு மலர் மட்டுமே.

பூக்கொய்யும் பொருட்டு அவள் குனியும்போது அவளது கருங்கூந்தல் பின்னல்கள் புல்லின் மீது புரளுகின்றன. இருப்பவற்றிலெல்லாம் சிறந்த மலராகத் தெரிந்தெடுத்துக் கொய்கிறாள் அவள், அதுவும் ஓர் இலையுடனே

சேர்த்து. பின்னர் கேசரங்களை எண்ணுகிருன். இதழ் நசுங்கி விடாமலிருக்கும் பொருட்டு மலரைச் செவ்வையாக நேராக்குகிருள். அப்புறம் மிகச் சாவதானமாகப் புத்தகத்துக்குள் வைக்கிருள்.

இந்தப் பெண்தான் தெக்ரீனே, வேட்டைக்காரன் மெமீல் என்பவனின் புதல்வி. அநாதீர் நகரத்தில் மத்தியதரப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த அவள் விடுமுறையின் போது 'புலர் போது' என்ற பெயர் கொண்ட கூட்டுப் பண்ணையில் தன் தகப்பன் வீட்டுக்கு வருவது வழக்கம். அவள் கைக்குழந்தையா யிருந்த போதே தாய் இறந்து போனுள். எனினும் அவள் தந்தைக்கும் அவளுக்குமிடையே இருந்த பாசமும் பரிவும் அவளுடன் படித்த தோழிகளுக்கும் அவர்களின் பெற்ருேருக்கும் இடையே காண முடியாது.

தெக்ரீனே நான்காம் படிவத்தில் இருந்த போது அவளது பள்ளியில் நான்கு படிவங்கள் தாம் இருந்தன. தெக்ரீனேயும் அவள் பள்ளித் தோழிகளும் அதிர்ஷ்டசாலிகள். அவர்கள் நான்காம் படிவத்தைக் கடக்கு முன்னரே அவர்களது பள்ளி, முறையான ஏழாண்டுக் கல்விச்சாலையாக்கப்பட்டது. மூன்று ஆண்டுகளுக்குப் பின் நடந்த கடைசித் தேர்வில் சிறப்பாகத் தேறிய பெண்களில் ஒருத்தியாகத் திகழ்ந்தாள் தெக்ரீனே.

அவள் மேலே படிக்க விரும்பியபடியால் மெமீல் அவளை அநாதீர் நகருக்கு அழைத்துச் சென்றார். அங்கே யிருந்த பத்தாண்டு மத்தியதரப் பள்ளியில் படிப்பு தொடங்கியதுமே தாவர இயலில் அவளுக்கு மிகுந்த விருப்பம் உண்டாயிற்று. செடிகொடிகளின் வாழ்க்கை அவளுக்கு ருசித்தது போல வேறு எதுவும் ருசிக்கவில்லை. இளந் தாவரவிஞ்ஞானிகள் வட்டத்திற்கு அவள் தலைவியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டாள். தாவரத் தொகுதிக்கு மாதிரிகள் திரட்டுவதிலிருந்து வட துருவக் கடுங்குளிர் கூட அவளைத் தடைசெய்ய முடியவில்லை. ஞாயிற்றுக் கிழமைதோறும் ஸ்கீயில் சறுக்கியவாறு வெளியே உலாவச் செல்லுகையில், குளிர்கால மேய்ச்சல் நிலங்களில் கலைமான்கள் வெண்பனியைச் சுறண்டி அகற்றியிருக்கும் இடங்களுக்குத் தோழிகளுடன் போய் வகை வகையான காளான்களைச் சேகரிப்பாள்.

வட்டத்திற்குப் பொறுப்பாசிரியை மரீயா பியோக்திஸ்தவ்னு என்பவள். தான் பிறந்து வளர்ந்த பிரதேசத்தைப் பற்றிக் குழந்தைகளுடன் அவள் அடிக்கடி பேசுவாள். செழுங் காடுகள் மண்டிய ப்ரியான்ஸ்க் பிரதேச நாட்டுப்புறத்தைச் சேர்ந்தவள். அவள் பிறந்து வளர்ந்த கிராமத்தின் பெயரே 'மேல் காட்டார்' என்பதாகும். அதன் மூன்று புறங்களி

லும் அடர்ந்த காடுகள் சூழ்ந்திருந்தன. ஒவ்வொரு குடிசையைச் சுற்றிலும் பழத் தோட்டங்கள். சலசலக்கும் காடுகளைப் பற்றிப் பேசும் போது மரீயா பியோக்திஸ்தவ்னாவின் கண்களில் ஏக்கம் ததும்பும். கடுங்குளிரும் ஈரக் காற்றும் சேர்ந்து ஜன்னல் கண்ணாடிகளில் தீட்டியிருக்கும் பல்வகை ஓவிய வேலைப்பாடுகளை நோக்குவாள் அவள். தெக்ரீனேயும் அவ்வாறே செய்வாள். திரைப்படங்களிலும் பத்திரிகைகளிலும் தவிர வேறு மரங்களையே கண்டிராத அச்சிறுமிக்கு இந்தப் பனி ஓவியங்களே வெள்ளியும் வெண்மையும் போர்த்த குளிர்கால வனங்களாகத் தோற்றும். ஜன்னலுக்கு வெளியே இரையும் பனிச் சூறுவளியையே மரங்களின் சலசலப்பாக — வாழ்நாளில் அவள் ஒருபோதும் கேட்டறியாத ஒலி அது — அவள் கற்பனை செய்து கொள்ளுவாள்.

அந்தக் கோடையில் தெக்ரீனே விடுமுறைக்கு வீடு திரும்பிய போது அவளது சிறு பிரயாணப் பெட்டியில் துணிமணிகள், புத்தகங்கள் தவிர, முற்றி முளை அரும்பிய பத்துப் பன்னிரண்டு வெங்காயங்கள் இருந்தன. தகப்பனாரின் உதவியால் அவள் இரண்டு மரப் பெட்டிகள் செய்து, அவற்றில் மண் நிரப்பி, வெங்காயங்களை நட்டாள். பின்னர் யாராங்கா எனப்படும் குடிசைக்கு வெளியே வெயிலில்

அப்பெட்டிகளை வைத்தாள். இரவுகளிலும் மப்பும் குளிருமா யிருக்கும் பகல்களிலும் இந்தச் 'சமையலறைத் தோட்டத்'தை வீட்டுக்குள் வைத்துவிடுவார் மெமீல். மகளின் விருப்ப வேலையில் தகப்பனுருக்கும் விரைவிலேயே பெருத்த ஈடுபாடு உண்டாகிவிட்டது. வெங்காய வளர்ப்பின் முழுப் பொறுப்பையும் அவரே ஏற்றுக்கொண்டு விட்டார். ஓடையிலிருந்து நீர் கொணர்ந்து அதற்குத் தாராளமாக விடுவார். தெக்ரீனே சொல்லி யிருந்தபடியே ஜாக்கிரதையாக மண்ணைத் தளர்த்திக் கொடுப்பார். பசிய தாள்கள் நாளுக்கு நாள் நீண்டு வளர்ந்தன. அவற்றைக் கண்டு கிழவரின் உள்ளம் களி துள்ளியது. அண்டை அயலார் மிகுந்த ஆச்சரியங் கொண்டனர். வேட்டைக்காரர்களின் இந்தக் கூட்டுப்பண்ணையில் முதன் முதலாகப் பயிரான 'காய்கறி' அது தான்.

அந்தக் கோடையில் தெக்ரீனேக்குப் பதினாறு வயது. பொழுது புலர்வது முதல் அந்தி மங்கும் வரை துந்திர வெளியிலே சுற்றித் திரிந்து தாவர இன மாதிரிகள் சேகரிப்பாள். இந்த இளந்தாவர விஞ்ஞானியின் வேலைத் திட்டம் அநாதீர் நகரிலேயே மரீயா பியோக்திஸ்தவ்னாவின் மேல்பார்வையில் தயாரிக்கப்பட்டிருந்தது. முழு மனத்துடன் திட்டத்தை நிறைவேற்

றிஞள் தெக்ரீனே. மலைச்சரிவுகளிலும் ஓடைக் கரைகளிலும் தேடி, வேண்டிய தாவரங்களைச் சேகரித்தாள். மலைகள்மேல் ஏறிஞள்; துந்திர வெளியில் பல மைல் தூரம் துணிந்து சென்ருள். பாசி வகைகள், பெர்ரிகள், மருந்து மூலிகைகள், தேன் தரும் வட துருவப் பூண்டுகள் என்று நான்கு விதத் தாவரங்களைத் திரட்டிஞள். வட துருவப் பிரதேசத்தில் தாவரவகைகள் மிக அற்பம் என்று நினைப்பவர்கள் தெக்ரீனேயுடன் துந்திர வெளியில் சுற்றி அலைந்தார்களாஞல் தங்கள் எண்ணத்தை மாற்றிக் கொண்டிருப் பார்கள்.

அந்தக் கோடையில் தான் அப்பாவின் தொலைநோக்கிக்கு வந்தது வினை. மெமீலிடம் அருமையான தொலைநோக்கி யொன்று இருந் தது. அதைப்பற்றி அவருக்குப் பெருமையான பெருமையில்லை. தேன் தரும்பூண்டுகள்சேகரித்து முடிந்ததும் சுகோத்ஸ்க் கடலில் கடற்காளான் வகைகள் திரட்டலாமே என்ற அற்புத யோசனை தெக்ரீனேயின் மூளையில் உதயமாயிற்று. தந்தச் சிற்பி கெமாவுகேயின் மகன் இன்ரீன் இந்த யோசனையை மனப்பூர்வமாக ஆதரித்தான். இவன் தெக்ரீனேயின் நெடுநாளையத் தோழன். இருவரும் காயாக் படகில் புறப்பட்டு, கரை யோரமாகவே சென்றனர். தண்ணீரின் ஆழத் தில் இருக்கும் கடற்காளான்களை வெறுங் கண்

களால் வகைபிரித்துக் காண்பது கடினம் என்று எண்ணி, தந்தையின் தொலைநோக்கியை எடுத்துச் சென்றாள் தெக்ரீனே. ஆனால் இந்த 'விஞ்ஞான ஆராய்ச்சிப் பயணத்'தின் தொடக்கத்திலேயே, கடற்காளான்களில் என்னென்ன உபயோககரமான தன்மைகள் உண்டு என்பதை இளந்தாவரவிஞ்ஞானி தன் நண்பனுக்கு விளக்கிக் கொண்டிருக்கும் போதே, காயாக் திடீரெனத் தூக்கிப் போட்டது. தெக்ரீனே திடுக்கிட்டுப் படகின் முன் விளிம்பைச் சட்டென்று பற்றிக்கொண்டாள். இந்தத் தடுமாற்றத்தில் தொலைநோக்கி அவள் கையிலிருந்து நழுவி நீரில் விழுந்துவிட்டது.

குளிரால் உடம்பெல்லாம் நீலம் பாரித்துப் போகும்வரை இன்ரீன், தெக்ரீனே இருவரும் கடலில் முக்குளித்துத் தொலைநோக்கியைத் தேடினார்கள். சுகோத்ஸ்க் கடல் நீர் பனியாய்க் குளிர்ந்திருக்கும். ஆகஸ்டு மாதக் கடுங்கோடையில் கூட வட துருவக் கரடிகள் மட்டுமே அதில் குளித்து இன்புற முடியும். இத்தகைய நீரிலே எவ்வளவு நேரந்தான் துளைவது? இந்த அழகில் இவர்கள் முக்குளித்துக் கொண்டிருந்த போது காயாக் நடுக்கடலை நோக்கி விட்டது சவாரி. அதை இழுத்துக் கொண்டு வரும் பொருட்டு அவர்கள் நெடுந்தொலை நீந்திச் செல்ல நேர்ந்தது. ஆகக் கடை

சியில், தொலைநோக்கியும் இன்றி, கடற்காளா னும் இன்றி, உடம்பெல்லாம் தொப்பலாய் நனைந்து சொட்ட, குளிரால் விறைத்து நடுங் கிக்கொண்டு அவர்கள் வீடு போய்ச் சேர்ந்த போது பிற்பகல் வெகு நேரமாகிவிட்டது. எல் லாவற்றையும் விட, தொலைநோக்கி தொலைந்து போனதுதான் பெரிய துன்ப நிகழ்ச்சி.

நல்ல வேளையாக தெக்ரீனேயின் தகப்ப ஞர் வீட்டிலில்லை, கூட்டுப்பண்ணை நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்துக்குப் போயிருந்தார். உடம்பெல்லாம் தேய்த்துவிட்டுச் சூடேற்றிக் கொண்டு உலர்ந்த ஆடைகள் அணிந்துகொள் ளப் போதுமான நேரம் தெக்ரீனேக்குக் கிடைத் தது. தொலைநோக்கி கடலோடு போய்விட்ட தைத் தகப்பனுருக்கு எப்படித் தெரிவிப்பது என்பதுதான் அவளுக்கு ஒரே கவலை.

இது இரண்டு ஆண்டுகளுக்கு முந்திய நிகழ்ச்சி. இவ்வளவு காலத்துக்குப் பிறகு இப் போது, கபாரோவ்ஸ்க் செல்லும் விமானத்தில் அமர்ந்துகொண்டு இதைப் பற்றி நினைக்கை யில் தெக்ரீனேக்குச் சிரிப்பு வந்தது. ஆனுல் நிகழ்ச்சி நடந்த அன்றே அவள் மனநிலையே வேருயிருந்தது.

தகப்பனூர் வருகைக்காகக் காத்துக் காத்து அலுத்துப் போய், கெமாவுகே வீட்டிற்குச்

சென்ருள் தெக்ரீனே. அங்கே ஒரே அமைதி நிலவியது. வேலையில் ஆழ்ந்திருந்த சிற்பி, மகன் வந்த கோலத்தைக் கவனிக்கக் கூட இல்லை, எதற்காக அவன் உடை மாற்றுகிருன் என்றும் கேட்கவில்லை.

கவலையில் துடித்த அவ்விரு இளைஞர்களும் போட்ட திட்டங்களுக்குக் கணக்கேது, வழக்கேது! உண்மையைச் சொன்னல் அவற்றில் பெரும்பாலானவை துணிகரமான திட்டங்களே அல்ல. கிழவனுர் மெமீலுக்கு நடந்த விஷயத்தைச் சொல்லாமல் மறைத்து விடுவதே அவற்றின் பொது நோக்கம். விடுமுறை முடியும்வரை காத்திராமல் அப்போதே அநாதீர் நகருக்குச் சென்றுவிடுவதென்று முதலில் தெக்ரீனே எண்ணமிட்டாள். இன்ரீன் வேருெரு யோசனை கூறினன். தீபகற்பத்தின் உட்பகுதியில், கலைமான் வளர்க்கும் கூட்டுப்பண்ணையொன்றில் அவனுடைய தூர உறவினர் வாழ்ந்து வந்தனர். அவர்களிடம் ஓடிச் சென்றுவிடுவது என்பது இன்ரீன் போட்ட திட்டம். அநாதீர் நகருக்குப் போனல் அவர்களுடைய பெற்ருேர் உடனே அவர்களைத் தேடிக்கண்டு பிடித்து விடுவார்கள். துந்திர வெளியிலோ அப்படி முடியாது. ஒளிந்துகொள்வது எளிதல்லவா?... இந்தத் திட்டங்களில் எதுவும் ஐந்து நிமிடத்துக்கு மேல் நிலைக்கவில்லை.

வீட்டிலேயே தங்கி, ஒன்றுமே நடவாதது போலப் பாவனை செய்தாலோ? தொலைநோக்கியின் கூடு சுவரில் அதன் இடத்திலேயே தொங்கிக் கொண்டிருந்தது. அது வெறுங் கூடு என்று யார் தான் நினைப்பார்கள்? எனவே தொலைநோக்கி காணுமற்போன விஷயம் விரைவில் கவனத்துக்கு வராது.... இல்லை. இதுவும் உருப்படியான யோசனை அல்ல. அதிகமாய்ப் போனுல் இரண்டு மூன்று நாட்கள் தாழ்த்தலாம்; அப்புறம் குட்டு வெளிப்பட்டுவிடும். தகப்பனுரிடம் விஷயத்தை விளக்கித் தீர வேண்டும். இல்லையென்ருல் வேறு யாரோ தொலைநோக்கியை எடுத்துக்கொண்டுவிட்டார்கள் என்று அப்பா நினைப்பார். அதுவோ முற்றிலும் தவருகும்.

முடிவில் தகப்பனுரிடம் ஒன்றையும் ஒளிக்காமல் சொல்லிவிடுவது என்று தெக்ரீனே தீர்மானித்தாள். தன் தந்தையை மத்தியஸ்தத்துக்கு அழைக்கும்படி இன்ரீன் யோசனை கூறிஞன். தெக்ரீனே அதற்கு இணங்கவில்லை. ''குற்றம் எனது, நானே அதற்கு விளக்கம் கூறியாக வேண்டும்'' என்ருள் அவள்.

ஆரம்பத்தில் அவள் தகப்பனுர் அவள் சொன்னதை நம்பவில்லை. தொலைநோக்கிக் கூட்டை எடுத்துத் திறந்து கவனமாக ஆராய்ந்தார். தொலைநோக்கி என்ன, மூலை இடுக்கிலா புகுந்து கொண்டிருக்கும்? இருந்தாலும் தட்டிக் கொட்

டிப் பார்த்தார் கிழவர். அது இல்லை என்று நிச்சயமானதும் அவர் முகத்தில் கவலை படர்ந்தது. ஆனால் கணப் போதில் சுதாரித்துக்கொண்டு மகளருகே சென்றார்.

''எதற்காக அழுகிறாய் மகளே? போதும், கவலைப்படாதே. என் கண்கள் இன்னும் கூர்மையாகவே இருக்கின்றன. மற்றவர்கள் கண்களுக்குத் தட்டுப் படாத வேட்டையைத் தொலை நோக்கி இல்லாமலே நான் கண்டுகொள்வேன்'' என்று பரிவாகக் கூறினார்.

''வேட்டைக்குப் போகும் போதெல்லாம் தொலைநோக்கியை உடன் கொண்டு போனீர்களே, எதற்காம்?''

''அதுவா, அது அம்மா, வெளிப் பகட்டுக்காக. மெய்யாகவே சொல்லுகிறேன், ஆடம்பரத்துக்காகத் தான் எடுத்துச் சென்றேன். உண்மையில் அதை நான் உபயோகித்ததே அபூர்வந்தான். வேட்டையாடும் போது இது எனக்கு இடைஞ்சலாகவே இருந்தது. வேட்டையாடுகையில் சுமை எவ்வளவுக் கெவ்வளவு குறைவாயிருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு நல்லது....''

தன்னைத் தேற்றுவதற்காகவே அவர் இப்படிச் சொல்கிறார் என்று அறிந்து கொண்டதெக்ரீனே கண்ணீரை ஆறாய்ப் பெருக்கினாள்.

''அழுகையை நிறுத்து மகளே. நீ இன்

னும் சின்னப் பெண்ணல்ல, தெரியுமல்லவா? போன பொருளுக்குக் கண்ணீர் விடுவது அற்பத்தனம், அறிவீனம்'' என்று கடிந்துகொண்டார் மெமீல்.

''உங்களைக் கேட்காமலே அதை எடுத்துச் சென்றது என் குற்றமல்லவா?''

''ஆம், நீ கேட்டிருக்க வேண்டியது தான். ஆனாலும் இது பெருங்குற்றமல்ல. நான் உன் தகப்பன், நீ என் மகள். நம்மிடமுள்ளவை எல்லாம் இருவருக்குமே சொந்தமானவை. ஆகவே நீ அழுவது உன் சொந்த நஷ்டத்தை எண்ணித்தான். அநேகமாக அது உன்னுடையது தானே! வெட்கமாயில்லையா உனக்கு? போதும், விடு. எந்த மாதிரிக் கடற்காளான்கள் சேகரிக்கப் போகிறாய் என்று சொல்லு, கேட்போம்'' என்று வினவினார் தந்தை.

அப்புறம் கேட்பானேன்? காளான்களைப் பற்றி விரிவுரை நிகழ்த்தினாள் பெண்; கருத்தூன்றிக் கேட்டார் தந்தை. அயோடினும் ப்ரோமைனும் உள்ள கடற்காளான்கள், தலைசிறந்த பொட்டாசியம் கனிய உரத்துக்குப் பதிலாகப் பயன்படப் போகிற கடற்காளான்கள் எல்லாம் இவ்விரிவுரையில் விளக்கப்பட்டன.... தொலை நோக்கி கெட்டுப்போன விஷயத்திலிருந்து அவள் மனதைத் திருப்புவதற்காகவே தகப்பனார் இந்த யுக்தி செய்தார் என்பது இப்போது

தெக்ரீனேக்குத் தெளிவாகப் புலப்பட்டது. இருந்தாலும் யார் கண்டது? ஒருகால் இவ் விஷயத்தில் உண்மையான ஆர்வம் அவருக்கு இருந்திருக்கலாம். தொலைநோக்கி போனதை அவர் உண்மையிலேயே பொருட்படுத்தாம லிருக்கலாம். அவர் பேராசைக்காரரல்ல. அறிவு விஷயத்தில் தான் அவருக்கு அடங்காத ஆசை — தெக்ரீனே போலவே!

தகப்பனுருக்கு இந்தத் தொலைநோக்கி எப்படிக் கிடைத்தது என்பது இப்போது தெக்ரீனேக்கு நினைவு வந்தது. அப்போது அவள் சின்னஞ் சிறுமி, வயது பத்தோ பதினென்றோ தான். ஒருநாள் ஒரு விஞ்ஞானி கூட்டுப் பண்ணை வந்து சேர்ந்தார். நாடோடிப் பாடல் களும் கதைகளும் திரட்டிக்கொண்டிருந்தார் அவர். மெமீல் அருமையாகக் கதை சொல் பவர் என்று ஊரெல்லாம் பிரசித்தம். இதைக் கேள்விப்பட்டு மெமீல் வீட்டுக்கு வந்தார் விஞ் ஞானி. மாலைநேரமெல்லாம் மெமீல் சொன்ன கதைகளைக் கேட்டுக் கொண்டிருந்து ஒரு நோட் டுப் புத்தகம் நிறைய எழுதிக்கொண்டார்.

''நீங்கள் அற்புதமான கதைகாரர். இத் தகையவரைச் சந்தித்து நீண்ட காலமாகிவிட் டது. உங்கள் புகழுக்கு ஏற்றவரே நீங்கள். ஆனால் ஒன்று. இவை உண்மையான நாடோடிக் கதைகள் அல்ல. சிறு கதைகள் தாம். உங்கள்

வாழ்க்கையில் நடந்த ருசிகர நிகழ்ச்சிகள், கேள்விப்பட்ட விஷயங்கள், இவற்றோடு ருஷ்ய இலக்கிய நூல்கள் சிலவற்றின் பகுதிகளையும் சுவைபட, அசாதாரண முறையில் சொல்லு கிறீர்கள். கோகலிலிருந்து கொஞ்சம், கோர்க்கி யிலிருந்து கொஞ்சம், இப்படிப் பொறுக்கிக் கோத்தவை இவை. நீங்களாகவே புனைந்து கூறும் கதையையோ உங்கள் மக்களிடையே வழங்கிவரும் கதையையோ கேட்க மிக விரும்பு கிறேன். நாடோடிக் கதையாக, மக்கள் தாமே புனைந்தவையாக இருக்க வேண்டும் அவை'' என்று கூறினார் விஞ்ஞானி.

இதைக் கேட்டு மெமீல் நகைத்தார். ''எனக்கொன்றும் சொந்தமாகக் கதை கட்டத் தெரியாது. என் மகள் படிப்பதைக் கேட்டு அதை ஆதாரமாகக் கொண்டே அநேகமாக எல்லாக் கதைகளையும் சொல்லுகிறேன். ருஷ் யக் கதைகள் வாழ்க்கையை உள்ளது உள்ள படியே சித்திரிக்கின்றன. சுக்சி மொழியிலோ நூல்கள் இன்னும் மிகக் குறைவு. இதனால் தான் அண்டை அயலாருக்கு என் கதைகளைக் கேட்பதில் பிரியம். நாடோடிப் பாட்டுக்களும் கதைகளுந்தான் தேவையென்றால் நீங்கள் வே றொரு யாராங்கா செல்ல வேண்டும். நாளையே உங்களை அத்தீக் தாத்தாவிடம் அழைத்துப் போகிறேன். சொந்தமாகப் பாட்டு இட்டுக்

கட்டுகிறார் அவர். இந்தச் சீமையிலே அவரை மாதிரிப் பாட்டுக் கட்ட வேறு யாருமில்லை'' என்றார்.

அன்றிரவு விஞ்ஞானி அவர்களுடன் தங்கினார். அவர்களுக்குத் தொந்தரவா யிருக்கக் கூடாது என்பதற்காக நடையில் தூங்குவதாகச் சொன்னார் அவர். மெமீல் இதற்கு இசையவில்லை.

'' 'வீட்டுக்கு விருந்தாளி வந்து, கணப்பு மூட்ட விறகு இல்லை என்றால், ஸ்லெட்ஜ் வண்டியைப் பிளந்து விருந்தாளி குளிர் காய்வதற்குக் கணப்பு மூட்டிக் கொடு. உன்னிடம் ஸ்லெட்ஜ் இல்லையானால் யாராங்காவின் ஒரு தூணை வெட்டி விறகாக்கிக்கொள்' என்பது சுக்சிகளாகிய எங்களது மரபு. அப்படியிருக்க நீங்கள் நடையில் தூங்கும்படி நான் எப்படி விடுவேன்?'' என்றார்.

பொலோக் எனப்படும் உள் அறையில் கணப்புக்கு அருகே விருந்தாளிக்குப் படுக்கை போட்டாள் தெக்ரீனே. படுக்கை மெத்தென்று கதகதப்பா யிருப்பதற்காக ஒரு கரடித் தோலை விரித்தாள். இரண்டு ஆண்டுகளுக்கு முன் மெமீல் கொன்ற கரடி யொன்றின் தோல் அது. விருந்தாளி படுத்துக்கொண்டு கொழுப்பு விளக்கின் ஒளியில் ஒரு புத்தகத்தைப் படிக்கலானார். ''அது என்ன புத்தகம்?'' என்று கேட்

டான் மெமீல். இதற்குப் பதில் ஒன்றும் சொல்லாமல் உரக்கப் படிக்கலுற்ருர் விருந்தாளி. அவை நெக்ராஸவின் கவிதைகள். மெமீலுக்கும் தெக்ரீனேக்கும் அவை மிக மிகப் பிடித்தன. ஒரே கவனமாய்க் கேட்டார்கள், மேலும் மேலும் படிக்கும்படி விருந்தாளியை வேண்டிக் கொண்டார்கள். ஆகவே இரண்டொரு நாளுக்கு அப்புறம் புறப்படும்போது அவர்களுக்கு அந்தப் புத்தகத்தைப் பரிசளித்தார் விஞ்ஞானி.

மெமீல் பரிசை ஏற்றுக் கொண்டார். ''இவ்வளவு நீண்ட பயணத்தில் இதை உடன் கொண்டு வந்திருக்கிறீர்களே, இந்தப் புத்தகத்தின் மீது உங்களுக்கு எவ்வளவு பெரிய விருப்பம் இருக்க வேண்டும்!'' என்று கூறி, மாற்ருகக் கரடித் தோலை அவருக்கு வழங்கினுர்.

''மிக நன்றி. புத்தகம் உங்கள் பெண்ணுக்குப் பரிசாக இருக்கட்டும். நீங்கள் என் தொலைநோக்கியை வைத்துக் கொள்ளுங்கள்'' எனக் கூறினுர் விஞ்ஞானி.

தொலைநோக்கி மெமீல் கைக்கு வந்த கதை இதுதான். கடற்காளான் சேகரிக்க வேண்டுமென்ற அபார யோசனை தெக்ரீனேயின் மூளையில் உதயமாகும் வரை இந்தத் தொலைநோக்கியை அருமையாகப் போற்றிப் பாதுகாத்து வந்தார் மெமீல்.

சுகோத்ஸ்க் கடலின் சில்லிட்ட நீரில்

துளைந்து முக்குளிப்பதில் போய் முடிந்த வீண் தேட்டம் காரணமாக, தாவரங்கள் மீது தெக்ரீனேக்கு இருந்த ஆர்வம் சிறிதும் குறைய வில்லை. இரண்டு ஆண்டுகள் கழிந்தன. தெக் ரீனே மத்தியதரப் பள்ளிப் படிப்பில் தேறி ஞள். இப்போது அவளுடைய ஆர்வத்தின் இலக்கு வெறுமே தாவர இயல் என்று அழைக் கப்படவில்லை. தாவர இயல்தான் பள்ளிச்சிறுமி களுக்கெல்லாம் தெரிந்த விஷயமாயிற்றே! மேல் வகுப்பில் தெக்ரீனேயின் விஷயத்துக்கு ''விவசாய உயிரியல்'' என்ற கம்பீரமான பெயர்! அவள் மட்டும் முன் போலவே தாவரத் தொகுதியைப் பார்த்துக்கொண்டு மணிக்கணக் காக உட்கார்ந்து, தான் ஒருபோதும் கண் டிராத பழத் தோட்டங்களைப் பற்றிச் சர்ச்சை செய்வாள். வட துருவ பெர்ரிகள் மட்டுமே வளர்வதற்கேற்றவையாக இப்போது இருக் கும் நிலங்களில் கரண்ட் பெர்ரிகளையும் ஸ்ட்ரா பெர்ரிகளையும் பயிரிடுவதாகக் கனவு காண் பாள்.

பள்ளிப் படிப்பு முடிந்ததும் அடுத்தபடி கல்லூரி தான். ஆசிரியர்கள் அவ்வாறே யோ சனை கூறிஞர்கள். தெக்ரீனே விரும்பியதும் அதுவே. கல்லூரிப் படிப்புக்கென்ருல் மகளை அநாதீர் நகரைவிடப் பெருந்தொலைவில் உள்ள கபாரோவ்ஸ்க் பட்டணத்துக்கு அனுப்ப வேண்

டும். மகளைப் பிரிவது மெமீலுக்கு வருத்தமாகத் தான் இருந்தது. எனினும் அவள் மேலே படிக்க வேண்டும் என்றே அவர் விரும்பினார். அநாதீர் நகரிலிருந்து தெக்ரீனே ஆண்டு தோறும் இரு தடவை — கோடை விடுமுறையின் போதும் பனிக்கால விடுமுறையின் போதும்— வீட்டுக்கு வருவாள். குளிர்காலந் தோறும் இன்னும் இரு முறை தாமே மகளைப் போய்ப் பார்த்துவருவார் மெமீல். கபாரோவ்ஸ்க் பட்டணத்திலிருந்தோ தெக்ரீனே வருடத்தில் ஒரு தடவை — அதாவது கோடைகாலத்தில் — தான் வீட்டுக்கு வர முடியும். பனிக்கால விடுமுறை மிகக் குறைவு. அதற்கிடையே கபாரோவ்ஸ்க்கிலிருந்து ஊர்வரை பயணஞ் செய்து திரும்புவது கடினம். கடிதங்கள் போய்ச் சேருவதற்கும் முன்னைவிட மூன்று மடங்கு அதிக நாட்கள் பிடிக்கும். அத்தீக் தாத்தாவின் மகன் இன்னும் தொலைவில், லெனின்கிராட் மாநகரில் படித்துக் கொண்டிருந்தான் என்பது உண்மையே. ஆனால் அத்தீக்கின் மனைவி உயிருடன் இருந்தாள். அவர்களது மற்றக் குழந்தைகள் அவர்களுடனேயே வாழ்ந்து வந்தார்கள். மெமீலுக்கோ இந்தப் பெண் ஒருத்திதான் கொழு கொம்பு.

ஆயினும் மகள் கபாரோவ்ஸ்க் செல்வதை மெமீல் தடை செய்ய விரும்பவில்லை.

நிச்சயமாக இல்லே! அவள் படிக்கட்டும், மெமீல் கண்டறிய முடியாதவற்றை எல்லாம் மகளாவது கண்டறியட்டுமே! சுக்சி இனத்தாருக்கு முன்னர் அடைபட்டிருந்த பாதைகள் எல்லாம் அவளுக்குத் திறக்கப்படட்டும் என்பது அவர் உள்ளக் கிடக்கை.

மருமகளின்பயணத்திற்காக,ஸீல் கொழுப்பில் அப்பங்கள் பொரித்து வைத்தாள் மாமி நுத்தெனெயுத். தெக்ரீனே சொல்லிக் கொள்ள வந்த போது அப்பங்கள் தயாராயிருந்தன. மாமா கெமால்கோத் அப்பங்களேத் தூய துணியில் நன்ருகச் சுருட்டி, கொழுப்பு கசியாமலிருப்பதற்காக வெளிப்புறம் தோலேச் சுற்றிக் கட்டிக்கொடுத்தார்.

''அடே யப்பா, இத்தனே அப்பங்கள் எதற்கு?'' என்ருள் தெக்ரீனே.

''சாப்பாடு வழிச் சுமை யாகுமோ? ஒரு நாள் பயணத்திற்கு ஏழு நாள் கட்டுணவு என்று வசனமாயிற்றே'' என்று மாமா கெமால்கோத் வற்புறுத்திக் கூறிவிட்டார்.

'' 'யாத்திரை கடலிலாஞல் எடுத்துப் போ இருமடங்கு' என்றும் வசன முண்டு'' என ஒத்துப்பாடிய நுத்தெனெயுத் மாமி, ''இந்தா, தெக்ரீனே, கையோடு காவலாக இருக்கட்டும். உனக்கோ அப்பம் என்ருல் உயிர். மெமீலுக்கும் அப்படியே. எனக்குத் தெரியுமே. நீண்ட

பயணம் போகிறீர்கள். இவை உபயோகமாக இருக்கும், கட்டாயமாய்'' என்று பரிவுடன் சொன்னுள்.

''அநாதீர் வரைதான் கப்பலில் போகிறோம். அதுவரை அப்பா உடன் வருவார். அப்புறம் நான் மட்டும் தனியாக விமானத்தில் போவேன். பள்ளிப் பரீட்சையில் சிறப்பாகத் தேறிப் பதக்கம் பெற்றதற்கு அப்பா அளிக்கும் பரிசு இது. வெகு காலத்துக்கு முன்பே வாக்குக் கொடுத்திருந்தார்.''

''விமானத்திலா? ஆகாய மார்க்கமாகவா?'' என்று வியப்பே வடிவாய்க் கேட்ட நுத்தெனெயுத் மாமி திமிங்கில முதுகெலும்பால் செய்த முக்காலி மீது தொப்பெனச் சாய்ந்து, மருமகள் ஏதோ விந்தைப் பிறவியாக மாறிவிட்டதுபோல அகன்ற விழிகளுடன் அவளைக் குத்திட்டு நோக்கிஞள். ''அடியம்மா, விமானத்திலா போகிருய்? பாவம் உன் தாயார் மட்டும் உயிரோடிருந்து, நீ படிப்புக்காக கபாரோவ்ஸ்க் போவதை, அதிலும் விமானத்தில் பறந்து போவதைப் பார்த்தாளாஞல் எவ்வளவு ஆனந்தப் படுவாள்!'' என்று குரல் தழுதழுக்கக் கூறிஞள்.

வரப்போகும் விமான யாத்திரையின் உட்பொருள் முழுவதையும் இந்தச் சொற்கள் கெமால்கோத் மாமாவுக்கும், தெக்ரீனேக்கும், நுத்தெனெயுத் மாமிக்குமே கூடத் துலாம்பர

மாக எடுத்துக்காட்டிவிட்டன. ஆம், அவர்க ளுக்கு, வயதானவர்களுக்குக் கூட இத்தகைய விஷயங்கள் இப்போது பழகிப் போய்விட்டன. இருபது ஆண்டுகளுக்கு முன், தெக்ரீனேயின் தாய் துவார் உயிருடனிருந்தபோதோ, இது பெருத்த அற்புத நிகழ்ச்சியாகப் பட்டிருக்கும். துவார் மகளைப் பற்றி எப்படி யெல்லாம் கவலைப்பட்டிருப்பாள்! அதே சமயம் அவள் உள்ளம் பெருமையால் எப்படிப் பூரித்துப் போயிருக்கும்!

இப்போது இந்த எஃகுப் பறவை, தெக் ரீனேயைத் தூக்கிக்கொண்டு வலிமை வாய்ந்த இறகுகளால் ஆகோட்ஸ்க் கடலின் விரி குடாக் களையும் வளை குடாக்களையும் குறுங்குடாக்களை யும் கடந்து ஜுக்-ஜுர் மலைகளின் கொடுமுடி களுக்கு மேலாகப் பறந்து கபாரோவ்ஸ்க் நக ருக்கு இட்டுச் செல்கிறது.

''கபாரோவ்ஸ்க்கில் அப்பாவுக்காக மறக் காமல் ஒரு தொலைநோக்கி வாங்க வேண்டும்'' என்று எண்ணினாள் தெக்ரீனே. தந்தையின் நினைவால் அவள் முகமெல்லாம் புன்னகை ஒளிர்ந்தது. ''எல்லாவற்றிலும் அதிக விலையுள்ள தொலைநோக்கி, முந்தியதை விட மேலானதா யிருக்கும்படி வாங்குவேன்'' என்று தீர்மானித் துக்கொண்டாள்.

தெளிவாகவும் பொருத்தமாகவும் இருந்த தன் எண்ணங்கள் திடீரெனக் குழம்பி மங்குவதை உணர்ந்தாள் தெக்ரீனே. அவள் கண்களும் மூடியிருப்பது தெரிந்தது. விமானத்தின் தொட்டிலாட்டத்தில் உறங்கிப் போய்விட்டாள் போலும்.

எதிரே தூங்கிக் கொண்டிருந்த பருத்த பிரயாணியை ஏற இறங்கப் பார்த்தாள் தெக்ரீனே. ''இவரைப் பார்த்துத்தான் எனக்கும் உறக்கம் வந்திருக்க வேண்டும். இவருக்கென்ன, இருபதாந் தடவையாக விமானத்தில் போகிறவர் போலும். தாராளமாக உறங்கலாம். என் விஷயம் அப்படியா? ஒவ்வொரு வினாடியும் விழிப்பாயிருந்து கவனிக்க வேண்டும். இல்லாவிட்டால் ஏதேனும் சுவையான நிகழ்ச்சியை நான் பாராது விட்டுவிடக் கூடும்'' என்று எண்ணமிட்டாள்.

பருத்த பிரயாணி பார்வைக்குப் பூகோள சாஸ்திரி போலக் காணப்பட்டார். இல்லாவிட்டால் புவி இயல் அறிஞராயிருப்பார். ஏதேனும் ஆராய்ச்சி கோஷ்டியைச் சேர்ந்தவர் போலும். கோஷ்டித் தலைவராகக் கூட இருக்கலாம். இப்படி நினைப்பதற்குக் காரணங்கள் இருக்கின்றன. முதலாவது அவர் கையில் கட்டியிருக்கும் திசைகாட்டி. இரண்டாவது அவர் ...ச் செல்லும் பயணப்பை. மற்றப்

பிரயாணிகள் தங்கள் தங்கள் பெட்டிகளைச் சாமான் அறையில் வைப்பதற்காகக் கொடுத்த போது இவர் மட்டும் ஒரு பெரிய பையைக் கொடுத்தார். தோள்களில் மாட்டிக் கொள்ளப் பட்டைவார்களும் உள்பையும் நான்கு வெளிப் பைகளும் கொண்ட 'ருக்ஸாக்' அது. பைகள் எல்லாம் சாமான்களால் நிறைந்து பிதுங்கிக் கொண்டிருந்தன. நரையோடும் தலைமயிர். நிதானமும் அறிவுக்கூர்மையும் சுடரும் முகம்.... ''புவி இயல் பேராசிரியர் தான்'' என்று தீர் மானித்த தெக்ளே, மேலும் கற்பனையைத் தொடர்ந்தாள். ''இவருடைய தலைமையில் சென்ற ஆராய்ச்சி கோஷ்டி புதிய கனிய நில மொன்றைக் கண்டுபிடித்திருக்கிறது. மிக மிக முக்கியத்துவம் வாய்ந்த கனிய நிலம் அது. தங்க வயலோ, எண்ணெய் ஊற்ருே, இல்லை 'அப்பாட்டைட்' என்ற கனிய நிலமோ. இதைப் பற்றி அரசாங்கத்துக்கு அறிக்கை சமர்ப்பிக் கும் பொருட்டு உடனே மாஸ்கோ வரும்படி இவரை அழைத்திருக்கிருர்கள். ஒருவேளை இவர் தூங்கவே இல்லையோ என்னவோ! அர சாங்கத்தாருக்கு என்ன சொல்லப் போகிருேம் என்று யோசித்துக் கொண்டிருக்கிருர் போ லும்!''

இந்தப் பிரயாணி புவி இயலுடன் தொடர் பே இல்லாதவராகவும் இருக்கக் கூடுமே!

எஞ்சினீயராகவோ இல்லை கணக்குத் தணிக் கையாளராகவோ கூட இருக்கலாம். சுகோத் காவில் ஏதேனும் ஸ்தாபனத்தின் கணக்குகளைச் சரிபார்த்துவிட்டுத் திரும்புகிறுரா யிருக்கலாம். எப்படி யிருந்தாலும் சரி, தெக்ரீனே அவரைப் புவி இயல் ஆராய்ச்சியாளராகக் கற்பனை செய் தாகிவிட்டது. இப்போது அரசாங்கத்துக்கு அவர் சமர்ப்பிக்கப் போகும் அறிக்கை எப்படி யிருக்க வேண்டும் என்று எண்ணமிட் டுக் கொண்டிருந்தாள் அவள். அவருடைய இடத்தில் அவள் இருந்தால் பின்வருமாறு அறிக்கை செய்வாள்: ''கனந்தங்கிய தோழர் மந்திரிகளே, நமது மாபெரும் நாட்டின் எல்லையோரமாக இருக்கும் ஒரு பகுதியை மே லும் வளங்கொழிக்குமாறு செய்யக் கூடிய ஒரு கண்டுபிடிப்பை உங்களுக்கு அறிவிப்பதில் பெரு மகிழ்வு அடைகிறேன். நாங்கள் கண்டுபிடித் துள்ள படிவுகள், இதே பிரதேசத்தில் விலை யுயர்ந்த கனியப் படிவுகள் இன்னும் பல இருக் கின்றன என்று நாங்கள் அனுமானிக்க இடந் தருகின்றன. இந்தப் படிவுகளைக் கண்டுபிடிக்க வேண்டும், கண்டுபிடித்தே தீர்ப்போம்! இந்த வேலையை நடத்தும் திறமை வாய்ந்த ஸ்தல மக்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதி கரிக்கிறது. நான் வந்த விமானத்திலே சுக்சி இனத்தினளான ஒரு பெண்ணைச் சந்தித்தேன்.

அவள் கல்லூரிப் படிப்புக்காகக் கபாரோவ்ஸ்க் நகர் சென்று கொண்டிருந்தாள்....''

தான் படிக்கப் போவது விவசாய உயிரியலே தவிர, புவி இயல் ஆராய்ச்சி அல்ல என்பதைக் கற்பனை வேகத்தில் மறந்துவிட்டாள் தெக்ரீனே!

மற்றப் பிரயாணிகளை அவள் ஓரளவு அறிவாள். விமானத்திற்காக நிலையத்தில் காத்திருந்தபோது ஒருவரை யொருவர் அறிமுகம் செய்துகொள்ள அவர்களுக்கு நேரம் கிடைத்தது. இந்த மனிதர் ஒருவர் தான் கடைசி விநாடியில் வந்து சேர்ந்தார். எண்ணெய் நிரப்பிக் கொள்வதற்காக விமானம் வழியில் இறங்கிய இடத்திலும் கால் மரப்பைப் போக்கும் பொருட்டு இந்த மனிதர் பத்து நிமிடங்கள் அங்குமிங்கும் நடந்தார். பின்பு ஒரு துண்டுக் கல்மேல் உட்கார்ந்து, குறிப்புப் புத்தகத்தை யெடுத்து ஏதோ எழுதினார். பிரயாணிகள் எல்லோரையும் மீண்டும் விமானத்தில் ஏறிக்கொள்ளும்படி விமானி கேட்டுக் கொள்ளும்வரை அவரும் எழுதிக் கொண்டிருந்தார். ஆக அவரிடம் பேச வாய்ப்பில்லாமலே போய்விட்டது. அவருடைய தொழில் பற்றிய தனது ஊகம் சரிதானா அல்லவா என்று தெக்ரீனே தெரிந்துகொள்ள முடியவில்லை.

மற்றப் பிரயாணிகளில் இருவர் வடகடல்

கப்பல் போக்குவரத்து இலாக்காவில் பணியாற்றுகிறார்கள். அவர்களில் ஒருவர் புகழ் பெற்ற விமானி, சோவியத் யூனியனின் வீரர் என்ற விருது பெற்றவர். தெக்ரீனே சின்னஞ் சிறுமியாயிருந்த காலத்திலேயே விமானப் பறப்பில் புதுப்புது ரிகார்டுகளை ஸ்தாபித்து உலகைப் பிரமிக்கச் செய்தவர். இப்போது நடுத்தர வயதினர்.

சுக்சி இனத்தினனான ரெந்தீர்கின், மீன்களை டப்பியிலிடும் தொழிற்சாலையில் வேலை செய்பவன். மீன் தொழிலில் ஈடுபட்டுள்ள முன்னணித் தொழிலாளர்களது பிரதேச மகாநாட்டில் கலந்துகொள்ளும் பொருட்டுப் போகிறான்.

'ஸயூஸ்புஷ்னீனா'* பிரதிநிதி ஒருவர், சிறு கூடான உடம்பும் கூர்மையான கண்களுமாக, மென்மயிர்த்தோல் பிராணி போலவே காட்சியளிக்கிறார். வான வெளியில் மேகக் கூட்டங்களுக்கிடையே சஞ்சாரம் செய்கிறோமே என்ற எண்ணமே இன்றி, தம் காரியாலயத்தில் இருப்பவர் போலவே அவர் பாட்டுக்கு வேலையில் ஈடுபட்டிருக்கிறார். பெரிய தோல் பைக்குள்

*'ஸயூஸ்புஷ்னீனா' என்பது அகில யூனியன் மென்மயிர்த் தோல் வியாபாரக் கழகம்.

ளிருந்து பைல்களை வெளியில் இழுப்பதும், எண்கள் மொய்த்திருந்த பக்கங்களைப் புரட்டுவதும், பருத்த சிவப்புப் பென்சிலால் சில எண்களின் அடியில் கோடிடுவதுமாக ஒரே தடபுடல்.

வட்டார நிர்வாகக் கமிட்டியின் தலைமைக் குழு அங்கத்தினர் ஒருவரும், வட்டாரச் செய்தித்தாள் நிருபர் ஒருவரும் கூடப் பழக்கப்பட்ட விமானப் பிரயாணிகள் என்று தெரிந்தது. அவர்கள் சதுரங்கம் விளையாடுகிறார்கள். அவர்களது போன்ற சதுரங்கத்தைத் தெக்ரீனே அதற்கு முன் பார்த்ததில்லை. பலகைக்குப் பதில் ஒருவகையான தோல்பை. அதிலே கறுப்பு, வெள்ளைக் கட்டங்கள் உள்ளன. ஒவ்வொரு சதுரக் கட்டத்திலும் சிறு பிளவுகள். பிளாஸ்டிக் சதுரங்கக் காய்கள் இந்தப் பிளவுகளில் சப்பென்று பொருந்துகின்றன. ஆட்டத்தில் ஒரே மும்முரமாக ஈடுபட்டிருந்த இருவரும் ஒரு முறை கூடத் தலை நிமிர்ந்து ஜன்னலுக்கு வெளியே பார்க்கவில்லை.

அப்படியா சேதி! தெக்ரீனே இவர்களுக்குச் சளைத்தவளா? அவளுந்தான் ஏதேனும் காரியத்தில் ஈடுபட முடியும். விமானத்தில் இது அவள் முதல் மணி யல்லவே!

பையிலிருந்து ஒரு புத்தகத்தை எடுத்துப் படிக்க முயல்கிறாள். பயனில்லை. அவள் கண்கள் மறுபடி மறுபடி ஜன்னல் புறமே திரும்பு

கின்றன. அதற்கு வெளியிலோ விவரிக்க முடியாத அபூர்வ அழகு பொலியும் புதுப் புதுக் காட்சிகள் நிமிடந்தோறும் அவள் விழிகளுக்கு விருந்தளிக்கின்றன.

விமானம் இடப்புறமாகச் சற்று சாய்ந்த போது தெக்ரீனே சதுரங்கக்காரர்களின் தலைகளுக்கு மேலாக ஜன்னல் வழியே காட்சிதரும் ஒளிமயமான கடல் பரப்பைக் கண்ணுறுகிறாள். ஒரே ஒரு முறை கடலில் கப்பல் ஒன்று தெரிந்தது. மற்றப்படி எல்லையற்ற பெருங்கடல் மட்டுமே தென்பட்டது. அதன் ஒவ்வோர் அலையும் வெயிலொளியில் மினுமினுத்தது.

வலப்புறமோ மலைகள்! வானுற நிமிர்ந்த பனிச்சிகரங்களும் உயர்ந்த பீட பூமிகளுமாக ஒன்றுக்குப்பின் ஒன்றாய் நீண்டு சென்ற மலைத் தொடர்கள். ஓய்மெகொன் பீட பூமி இதுதானோ? இல்லை. அதை எப்போதோ கடந்து வந்திருப்போம்.

கடைசியில் பருத்த பிரயாணி கண்களைத் திறக்கிறார். இந்தத் தருணத்தை நழுவவிடக் கூடாதென்று தீர்மானிக்கிறாள் தெக்ரீனே.

''விமானத்திலிருந்து கீழே பார்த்தால் உண்மையான பூமி போல் தெரியவில்லை, வரைப் படம் போலவே காண்கிறது. அதோ பாருங்கள், வரைப்படமே அச்சு, இல்லையா?'' என்று கேட்கிறாள்.

''ஆமாம். மிக மிக உயரத்தில் பறக்கும் போது வரைப்படத் தோற்றம் இன்னும் துலக்கமாகப் படும்.''

''அப்படியானுல் இப்போது நாம் மிக உயரத்தில் பறக்கவில்லையா?''

''இப்போதா?'' என்று கீழே பார்க்கிருர் பருத்த பிரயாணி. ''சுமார் ஆயிரம் மீட்டர் உயரத்திலிருக்கிருேம்'' என்கிருர்.

''அடேயப்பா! ஆயிரம் மீட்டரா? தரைக்கு மேலே முழுதாக ஒரு கிலோமீட்டர் உயரமா?''

''ஆம். இது தான் உங்களது முதல் விமானப் பயணமா?''

''அது ரொம்ப வெளியே தெரிகிறதோ?''

''ரொம்ப ஒன்றுமில்லை... உண்மையில் தெரியவே இல்லை. விமானத்திலிருந்து பூமியைப் பார்க்கும்போது வழக்கமான தேச வரைப் படம் போலக் காண்பது இருக்கிறதே, இது சாதாரணமாகப் படுகிறதே தவிர உண்மையில் அவ்வளவு எளிதல்ல. வரைப்படம் தயாரிப் பதற்கான குறிகள் விமானங்கள் வருவதற்கு முன்பே நிச்சயிக்கப்பட்டுவிட்டன என்பதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். விமானத் திலிருந்து பருந்துப் பார்வையாகக் காணும் போது தென்படும் தோற்றத்துடன் அவை அனேகமாக ஒத்திருக்கின்றன என்பது எவ்வளவு

பெரிய விஷயம்! அற்புதமான உடனிகழ்ச்சி என்பேன் நான்.''

பருத்த பிரயாணியின் சொற்களை ஆர்வத்துடன் கேட்டவாறே, ''நிச்சயமாக பூகோள சாஸ்திரிதான்!'' என்று எண்ணுகிறாள் தெக்ரீனே. மேலிருந்து பார்ப்பதற்குத் தரை வரைப் படம் போலிருக்கிறதென்று சொன்ன போது அவள் இத்தனை விஷயங்களை எண்ணிப் பார்க்கவே இல்லை.

ஜன்னல் வழியே மறுபடியும் வெளியே பார்க்கிறாள். இங்கே யுள்ள மலைகள் வடக்கே யிருப்பவை போலில்லை. இவை கரும்பச்சை. பசுமை நிறம் ஒருப் போல இல்லை, தொடர்ச்சியாகவுமில்லை. இது மலைகளின் நிறமாக இருக்க முடியாது. ஆயிரக் கணக்கான விசித்திரப் பிராணிகளின் பெரிய மந்தை மலைச் சரிவுகளில் மேய்ந்து கொண்டிருப்பது போலத் தோற்றமளிக்கிறது. ஆ, அப்படித்தான் இருக்க வேண்டும். சிக்கலும் சிடுக்குமாகப் பின்னிப் பிணைந்த அந்தக் கரும்பச்சைக் குவை உயிரோட்டமுள்ளது போன்று தெக்ரீனேக்குப் புலப்படுகிறது. ''இது காடாக்கும்!'' என்று ஊகிக்கிறாள்.

''உங்களைத் தான் கேட்கிறேன். அதோ மலைச்சரிவுகள் மேல் தெரிகின்றனவே, அவை என்ன, காடுகளா?'' என்று கேட்கிறாள்.

''ஆமாம். உண்மையான மலைக்காடுகள். மரங்களற்ற துந்திரத் தரையை நாம் வெகு நேரத்துக்கு முன்பே கடந்து விட்டோமே!'' என்கிறார் பருத்த பிரயாணி.

''காடுகள்! உண்மையான காடுகள்!'' என்று தனக்குள் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொள்கிறாள் தெக்ரீனே. இவற்றைப் பார்க்க வேண்டுமென்று எவ்வளவு நீண்ட காலமாக ஏங்கிக் கொண்டிருந்தாள்!

அவளது சொந்தக் கிராமத்தில் யாராங் காக்களின் அருகே பல கட்டைவீடுகள் இருந்தன. கப்பல்கள் இவற்றைப் பகுதி பகுதியாகச் சுகோத்காவுக்கு ஏற்றி வந்தன. ஒரே கப்பலில் நூற்றுக் கணக்கான மரத்துண்டுகள். தெரு நெடுகிலும் மரக் கம்பங்கள் நாட்டப்பட்டு அவற்றிலிருந்து மின்சார பல்புகள் தொங்குகின்றன; காற்றில் அசைந்தாடுகின்றன. இந்தக் கம்பங்களும் மரத்துண்டுகள் தாம். ஒவ்வொரு மரத்துண்டும் ஒருகாலத்தில், கப்பும் கிளையுமாகத் தழைத்து, பசுங்கிளைகளை அசைத்து அயல் மரங்களுடன் இரகசியம் பேசி வளர்ந்த பசிய மரத்தின் அடியாக இருந்திருக்குமல்லவா? தெக்ரீனே பல முறை இதைப் படித்திருக்கிறாள்; காடுகளின் படங்களைப் பல முறை கண்டு வியந்திருக்கிறாள். ''நமது கிராமத்திலுள்ள மரக்கட்டைகள் எல்லாம் திடீரென உயிர்

பெற்று, நிமிர்ந்து நின்று, தரைக்குள் வேர்களை ஓட்டி, தளிருடை அணிந்து விளங்கினுல் அவை ஒன்று சேர்ந்து ஒரு பெருங்காடாகிவிடுமே!'' என்று ஒன்பதாம் படிவத்தில் இருந்தபோது தெக்ரீனே எண்ணியதுண்டு.

இலையுதிர்காலப் புயல்களின் போது ஏதேனும் விருட்சங்களின் அடி மரங்கள் கடற்கரையில் அலைகளால் எறியப்பட்டுக் கிடக்கும். அவற்றின் மீது இலைகளே இரா. கிளைகள் முறிந்து போயிருக்கும். ஆயினும் அவற்றில் உயிர் ஓடிக் கொண்டிருப்பது நன்கு புலப்படும்.

கடல்தரும் இப்பரிசை மணிக்கணக்காக ஆராய்ந்து பார்ப்பாள் தெக்ரீனே. கடைசியில் மெமீலோ மற்ற வேட்டைக்காரரில் எவரேனுமோ அதை ரம்பத்தால் அறுத்துப் பலகை போட்டு ஸ்லெட்ஜாகவோ காயாக் படகாகவோ ஆக்கிக்கொள்வார்கள். அதுவரை மரத்தையே பார்த்துக் கொண்டிருப்பாள் அவள்.

இப்போதோ, நூற்றுக்கணக்கான கிலோமீட்டர்களுக்கு அடர்ந்த காடுகள் மண்டிக் கிடந்த பிரதேசத்தின் மேலே பறந்து செல்கிருள் தெக்ரீனே. ''மரங்களின் சலசலப்பு எப்படி ஒலிக்குமோ? பனிச் சூருவளியின் உறுமல் போலவா அல்லது கடலின் கர்ஜனை போலவா? ஒருகால் விமான எஞ்சினின் ஊங்காரம் போல் ஒலிக்குமோ?'' என்று எண்ணமிட்டாள்.

கபாரோவ்ஸ்க் கல்லூரியில் பெயர் பதிவு செய்துகொண்டதுமே அருகாமையிலுள்ள காட்டிற்கு நேராகச் செல்வதென்று தீர்மானித்தாள். காடு அருகே யில்லாவிட்டால் பஸ்ஸிலேறிப் போகலாம். பசிய மரங்களின் அடியை வருடிப் பார்க்கலாம். காற்றை எதிர்கொண்டு அவை கிளைகளை அசைப்பதை நோக்கலாம். அவற்றின் இனிய சலசலப்பைக் காதாரக் கேட்கலாம்.

கபாரோவ்ஸ்க் நகரின் அருகே ஏதாவது காடுகள் இருக்கின்றனவா என்று கேட்பதற்காக எதிர்ப் பிரயாணி பக்கம் திரும்பியவள் அவர் கண்கள் மீண்டும் மூடியிருப்பதைக் கண்டாள். இவரென்ன, தூங்குகிறாரா, இல்லை, உள்ளத்தை ஒருமுகப்படுத்துவதற்காகக் கண் மூடிச் சிந்திக்கிறாரா? எதுவா யிருந்தாலும் அவரைக் கேள்வி கேட்டு நச்சரிப்பதில் பயனில்லை.

யாத்திரை அனுபவங்களை எல்லாம் ஒன்று விடாமல் நினைவில் பதித்துக்கொள்ள வேண்டும், சுவையான நிகழ்ச்சிகள் எதையும் பார்க்காதிருந்து விடக் கூடாது என்று தெக்ரீனே கடுமுயற்சி செய்தாள். எனினும் கபாரோவ்ஸ்க் நிலையத்தில் விமானம் இறங்கிய பின்னர் மற்றப் பிரயாணிகள் அவளைத் தட்டி எழுப்ப வேண்டியதாயிற்று. அவள் மிகமிகக் களைத்துப் போ யிருந்தாள். அநாதீர் நகரத்தி

லே அவளுடைய தோழியின் வீட்டில்தான் தந்தையும் அவளும் தங்கினார்கள். புறப்படுவதற்கு முந்திய இரவு தந்தை பக்கத்து அறையில் படுத்து உறங்கிவிட்டார். தோழிகள் இருவருமோ விடியும்வரை கண்ணுறங்காது பேசிய வண்ணமாயிருந்தனர். இராத் தூக்கமின்மை, பிரிவு, பயணத்தின் போது வழியில் ஏற்பட்ட கணக்கற்ற அனுபவங்கள், எல்லாம் சேர்ந்து தெக்ரீனேயை அயர்த்திவிட்டன.

பருத்த பிரயாணி அவள் தோளை மெதுவாகத் தொட்டு, ''நமது பிரயாணம் முடிந்துவிட்டது'' என்றவர், பின்மாலைப் போது என்பதைத் தெரிந்து கொண்டே கேலியாகக் ''காலை வந்தனம்'' எனக் கூறி முறுவலித்தார்.

தெக்ரீனே விமானத்திலிருந்து வெளியே வந்தாள். குளிர்காலத்தில் போல ஒரே இருட்டாயிருந்தது. சுகோத்காவில் ஆகஸ்டு மாதத்தில் நட்ட நடு நிசியில் கூட இவ்வளவு இருட்டாயிருக்காது.

சக பிரயாணிகளுடன் விமானத் திடலைக் கடந்து நிலையத்திற்குச் சென்றாள்.

விமான நிலைய அதிகாரி அவர்களுக்கு முகமன் கூறினார். ''கபாரோவ்ஸ்க் நகர் உங்களை வரவேற்கிறது, தோழர்களே! உட்கார்ந்து கொஞ்சம் இளைப்பாறுங்கள். சரியாக ஐந்து

நிமிடங்களில் பஸ் வந்துவிடும்'' என்று கூறிய வர், வட்டார நிர்வாகக் கமிட்டியின் தலைமைக் குழு அங்கத்தினர் பக்கம் திரும்பி, ''உங்கள் கார் தயாராயிருக்கிறது. வந்து அரைமணி நேர மாயிற்று'' என்றார்.

''ரொம்ப சந்தோஷம். தோழர்களே, என்னோடு யார் யார் வருகிறீர்கள்? மூன்று இடங்கள் இருக்கின்றன'' என்று கேட்டார் அங்கத்தினர்.

''வேண்டாம். நன்றி. நாங்கள் பஸ்ஸி லேயே போய்க்கொள்ளுகிறோம்'' என்றார் புகழ் பெற்ற விமானி.

''அப்படியானால் காத்திருங்கள். உங் களுக்குத் தான் கபாரோவ்ஸ்க் நீண்ட கால மாகப் பழகிய நகராயிற்றே. ஊருக்குப் புதி யவர்களை அவர்கள் போக வேண்டிய இடங் களுக்குக் கொண்டுவிடுகிறேன்....'' அங்கத்தி னர் இவ்வாறு சொல்லிக் கொண்டிருந்தபோ தே டிரைவர் உள்ளே வந்தான். ''வா அப்பா, ஈ·கோர்!'' என அவனை வரவேற்று, ''இந்தா, தயவு பண்ணித் தோழர் ரெந்தீர்கினுடைய பெட்டியை எடுத்துக்கொள். தெக்ரீனே, உங் கள் பெட்டியை நான் எடுத்துக்கொள்கிறேன். அடேயப்பா, என்ன கனம்! புத்தகங்களாக்கும், அப்படித்தானே?'' என்றார்.

''ஆமாம். பெரும்பாலும் புத்தகங்கள்'' என்று விடையளித்தாள் தெக்ரீனே.

''அப்படித்தான் நினைத்தேன். தோழர் கோல்மகோரோவ், நீங்கள் விருந்தாளி. வாருங்கள், எங்களோடு போகலாம்.''

இவ்வாறு அழைக்கப்பட்டவர் பருத்த பிரயாணி.

''நான்தான் கபாரோவ்ஸ்க் நகருக்கு அடிக்கடி வந்து போகிறவனாயிற்றே. நான் உட்கார்ந்தால் காரில் மற்றவர்களுக்கு இடம் இராது'' என்றார் அவர்.

ஆனால் வட்டாரக் கமிட்டியின் தலைமைக் குழு அங்கத்தினர் அவரை விடவில்லை.

நகரில் விளக்குகள் பிரகாசமாக எரிந்தன. ஆயினும் வலப்புறம் கோல்மகோரோவும் இடப்புறம் ரெந்தீர்கினும் தான் நடுவிலுமாகச் சிக்கிக்கொண்ட தெக்ரீனே ஒன்றையுமே சரியாகப் பார்க்க முடியவில்லை. 'அமூர்' ஹோட்டலில் இவ்விருவரும் இறங்கிவிடவே உபாத்திமைக் கல்லூரி ஹாஸ்டலை நோக்கி விரைந்தது கார்.

தெருவிளக்கு ஒன்று கூட இல்லாத ஒரு சந்துக்குள் கார் திரும்பியது. காரின் விளக்கு வெளிச்சத்தில் குறுகிய நடைபாதை மட்டுமே புலப்பட்டது.

''அவமானம்! மானக்கேடு! கல்லூரி திறப்

பதற்கு இரண்டே வாரங்கள் தான் இருக்கின்றன. இன்னும் விளக்குகள் வந்த பாடில்லை'' என்று முணுமுணுத்த அங்கத்தினர், தெக்ரீனேயைப் பார்த்து, ''இது புதிய பகுதி. இப்போது தான் இங்கே கட்டிடங்கள் எழுப்ப ஆரம்பித்திருக்கிறோம். செப்டம்பர் முதல் தேதிக்கு முன் மாணவர் விடுதிக்கு விளக்குகளும் தண்ணீரும் மற்ற வசதிகளும் வந்துவிடும் என்று கட்டிடத் தொழிலாளர்கள் வாக்களித்திருந்தார்கள்'' எனக் கூறினார்.

கார் நின்றது. டிரைவர் தெக்ரீனேயின் பெட்டியை எடுத்துக் கதவருகே கொண்டு வைத்துவிட்டுக் காருக்குத் திரும்பினான். மாணவர் விடுதித் தலைவி, தெக்ரீனே கதவைத் தட்டியதற்குப் பதிலளிக்கும்வரை கார் நின்று கொண்டிருந்தது.

''வருகிறேன், வருகிறேன். யார் அங்கே?'' என்றது ஒரு தூக்கக் குரல்.

தெக்ரீனேயுடன் சில வார்த்தைகள் பேசிவிட்டுச் சாவிக் கொத்தை எடுத்துவரப் போனாள் விடுதித் தலைவி.

''போய் வருகிறோம், தெக்ரீனே! நலமே ஆகுக!'' என உரக்கக் கூறினார் அங்கத்தினர்.

''போய் வாருங்கள். வணக்கம்!'' என்றாள் தெக்ரீனே.

கார் ஜாக்கிரதையாகத் திரும்பி அப்பால்

போயிற்று. தெக்ரீனே தனியாயிருந்தாள். காற்று வீசியது. ஆயிரமாயிரம் பனிச் சிதல்கள் யாராங்காவின் வெளித் தோற் சுவரில் உராய்ந்து செல்வது போன்ற ஒலி தெக்ரீனேக்கு உயரத்தில் கேட்டது. ஆகஸ்டு மாதத்தில் வெண்பனி எங்கிருந்து வரும்? இது பனிப்புயலல்ல. பல இறக்கைகள் ஒரே சமயம் படபடப்பது போன்ற ஒலி அது. எய்டர் வாத்துக் கூட்டம் தலைக்கு மேல் பறந்து செல்லும் போது இத்தகைய மெல்லோசை உண்டாகும்.

தலைவி சாவிக் கொத்தைக் கொண்டு வந்து கதவைத் திறந்தாள்.

தலைவி காட்டிய அறைக்குள் புகுந்தாள் தெக்ரீனே. அங்கே இன்னும் இரு பெண்கள் தூங்கிக் கொண்டிருந்தார்கள். உண்மையில் ஒருத்திதான் உறங்கிக் கொண்டிருந்தாள். மற்றவள் தெக்ரீனே படுக்கையில் சாய்ந்த ஓரிரு நிமிடங்களுக்கெல்லாம் விழித்துக் கொண்டு, ''தூங்கிவிட்டாயா அம்மா?'' என்று கேட்டாள்.

''இன்னும் இல்லை.''

''உன் பெயர் என்ன?''

''தெக்ரீனே.''

''தெக்ரீனேயா? இம்மாதிரிப் பெயரை இதற்கு முன் கேட்டதே கிடையாது. கேட்க இனிமையாகத் தான் இருக்கிறது. நீ சுகோத் காவிலிருந்து வந்திருக்கிருய், இல்லையா?''

''ஆமாம். உன் பெயரென்ன?''

''என் பெயர் ஸ்வெத்லாஞ. சுருக்கப் பேர் ஸ்வேதா. நீ வருவதற்கு ரொம்ப நாளாகி விட்டதே, ஏன்? தேர்வுகள் விரைவில் முடிந்து விடுமே.''

''தேர்வில்லாமலே என்னைச் சேர்த்துக் கொண்டு விட்டார்கள். என்னுடைய தஸ்தா வேஜுகளைத் தபால் மூலம் அனுப்பினேன். என்னைச் சேர்த்துக்கொண்டுவிட்டதாகப் பதில் வந்தது.''

''பள்ளிக்கூடத்தில் கடைசித் தேர்வுக் குப்பின் பதக்கம் கிடைத்திருக்கும் உனக்கு.''

''ஆமாம். வெள்ளிப் பதக்கம் தான்.''

''வெள்ளிப் பதக்கம் போதுமே. நீ தேர்வு கொடுக்க வேண்டியதில்லை. கெட்டிக்காரி நீ! சரி, தூங்கலாம். பிரயாணக் களைப்பு இருக்கும் உனக்கு. நீண்ட பிரயாணமோ?''

''இல்லை. விமானத்தில் வந்தேன்.''

''விமானத்திலா? போடு சக்கை! பயமா யிருந்திருக்குமே!''

''கிடையவே கிடையாது.''

''ஆகா, எவ்வளவு ரசமான செய்தி!

நாளைக்கு உன் அனுபவங்களை எல்லாம் எங்களுக்குச் சொல்ல வேண்டும். சொல்கிறாயா? நான் என் வாழ்நாளிலே ஒரு தடவை கூட விமானத்தில் போனதில்லை. நல்லது, இப்போது தூங்குவோம். எங்கள் இருவருக்கும் நாளை பாடங்கள் படிக்க வேண்டும்.''

''சரி, தூங்கு.''

பேச்சோடு சரி. இரண்டு நிமிடங்களுக்கெல்லாம் ஸ்வெத்லானா இரகசியக் குரலில், ''தெக்ரீனே, தூங்கிவிட்டாயோ?'' என்றாள்.

''இல்லையே.''

''எந்தப் பிரிவில் சேர்வாய்?''

''இயற்கை விஞ்ஞானப் பிரிவில். நீயோ?''

''நான் இலக்கியம் பயில்வேன். ருஷ்ய மொழியும் இலக்கியமும் என்பது என் பிரிவின் பெயர். வார்யாவும் இலக்கியப் பிரிவுதான். அவள்தான், நமது அறைத் தோழி. அவள் பெயர் வார்யா.''

''நான் இலக்கியமும் கற்க விரும்பினேன். ஆனால் முடியாதென்று சொல்லிவிட்டார்கள். இரண்டு விஷயங்களை ஒரே சமயம் எடுத்துக் கொள்ளக் கூடாதாம்.''

''வாஸ்தவந்தான். இரண்டு விஷயங்களை ஏககாலத்தில் எடுத்துக்கொள்ளக் கூடாது. ஒரு சமயம் ஒரு விஷயம்.''

''நான் விரும்பினால் இயற்கை விஞ்ஞானப் பிரிவில் என்னைச் சேர்த்துக் கொள்வதாகவும் ஏதேனும் வட்டத்தில் சேர்ந்து வேண்டுமானால் இலக்கியம் பயிலலாம் என்றும் கல்லூரி அதிகாரிகள் எனக்குத் தெரிவித்தார்கள்.''

''சரிதான். இலக்கிய வட்டத்தில் சேர்ந்து கொள். அதோடு கூட... இதைக் கேள். எனக்கு என்ன தோன்றுகிறது, சொல்லட்டுமா?''

''என்ன?''

''கேளு, எனக்கு இயற்கை விஞ்ஞானத்தில் கொள்ளை ஆசை. ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ளுவோமே. எங்கள் பிரிவில் கற்றுத் தருவதை எல்லாம் நான் உனக்குச் சொல்லுகிறேன். உங்கள் பிரிவில் கற்பிப்பதை நீ எனக்குச் சொல்லு. சம்மதமா?''

''சம்மதம்.''

''சரி. ஒப்பந்தமாகிவிட்டது. இப்போது தூங்குவோம். இல்லாவிட்டால் நாளை மறு நாள் தேர்வில் கோட்டைவிட்டுவிடுவேன். ஒப்பந்தமெல்லாம் காற்றோடு போய்விடும்.''

பெண்கள் இருவரும் மீண்டும் மௌனமாயினர். ஒரு நிமிடத்துக்குத்தான். இம்முறை மௌனத்தைக் கலைத்தவள் தெக்ரீனே.

''ஸ்வெத்லானா!'' என்று காதுக்குக் கேட்காதோ என்னும்படி மெல்லென அழைத்தாள்

அவள், ஒருகால் ஸ்வெத்லானு தூங்கிப் போயிருந்தால் எழுப்பிவிடக் கூடாது என்பதற் காக.

''ஏன்?''

''ஸ்வெத்லானு, ஒரே ஒரு கேள்வி. இந்த ஊரிலே தொலைநோக்கி கிடைக்குமோ?''

''என்ன கிடைக்குமோ?''

''தொலைநோக்கி.''

''ஓ, தொலைநோக்கியா! கிடைக்குமே. சில கடைகளை ஏற்கனவே சுற்றிப்பார்த்து விட்டேன். நானும் இந்த ஊருக்குப் புதிது, தெரியுமல்லவா?''

''உனக்கு எந்த ஊர்?''

''கோம்ஸமோல்ஸ்க். ஆமாம், எதற்காக உனக்குத் தொலைநோக்கி?''

''அது பெரிய கதை.''

''உன்னுடைய தோழன் அனுப்பச் சொன்னுனே?''

''இல்லை. இது தோழனுக்காக அல்ல. விவரமெல்லாம் விடிந்த பின் சொல்கிறேன். தூங்கலாம்.''

ஒரு வகையாக இரண்டு பெண்களும் உறக்கத்தில் ஆழ்ந்தனர்.

ஜன்னல் திரை வழியாக வெயில் சுள் ளென்று முகத்தில் உறைத்ததனுல் விழித் தெழுந்தாள் தெக்ரீனே. படுக்கைக்கு அருகே யிருந்த நாற்காலி மீது அவளுடைய உடை தொங்கிக் கொண்டிருந்தது. உடையில் ஒரு காகிதத் துண்டு பின் குத்தப்பட்டிருந்தது. தெக்ரீனே பின்னைக் கழற்றிக் காகிதத்தைப் படித்தாள்.

''நாங்கள் இருவரும் பாடம் படிக்கப் போகிறோம் (உன் பெயர் தூங்கும்போது மறந்து போய்விட்டது. கேட்க இனிமையானது என்று மட்டும் நினைவிருக்கிறது. என்ன என்பதுதான் நினைவில்லை). நீ ஆழ்ந்து தூங்கிக் கொண் டிருந்தாய். அதனுல்தான் உன்னை எழுப்பவில்லை. எங்கள் அலமாரிகளிலிருக்கும் பண்டங்களை நீ சாப்பிடலாம். சில ருசிகரமான பணியாரங் கள் இருக்கின்றன. இஸ்திரிப் பெட்டி வேண்டு மானுல் தலைவியைக் கேள். அவள் பெயர் தூன்யா அத்தை. மின்சாரம் வந்துவிட்டது, வேண்டுமானுல் மின்சார இஸ்திரிப் பெட்டியை உபயோகித்துக்கொள். கல்லூரிக்கு வந்து எங் களைப் பார்க்க விரும்பினுல் விரிவுரை அறை 62ல் தேடிப்பார். ஸ்வேதாவும் வார்யாவும்'' என்று அதில் எழுதியிருந்தது.

ஆமாம். இஸ்திரிப் பெட்டி வேண்டித் தான் இருக்கும். இன்று நல்ல வெயிலடிக்கும்

போலிருக்கிறது. வெள்ளை ப்ளவுஸ் போட்டுக் கொள்ளலாம். அதுவோ பெட்டியில் கசங்கிப் போயிருக்கும். ஸ்வேதா, வார்யா இருவரது அலமாரிகளிலும் இருக்கும் தின் பண்டங்களோ? அந்த ருசிகரமான பணியாரங்கள் என்ன என்றுதான் பார்த்துவிடுவோமே. கொடுப்பதை வேண்டாமென்று சொல்வது பிசகு. அவர்கள் விடுதிக்குத் திரும்பியபின் நுத்தெனெயுத் செய்து தந்திருக்கும் அப்பங்களை அவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்தால் போயிற்று.

கடிதத்தைக் கையில் பிடித்தவாறே தலையணையில் சாய்ந்து ஆனந்தமாகச் சோம்பல் முறித்தாள் தெக்ரீனே.

இதென்ன விசித்திரமான ஜன்னல் திரைகள்! எங்கும் புள்ளி புள்ளியாக.... அடே, இந்தப் புள்ளிகள் அசைகின்றனவே! புள்ளிப் படம் துடிதுடிக்கிறது; மாறுகிறது; ஆழ்ந்த கறுப்பாகிறது; நிறம் மங்குகிறது!... தெக்ரீனே கண்களைச் சுருக்குகிறாள்; பின்பு குழந்தை போலப் புறங்கைகளால் அவற்றைக் கசக்குகிறாள். இல்லவே இல்லை. இவை புள்ளிகள் அல்ல. தெருப்பக்கமிருந்து விழும் நிழல்கள். அப்படியானால்....

தெக்ரீனேக்கு அவை என்ன என்பது சட்டென உதயமாகிறது. ஏதோ ஒரு திரைப் படத்தில் அவள் இது போன்ற காட்சியைக்

கண்டிருக்கிருள். காற்றில் சிலிர்த்து அசையும் இலைகளினூடே பாய்ந்து நடம் புரியும் வெயில் கற்றைகள் இவை.

சயன உடை மட்டுமே அணிந்த மேனியும் வெறுங்காலுமாக ஜன்னலருகே பாய்ந்து அதை விரியத் திறக்கிருள் தெக்ரீனே. ஓங்கி வளர்ந்த இரு பிர்ச் மரங்கள் கிளைக் கரங்களை அவள்பால் நீட்டுகின்றன. பசிய இலைகள், குளுமையான இலைகள். அவற்றை விரல்களால் வருடலாம்; கன்னத்தில் ஒத்திக்கொள்ளலாம்; உதடுகளோடு பொருத்திக்கொள்ளலாம்....

தெக்ரீனே கீழே பார்க்கிருள். ஆம், இது முதல் மாடி. நேற்றிரவு தூன்யா அத்தை சாவிக் கொத்தை எடுத்துவரப் போயிருந்த போது வாயிலில் நின்றுகொண்டு அவள் கேட்டது—அட, இது தோன்ருமல் போய்விட்டதே! இங்கே ஏது எய்டர் வாத்துக் கூட்டம்? அவளுடைய அறியாமை, மரங்கள் தரையருகேதான் சலசலக்குமாக்கும் என்று எப்போதுமே எண்ணி வந்தாள். தலைக்கு மேலே வெகு உயரத்தில் சலசலக்குமென்று அவள் கண்டாளா? சென்ற இரவு அவள் தலைக்கு மேலே மெல்லோசை செய்தவை பிர்ச் மரங்கள்தாம். பிர்ச் மரங்கள் அவளுக்கு அளித்த வரவேற்பு அது!



அந்திரேய் ஊப்பித்
(1877-1960)

சோவியத் யூனியனின் மேற்கே, பால்டிக் கரையில் திகழும் லாட்வியக் குடியரசின் மக்கள் எழுத்தாளராவார் அந்திரேய் ஊப்பித். லாட்வியத் தொழிலாளர்களும் குடியானவர்களும் வலைஞர்களும் தங்கள் தாய்நாட்டின் விடுதலைக்காக இடைவிடாது போராடினர் (லாட்வியா சோவியத் குடியரசானது 1940ம் ஆண்டில்

தான்). இந்தப் போராட்டத்தில் அந்திரேய் ஊப்பித்தின் நூல்கள் பெரும் பங்கு ஆற்றின.

ஊப்பித் லாட்வியாவின் கோர்க்கிய் என அடிக்கடி அழைக்கப்படுகிறார். அவர் ஏழைக் குடியானவனின் மகனாகப் பிறந்தார், கிராமப் பள்ளி ஆசிரியரானார், பின்பு யதார்த்த வாதி எழுத்தாளராக மலர்ந்தார். பூர்ஷ்வா லாட்வியாவில் பல முறை சிறை சென்றார். மரண தண்டனை கூட அவருக்கு விதிக்கப்பட்டது.

அறுபது ஆண்டுகளாக எழுதிவரும் அந்தி ரேய் ஊப்பித், பத்தொன்பது நாவல்கள் இயற்றி யுள்ளார். ''பசுந்தரை'', ''கரு முகி லில் ஒளிக்கதிர்'' முதலிய இந்த நாவல்கள் லாட்வியக் குடியானவர்களின் வாழ்வையும் போராட்டங்களையும் சித்திரிக்கின்றன. இவை தவிர, இருபது சிறுகதைத் தொகுதிகள், பல நாடகங்கள், கவிதைகள் ஆகியன அவரது படைப்புக்கள்.

''மதம் மாறியவன்'' என்பது ஊப்பித் எழுதியுள்ள சிறந்த கதைகளில் ஒன்று. கீழ் நாடுகளில் ஐரோப்பிய பூர்ஷ்வாக்களது காலனிக் கொள்கையின் பொய் முகமூடியைக் கிழித் தெறிந்து அதன் கோரரூபத்தை வெளிக் காட்டு கிறது இக்கதை.

# மதம் மாறியவன்

அவனுடைய அம்மா கைக்குழந்தைக்குப் பால் கொடுப்பாள்; புதர்களிலிருந்து பறவை முட்டைகளும் எறும்பு முட்டைகளும் பொறுக்கித் திரட்டுவாள்; ஆற்றில் மீன் பிடிப்பாள். அவனுடைய அப்பன் நியாங்கீ பள்ளத்தாக்கில் மாடு மேய்ப்பான்; தன் இனத்தாருடன் தொலை ஏரிக் கரைக்கு வேட்டையாடப் போவான்—அங்கே ஆற்றோரப் புதர்களில் சுவையுள்ள பெரிய பாம்புகள் உண்டு, பள்ளத்தாக்கிலோ, செல்வச் செழிப்புள்ள இனத்தார் வாழ்ந்து வந்தார்கள். அப்பனும் மற்றவர்களும் சில வேளை பெருத்த கொள்ளையுடன் திரும்புவார்கள், சில வேளை வெறுங் கைகளும் அம்புக் காயங்களுமாக வந்து சேருவார்கள். நியாங்கீ கரையிலிருந்த பெரிய மரத்தின் பொந்தில் அப்பன் ஒரு கண்ணாடிச் சில்லு

வைத்திருந்தான். அந்தச் சில்லுக்குள்ளே அப்பனைப் போலவே ஓர் ஆள் உண்டு. வேட்டை நல்லபடியாக வாய்த்தால் அப்பன் மரப் பொந்திலிருந்து அந்தச் சில்லை வெளியே எடுத்து மரக்கிளையில் தொங்க விட்டு அதற்கு எதிரே நின்றுகொண்டு சாப்பிடுவான். அப்போது கண்ணாடிச் சில்லுக்கு உள்ளே இருந்த ஆளும் சாப்பிடுவான், சந்தோஷமாயிருப்பான். கால்களில் காயங்களும் தலையிலும் முதுகிலும் இரத்தமுமாக அப்பன் திரும்பி வந்தால் கண்ணாடி ஆளும் மூஞ்சியைச் சுளித்துக்கொண்டு வலி பொறுக்க மாட்டாமல் கூக்குரலிடுவான், துக்கமாயிருப்பான். அவனைத் தண்டிக்கும் பொருட்டு அவன் மேலெல்லாம் சேற்றைப் பூசி, பொந்துக்குள்ளே உறங்கச் செய்து மேலே பாறாங் கல்லை வைத்துவிடுவார்கள். அடுத்த தடவை தொலை ஏரிக் கரையில் அப்பனுக்கு ஒரு பசுவோ, கோடரியோ, யானைத் தந்தமோ அல்லது மினுமினுக்கும் மஞ்சள் பொத்தானோ கிடைக்கும்படி உதவும் வரை அந்த ஆள் பொந்துக்குள்ளேயே கிடக்க வேண்டியதுதான். மஞ்சள் பொத்தான் கிடைத்தால் எல்லாவற்றையும் விட நல்லது. அதைக் கொடுத்து இரண்டு பசுக்களும், ஒரு தோணியும், தண்ணீர் மொள்ளுவதற்கும் காய்ச்சுவதற்கும் உதவும் மிக மிக நல்ல தகரக் குவளையும் மாற்றாகப் பெறலாமே.

அவன் இன்னமும் சின்னவன், சோனி. பெரியவர்களைப்போல அவன் தோல் இன்னும் கன்னங்கறேல் என்று பளபளக்கவில்லை. அப்பன் குடிசையிலோ அக்கம் பக்கத்துக் குடிசைகளிலோ ஏதாவது திருடித் தின்ன முடியாத நாட்களிலே என்ன காரணத்தாலோ அவன் சூனுவயிறு பொருமிக் கொண்டு கனக்கும். ஆகவே பெரியவர்கள் கூடத் தின்னுத கழிவுப் பண்டங்களைச் சர்வ சாதாரணமாகத் தின்பான். கெட்ட நாட்களிலோ, புதரில் எறியப் பட்டிருக்கும் எலும்புகளையும் பழத்தோல், கொட்டை முதலியவைகளையும் தின்றே திருப்தி அடைவான். அவன் பற்கள் எந்தப் பண்டமானுலும் அனுயாசமாகக் கடித்து நொறுக்கிவிடும். அவன் வயிறு ஜீரணிக்க முடியாதது எதுவுமில்லை. ஒரேயடியாக அடர்ந்து முள் செறிந்த புதர்களுக்கிடையே கூட நுழைந்து சென்றுவிடுவான்; ஆற்றில் வெகு தூரம் நீந்துவான்; துரத்துபவர்களிடமிருந்து தப்பும் பொருட்டுத் தண்ணீரில் மூழ்கி மறைந்துகொள்வான். மிக மிக மிரளும் பசுவின் அருகே கூட மெல்ல ஊர்ந்து போய் அதன் பாலை உறிஞ்சிக் குடித்து விடுவான். அம்மா கையை வெடுக்கென்று கடித்தானுல் சந்திரன் இரண்டு தடவை முழுமையாக நிறைந்து, இரண்டு தரம் வானத்திலிருந்து மறையும் வரை அந்த ஆழ்ந்த புண் ஆருது.

ஒரு முறை பச்சைக் கைக்குட்டை ஒன்றைத் திருடும் அதிர்ஷ்டம் அவனுக்கு வாய்த்தது. பெரியவர்கள் செய்வது போலவே அதை இடுப்பைச் சுற்றிக் கட்டிக்கொண்டான்; அம்மணமாயிருந்த சிறுவர் கூட்டம் ஒரே பொறுமையும் வியப்புமாகப் பார்க்க, இரண்டு நாள் பெரிய தனுக்குப் பண்ணிஞன். அப்புறம் பெரியவர்கள் அவனிடமிருந்து கைக்குட்டையைப் பிடுங்கிக்கொண்டு விடவே, தன் வயதினரான மற்றவர்களைப் போலவே அவனும் முண்டக் கட்டையாகிவிட்டான்.

பெரும்பாலான நேரத்தைச் சிறுவர்கள் ஆற்றின் கரையிலேயே கழிப்பார்கள். கழிகளும் கைகளுமாய்த் தண்ணீர் ஓரமாக உட்கார்ந்து, பெரிய மீன் ஏதாவது கரை அருகே வராதா என்று காத்திருப்பார்கள். மீன் கரையை நெருங்கிற்ருே இல்லையோ, கழிகளால் மடார் மடார் என்று அதன் மேல் அடிப்பார்கள். பெரு மழை பெய்து ஓய்ந்து, ஆற்றங்கரை மணல் மெத்தென்று இறுகிய பின்பு, ஆற்றுப் பெருக்கை ஒட்டிஞற் போல நடந்து அருவிக் கரை வரை போவார்கள். முன்ஞெரு காலத்தில் அந்த இடத்தில் உடைந்த படகையும் அதிலே ஒரு வெள்ளைக்காரியையும் கண்ட பெரியவர்கள் அவளைப் பிடித்துத் தின்றுவிட்டார்களாம். அந்த மாதிரி விஷயங்கள் இப்போது நடப்பது

அருமை. கிழவர்களுக்கு மட்டுமே இந்தச் சேதி நினைவிருந்தது, அதுவும் அரைகுறையாக. தங்கள் வாழ்க்கையில் எல்லாவற்றிலும் முக்கிய மான நிகழ்ச்சி அது என்று அவர்கள் சொல்லு வார்கள்.

வெள்ளைக்காரர்களின் படகுகள் ஆற்றின் வழியே தொலை ஏரியை நோக்கிச் செல்வதை அவர்கள் காணலாயினர். இப்போது கொஞ்ச காலமாக இந்தப் படகுகள் அவர்களுடைய கரையோரமாக நிறுத்தப்பட்டன, வெள்ளைக் காரர்கள் அவற்றிலிருந்து இறங்கினார்கள். இது மிகமிக அடிக்கடி நிகழ ஆரம்பிக்கவே, கறுப்புக் குழந்தைகளுக்குப் பழக்கமாகிவிட்டது. அடக்கமுடியாத ஆவலால் தூண்டப்பட்டவர் களாய் அவர்கள் புதர்களுக்கு உள்ளிருந்து ஊர்ந்து வெளியே வந்து, வெள்ளையர்களை அரு காமையிலிருந்து பார்ப்பார்கள். வெள்ளைக்கா ரர்கள் எல்லாருமே தின்னத் தகுந்தவர்களாகத் தான் இருந்தார்கள், அவர்களைத் தின்ன மாத் திரம் முடியவில்லை. அவர்களிடம் விந்தையான தடிகள் இருந்தன. அவற்றிலிருந்து பெருமுழக் கத்துடன் நெருப்பு வெளிப்பட்டது. அது வெளி வந்ததுமே காட்டு மிருகங்கள் இருந்த இடத்தி லேயே நிலைத்து நின்றுவிடும், பறவைகள் வானத்

திலிருந்து பொத்தென விழுந்துவிடும், குழந்தைகளும் தரையில் கிடந்து கதற வேண்டி வரும். வெள்ளைக்காரர்களில் பலர், கேட்கப் புதுமையாயிருந்த பேச்சுப் பேசினார்கள். ஆயினும் அவர்கள் சொல்லுவதைப் புரிந்துகொள்ள முடிந்தது. யானைத் தந்தங்களோ, நெருப்புக் கோழி இறகுகளோ, பாம்புத் தோல்களோ, எது அவர்களுக்குப் பிடித்ததோ அதை அவர்கள் கேட்டார்கள், எடுத்துக்கொண்டார்கள். அவற்றுக்கு மாற்றாக வர்ணக் கைக்குட்டைகளும், பொத்தான்களும், வேறு பல பளபளப்பான அழகிய பொருள்களும் தந்தார்கள்.

வெள்ளைக்காரர்கள் மேலும் மேலும் அதிக எண்ணிக்கையில் வரத் தலைப்பட்டார்கள். நியாங்கீ ஆற்றின் கரையில் எங்கேயோ அவர்கள் குடியிருப்பு அமைத்துக் கொண்டிருப்பதாகவும், அதிலுள்ள வீடுகள் பிரம்மாண்டமானவைகள் என்றும், அவற்றின் முகடுகள் துத்தநாகக் கூரைகளால் வேயப்பட்டிருப்பதாகவும், சுவர்களில் திறப்புக்கள் இருப்பதாகவும் தகவல் கிடைத்தது. தங்களது விந்தைப் படகுகளில் ஆற்றில் மேலும் கீழுமாகப் போய் வந்தார்கள் அவர்கள். அநேகமாக ஒவ்வொரு நாளும் கரைக்கு வருவதும், கறுப்பர்களின் குடிசைகளுக்குள் ஒவ்வொன்றாய் நுழைந்து நோட்டமிடுவதும், தங்களுக்குப் பிடித்த

மானதும், கறுப்பர்களால் தாமாகவே விரும்பிக் கொடுக்கப்படாததுமான எந்தப் பொருள் கண்ணில் பட்டாலும் வலுக்கட்டாயமாகப் பிடுங்கிக்கொள்வதும் அவர்களுக்கு வழக்கமாகி விட்டன. கடைசியில் அவர்கள் ஒவ்வொரு குடிசைக்கும் இவ்வளவு வரி என்று விதித்தார்கள். வரி கொடுக்காதவனை மரத்தோடு சேர்த்துக் கட்டிச் சவுக்குகளால் அடித்தார்கள். எதிர்ப்பதற்கு முயன்றவர்களோ, வெள்ளைக்காரர்களிடமிருந்த பயங்கரமான தடிகளின் காரணமாக, பட்சிகளையும் விலங்குகளையும் போலவே தரையில் தடாலென்று விழுந்தவர்கள் அப்புறம் எழுந்திருக்கவே இல்லை. எல்லோரிலும் மிக இளமையும் வலிமையும் வாய்ந்த கறுப்பர்களாகப் பொறுக்கி வெள்ளையர்கள் தங்கள் குடியிருப்புக்கு அழைத்துப் போனார்கள். அங்கே படகுகளில் சரக்கு ஏற்றவும், வீடுகள் கட்டவும், முள் புதர்களை அகற்றித் தரையைச் சீர்படுத்தவும் அவர்களது உழைப்பைப் பயன்படுத்திக் கொண்டார்கள். கறுப்பர்களில் பலருக்கு, பழக்கமில்லாத இந்த நுகம் தாங்க முடியாது போகவே அவர்கள் ஆற்றின் அக்கரைக்குத் தப்பியோடி, முள் புதர்களுக்குள்ளே நெடுந்தூரம் புகுந்து ஒளிந்து கொண்டார்கள். அங்கேயோ தண்ணீரே கிடையாது. பிரம்மாண்டமான இராட்சத எறும்புக

ளின் வடிவில் சாவு தாண்டவமாடியது. வெள்ளை யர்கள் இந்த இடத்திலும் அவர்களைத் தேடிப் பிடித்துவிட்டார்கள். பெண்களையும் குழந்தை களையும் அங்கேயே செத்து மடியவிட்டு விட்டு, ஆண்களைச் சங்கிலிகளால் பிணைத்துத் தங்கள் குடியிருப்புக்கு ஓட்டிச் சென்றார்கள்.

இதற்கிடையே அவன் கொஞ்சம் பெரிய வனாக வளர்ந்துவிட்டான். தொலை ஏரிக்குப் பெரியவர்களுடன் அவனும் போயிருக்க முடியும். ஆனால் இப்போது இந்த வேட்டைகள் தடை செய்யப்பட்டுவிட்டன. கறுப்பர்கள் ஒருவரும் தங்கள் உத்தரவில்லாமல் இருப்பிடத்தை விட்டு எங்கும் வெளியே போகக் கூடாது என்று வெள்ளைக்காரர்கள் சட்டமிட்டு அவர்களைக் கடுமையாகக் கண்காணித்து வந்தார்கள். சொன்னபடி கேளாதவர்களைச் சவுக்கால் அடித் தார்கள். கீழ்ப்படிவாகப் பணிவிடை செய்தவர் களுக்குக் கசப்பு நீர் பருகக் கொடுத்தார்கள். இது குடித்தவர்களை ஒரே மகிழ்ச்சியும் குதூகலமு மாக ஆக்கியது. அவனுக்கும் கசப்பு நீர் குடிக்கக் கொடுத்தார்கள். முதலில் அவனுக்கு இன்பமாயிருந்தது. அப்புறம் குமட்டிக் குமட்டி வாந்தி யெடுத்தது; பொறுக்க முடியாமல்

தலை வலித்தது. கொஞ்சம் உடம்பு நேரானதும் அவன் ஆற்றோரத்துப் பெரிய மரத்தருகேபோய், கண்ணாடிச் சில்லில் வாழும் ஆள் கிடந்த பொந்துக்குள் சேற்றை அள்ளிப் போட்டான்—அந்த ஆள் அவர்களுக்கு உதவி செய்வதை நிறுத்திவிட்டான் அல்லவா? அதற்காக.

மழை தொடங்குவதற்குமுன் வெள்ளைக்காரர்கள் ஒரு கிழவனை உடன் அழைத்து வந்தார்கள். அவன் முகமெல்லாம் வெண் இறகுகள் அடர்ந்திருந்தன. அவனிடம் சத்தமிடும் தடியில்லை. ஆரம்பத்தில் சவுக்குக் கூட இல்லை. அவன் திட்டுவதோ உதைப்பதோ கிடையாது. அவன் கழுத்தில் பளபளப்பான சங்கிலி தொங்கியது. சங்கிலியுடன் மஞ்சள் நிறமான சின்னப் பொருள் ஒன்று பொருந்தியிருந்தது. ஒன்றின் குறுக்கே ஒன்றாக இணைக்கப்பட்ட இரண்டு குச்சிகளால் ஆனது அது. கிழவன் நன்றாகப் புரியும் பாஷையில், மிக அன்போடு பேசினான். சவுக்கடி தண்டனை பெற்றபின் கறுப்பர்கள் மரத்திலிருந்து கட்டவிழ்க்கப்பட்டுக் கதறிக்கொண்டு தரையில் புரளும்போது, கிழவன் அவர்கள் அருகே வந்து ஈக்களையும் மற்ற ஊன் தின்னிப் பூச்சிகளையும் விரட்டுவான்; அவர்களது காயங்களில் மருந்து தடவுவான். அதைத் தடவியதுமே காயம் பட்டவர்களுக்கு அப்பாடா என்றிருக்கும். முழங்கும் தடிகளால்

கொல்லப்பட்டவர்களை மணலில் புதைக்கும் படி அவன் உத்தரவிடுவான். தான் அருகாமையில் நின்று எதெதையோ பற்றி நெடுநேரம் பேசுவான். அவன் கண்கள் மேலே உற்றுப் பார்க்கும். கடைசியில் அவற்றில் நீர் நிறைந்து, முகத்து வெண் இறகுகள் மீது வழிந்தோடும். ஒரு தடவை சங்கிலியால் பிணைக்கப்பட்ட கறுப்பர்கள் கூட்டம் தொலை ஏரிப் பக்கமிருந்து ஓட்டிச் செல்லப்பட்டபோது, கிழவன் தெருவோரத்தில் இரண்டு கைகளையும் விரித்தவாறு நின்றுகொண்டு அவர்கள் விழுந்து விடாதபடி பார்த்துக்கொண்டான். கடைசிக் கைதி கடந்து செல்லும் வரை கிழவன் அப்படியே நின்று கொண்டிருந்தான். ஆண்கள் கால்களில் அணிந்து கொள்வதற்கு மஞ்சள் காப்புகளும், பெண் பிள்ளைகளுக்கு, நீலமும் கறுப்புமான துணிகளும் கொடுத்தான். பையன்களோடு சேர்ந்து மணலில் நிர்வாணமாகப் புரண்டு விளையாடிய சின்னப் பெண்களுக்குக் கூட ஆளுக்கொரு துணி பரிசளித்தான். அவர்கள் அம்மணமாக வளையவராதபடி கண்டிப்பாகத் திட்டப்படுத்தினான். நேர மெல்லாம் அவன் குழந்தைகள் நடுவிலேயே கழித்தான். தனது உடைகளிலே வைத்திருந்த விந்தை விந்தையான எத்தனையோ பொருள்களைக் குழந்தைகளுக்குக் காட்டினான். மடக்கி விரிக்கும் படியான ஒரு சாமான்

அவனிடம் இருந்தது. மிகமிக முரடான நாணலைக் கூட அதைக்கொண்டு ஒரு நொடியில் இரண்டு துண்டாக்கிவிடலாம். மினுமினுக்கும் சின்னஞ்சிறு முள் இருந்தது. அதற்கு நீண்ட வால் உண்டு. இரண்டு துணித் துண்டுகளை அதனால் மளமளவென்று ஒன்றாக்கிவிடலாம். வெள்ளையான சில சிறிய மரக்குச்சிகள் இருந்தன. எதன் மீதாவது லேசாக உராய்ந்தாலும் போதும், அவற்றில் உண்மையான தீ பற்றி யெரியும். இன்னும் புதுமையானவையும் கவர்ச்சியுள்ளவையுமான எத்தனையோ சாமான்கள் அவனிடமிருந்தன. வெள்ளையர்கள் மட்டுமே வாழும் நாடுகளைப் பற்றியும், பெரிய குடியிருப்பில் உள்ளவற்றை விட உயரமான வீடுகள் நிறைந்த நகரங்களைப் பற்றியும் அவன் அவர்களுக்குக் கதைகதையாய்ச் சொல்லுவான். அந்த நாடுகள், நகரங்களிலே ஜனங்கள் நெருப்பு வண்டிகளிலும் நெருப்புப் படகுகளிலும் ஏறிப் போவார்களாம். குழந்தைகள் கலகலவென்று சிரிப்பார்கள்; அவனைச் சுற்றிக் குதித்தாடுவார்கள். அவனிடம் அவர்களுக்குப் பயமே கிடையாது. கொஞ்சங்கொஞ்சமாக அவர்கள் அவனிடம் ஓரேயடியாகப் பழகிப் போய் விட்டார்கள். ''ஊறுவாய்ச் சடையன்'' என்று அவனுக்குப் பெயர் வைத்தார்கள்.

உளறுவாய்ச் சடையனிடம் பல அபூர்வப் பொருள்களுடன் கட்டுக் கட்டாக வர்ணக் காகிதங்களும் இருந்தன. அவற்றை அவன் அடிக்கடி நீண்ட நேரம் உற்றுப் பார்ப்பான். சில சமயங்களில் இந்த வர்ணக் காகிதங்களை நோக்கியவாறே பேசத் தொடங்குவான்; ஏதோ அவன் சொல்லுவதை அவை புரிந்துகொண்டு விடும் போல. சில வேளைகளில் வேண்டிய அளவு பேசிமுடித்ததும் முழந்தாள் படியிட்டு அமர்ந்து, கைகளைக் குவித்து, உதடுகளை அசைத்தபடியே வானத்தை அண்ணுந்து பார்ப்பான், அங்கே பார்ப்பதற்கு ஏதோ இருப்பது போல. குழந்தைகளும் அவன் அருகே முழந்தாள் படியிட்டு உட்கார்ந்து அண்ணுந்து நோக்குவார்கள். வெறுமையான நீல வானில் ஒன்றுமில்லை என்று நிச்சயமானதும் ஒருவருக்கொருவர் கண்களால் ஜாடை செய்துவிட்டுச் சிரித்துக் கொண்டே எழுந்து உளறுவாய்ச் சடையனிடமிருந்து ஓடியே போய்விடுவார்கள். அவர்களுக்கு அவன் பெரிய வேடிக்கைக்காரனுகத் தென்பட்டான். இம்மாதிரிக் குறும்புகளுக்காக அவன் அவர்கள் மேல் கோபித்துக்கொள்ளுவான், சவுக்கடி கொடுப்பதாகப் பயமுறுத்துவான். ஆயினும் ஒரு முறை கூட அவன் அவர்

களைச் சவுக்கால் அடிக்கவில்லை ஆதலால் அவர்கள் மறுபடியும் அவனிடம் வருவார்கள்.

உளறுவாய்ச் சடையனுக்கு வெள்ளைக்காரர்கள் பேசுவதுபோலவும் பேச வரும். குழந்தைகள் அவனிடமிருந்து நாளுக்கு ஒரு வார்த்தையாகக் கற்றுக்கொண்டார்கள். வெள்ளைக்காரர்கள் தங்களுக்குள் பேசிக் கொள்வதை அவர்கள் விரைவிலேயே புரிந்து கொண்டார்கள். தன்னுடைய காகிதங்களிலுள்ள ஒவ்வொரு அடையாளமும் ஒவ்வொரு வித ஒலியைக் குறிக்கும் என்று உளறுவாய்ச் சடையன் பின்பு விளக்கினான். இந்த ஒலிகளை அவன் ஒன்றன் பின் ஒன்றாக உச்சரித்ததும் ஒவ்வொரு முறையும் அவை வெள்ளையர் பேச்சின் ஏதாவது ஒரு சொல்லாக உருவாயின. இது மிகவும் வேடிக்கையாயிருந்தது, எனவே குழந்தைகள் மகிழ்வுடன் அவனிடமிருந்து கற்றுக்கொண்டார்கள். வர்ணக் காகிதங்களுக்குக் குரல் இல்லை என்றாலும் அவற்றால் பேச முடியும் என்று இப்போது அவர்கள் அறிந்துகொண்டார்கள்.

இந்தக் காகிதங்கள் யாரோ ஒருவனைப் பற்றி உரையாடின. அந்த ஆள் வெள்ளையனுமல்ல, கறுப்பனுமல்ல, மனிதனோ, யானையோ அல்லது குரங்கோ அல்ல, என்றாலும் இவை எல்லாவற்றைக் காட்டிலும் வலிமை மிகுந்தவன். கண்ணாடிச் சில்லுக்குள் இருந்தவனையும்

விடச் சக்தி மிக்கவன். மழைப்புயல் அடிக்கும் போது மேகங்களிலிருந்து விழுந்து, புதர்களுக்கு மேலே உயர்ந்து நிற்கும் பெரிய பெரிய மரங் களை மளக்கென்று முறித்துவிடுமே நெருப்புப் பந்து, அதையும் விட அதிக பலமுள்ளவன். இவனுக்குப் பொல்லாத கோபம் — வெள் ளையர்கள் மேல் கொஞ்சந்தான், கறுப்பர் கள் மீதோ மிகக் கடுமையான கோபம். எல் லாப் பிராணிகளிலும் சக்தி மிக்கது முதலை அல்லது பெரும் பாம்பு என்று கறுப்பர்கள் எண்ணுவதும், கண்ணுடியில் இருப்பவனுக்கு உணவு ஊட்டுவதோ அல்லது அவன்மேல் சேற் றைப் பூசுவதோ செய்வதுமே இந்தக் கோபத் துக்கு முக்கியக் காரணம். அவர்கள் வெள்ளைக் காரியைத் தின்றதற்குத் தண்டனையாக இவன் பெரிய நெருப்பு மூட்டியிருக்கிறான்; கறுப்பர் களை எல்லாம் அதிலே வாட்டி வதக்கி வேக வைப்பதற்கு ஆயத்தம் செய்து கொண்டிருக்கி றான். இவனுக்கு ஒரு மகனும் உண்டு. கெட்ட மனிதர்கள் அவனை மரத்திலே தூக்குப் போட்டு விட்டார்கள். ஆனாலும் அவன் உயிரோடு இருக்கிறான். அவன் தன் தகப்பனை விடச் சின்ன வன்; அதிகக் கருணை யுள்ளவன். வெள்ளை மனி தர்கள் மேல் அவனுக்கு மிகுந்த அன்பு, கறுப் பர்கள் மேல் கொஞ்சம் போல. இந்த அன்பிற் குத் தகுதி பெறும் பொருட்டுக் கறுப்பர்கள்

உளறுவாய்ச் சடையன் அணிந்திருப்பது போன்ற பொருளைக் கழுத்தில் அணிந்து கொள்ள வேண்டும், தரையில் முழந்தாள் படியிட்டு அமர்ந்து, கைகளைக் குவித்துக்கொண்டு வானத்தை அண்ணாந்து பார்க்க வேண்டும். இப்படியெல்லாம் இந்தக் காகிதங்கள் சொல்லின. குழந்தைகள் சந்தோஷமாக இவ்வாறே செய்தார்கள். நாளடைவில் அவர்களுக்கு இது வழக்கமாகிவிடவே அவர்கள் சிரிப்பதைக்கூட விட்டுவிட்டார்கள்.

எவனைப் பற்றி நாம் இந்தக் கதையைத் தொடங்கினோமோ அவன் இப்போது வெறும் அவன் ஆக இல்லை, பால் பெர்ன்ஹார்ட் ஆகிவிட்டான். உளறுவாய்ச் சடையன் அவன் தலையில் கொஞ்சம் தண்ணீரைக் கொட்டி அவனுக்கு இந்தப் பெயர் இட்டான். பிறந்த மேனியாய் வளையவர இப்போது அவனுக்குத் துணியில்லை. அவனுக்குக் காற்சட்டையும் கோட்டும் மாட்டி, வெள்ளையர்களிடம் இருப்பது போலவே விளிம்பு அகன்ற தொப்பி அணியக் கொடுத்தார்கள். காற்சட்டை வேதனை உண்டாகும் படி கிச்சுக் கிச்சு மூட்டியது, நடைக்குத் தடையாயிருந்தது. அது அவனுக்குப் பழக்கமாக நீண்ட காலம் பிடித்தது. தொப்பி

யைப் பற்றித்தான் அவனுக்கு ஒரே பெருமை. மற்றக் குழந்தைகளிடம் பிரமாதமாகப் பீற்றிக் கொள்வான். உறங்குவது கூடத் தொப்பியும் தலையுமாகத் தான். கேட்பதை மிகமிக விரைவாக அவன் புரிந்துகொண்ட படியால் உளறுவாய்ச் சடையனுக்கு மற்றவர்களை விட அவனிடம் அதிகப் பிரியம். புத்தகம் என்பது என்ன என்று அவனுக்குத் தெரியும். வெள்ளையர்களுடைய மொழியில் படிக்கவும் அவர்களுடன் உரையாடவும் அவனால் முடியும். உளறுவாய்ச் சடையன் உளறுவாய்ச் சடையனே இல்லை, பெனிடிக்ட் பாதிரியார் என்பதை அவன் அறிந்து, எப்போதும் நினைவில் வைத்திருந்தான். புத்தகத்தில் சொல்லப்பட்ட மகா பெரியவனும் கோபக்காரனுமான ஆளே பெனிடிக்ட் பாதிரியாரை அவர்களிடம் அனுப்பியிருந்தான் ஆதலாலும், தமது கிழ எஜமானனைப் போலவே பெனிடிக்ட் பாதிரியாரும் கோபமும் இரக்கமின்மையும் காட்ட முடியும் ஆதலாலும் அவர் கையை முத்தமிட வேண்டும் என்பதையும் அவன் மறப்பதில்லை. பெனிடிக்ட் பாதிரியார் மட்டும் தாம் கிழ எஜமானனின் மகனைப் போலவே கருணை காட்டவும் பரிவாக நடந்து கொள்ளவும் முயல்வதாகச் சொல்வார். கிழ எஜமானன் பெயரும் அவன் மகன் பெயரும் இப்போது பால் பெர்ன்ஹார்டுக்குத் தெரியும்.

உலகம் எவ்வாறு படைக்கப்பட்டது என்பதையும் வெள்ளையன் உயர்ந்த களிமண்ணாலும் கறுப்பன் நியாங்கீச் சேற்றினாலும் வடிவாக்கப்பட்டார்கள் என்பதையும் அவன் அறிந்துகொண்டான். முழந்தாள் படியிடுவதும், கைகளைக் குவிப்பதும், வானத்தை அண்ணாந்து பார்ப்பதும், உதடுகளை அசைப்பதும் பெனிடிக்ட் பாதிரியாருக்கு உகப்பானவை என்று தெரிந்துகொண்டது முதல் அவன் காலையிலும் இரவிலும் மட்டுமின்றிப் பகலிலும் நடு நடுவே அப்படிச் செய்யலானான். பெனிடிக்ட் பாதிரியார் கண்ணில் பட வேண்டும் என்பதற்காக அவர் கடந்து செல்லும் இடமாகப் பார்த்துத்தான் அவன் பெரும்பாலும் இந்தச் சடங்கைச் செய்வது வழக்கம். ஆனால் பெனிடிக்ட் பாதிரியாரை மகிழ்விக்க வேண்டு மென்ற உற்சாகத்தில் ஒரு தடவை அவன் பெருத்த தவறு செய்து விட்டான்.

பெனிடிக்ட் பாதிரியார் ஒரு வெள்ளை ராணுவ அதிகாரியை வழியனுப்புவதற்காக ஆற்றங்கரை வரை வந்தார். அதிகாரி படகிலே உட்கார்ந்துகொண்டு, படகை அக்கரை சேர்க்கும்படி நான்கு கறுப்பர்களுக்குக் கட்டளையிட்டான். அவனுக்குச் செலவு கொடுத்து விட்டுத் திரும்பக் கரையேறிய பாதிரியார், ஒரு புதருக்குப் பின்னால் பால் பெர்ன்ஹார்ட்

முழந்தாள் படியிட்டு அமர்ந்திருப்பதைக் கண்டார். அவன் கைகள் கூப்பியிருந்தன; கண்கள் வானை நோக்கி யிருந்தன; உதடுகள் துடியாக அசைந்து கொண்டிருந்தன. பாதிரியாரின் சுருக்கம் விழுந்த முகத்தில் பேரின்பப் புன்னகை மிளிர்ந்தது. முழந்தாள் படியிட்ட கறுப்புப் பையனைக் கண்களிக்கப் பார்த்துக்கொண்டே சிறிது நேரம் நின்றார். கிறிஸ்தவ போதனையின் விதைகள், எங்கேயோ எட்டாத் தொலையிலிருக்கும் இந்த ஆப்பிரிக்கக் காட்டிலே கூடச் செழுமையாக முளைவிடுகின்றனவே, ஆகா, என்று மகிழ்ந்தார். பால் பெர்ன்ஹார்ட் அருகே சென்று, கம்பி கம்பியாய்ச் சுருண்ட அவனது கருமயிர்மேல் கையை வைத்தார்.

''சபாஷ் குழந்தாய், மெச்சினேன். அங்கேதான் வானத்தில், நட்சத்திரங்களுக்கும் அப்பால், கர்த்தர் உறைகிறார். நீ அவரைக் காண மாட்டாய்; எனினும் அவர் உன்னையும் எல்லோரையும் காண்கிறார். எதுவும், எவரும் அவர் கண்களுக்குத் தப்ப முடியாது'' என்றார்.

பால் பெர்ன்ஹார்ட் தந்திரமாகக் கண்களை இடுக்கிக் கொண்டு, தலையை இன்னும் ஒரேயடியாக நிமிர்த்தினான்.

''என் கண்களுக்கு அவர் தெரிகிறாரே, பாதிரியார் ஐயா!'' என்றான்.

எதிர்பாராத இந்தச் சொற்களைக் கேட்டுப் பாதிரியாருக்குக் கணநேரம் வாய் அடைத்துப் போய்விட்டது.

''இன்னமும் அவர் தெரிகிருரா?'' என்று கேட்டார்.

''ஆமாம். நீங்களும் அதோ, படகிலிருக்கும் அதிகாரியும் தெரிவது போலவே தெளிவாகத் தெரிகிருர்.''

இந்தப் பச்சைப் பொய்யைக் கேட்டுப் பாதிரியாருக்குக் கோபம் பீறிட்டுப் பொங்கியது. இருந்தாலும் இந்தக் கறுப்புப் போக்கிரியை நன்கு சோதித்துப் பார்த்துவிடலாம் என்பதற்காகத் தம்மைக் கட்டுப்படுத்திக்கொண்டார்.

''யாரைப் போல் இருக்கிருர்?''

நன்ருகப் பார்த்துக்கொள்பவன் போல வானத்தை நிமிட நேரம் உற்று நோக்கினுன் பால் பெர்ன்ஹார்ட்.

''உங்களைப் போலவே இருக்கிருர். அவர் தாடிதான் இன்னும் நீளம், ஒரே சல்லாரி பில்லாரியாய்க் கிடக்கிறது. இன்று காலை அதை வாரிவிட்டுக் கொள்ள மறந்துவிட்டார் போலிருக்கிறது.''

''ஓகோ, அப்படியா? இப்போது என்ன செய்கிருர்?''

''புகை குடிக்கிருர்.''

''புகை குடிக்கிறாரா?''

''ஆமாம். இத்தனும் பெரிய சுங்கான். எங்கள் பானை அவ்வளவு பெரியது. அதைப் புகைக்கிறார். அதிலிருந்து அடிக்கிறது ஒரே நாற்றம். வெள்ளைக்காரச் சிப்பாய்கள் சுங்கான் புகைக்கும் போது அடிப்பதைவிடக் கெட்ட நெடி. இவ்வளவு கொடிய துர்நாற்றம் உங்கள் மூக்கில் படவில்லையா என்ன?''

பெனிடிக்ட் பாதிரியாரின் விரல்கள் அவரையும் அறியாமல் கருஞ்சுருட்டை மயிர்களை இறுகப் பற்றின. ஆனால் அவர் இன்னும் தம்மைக் கட்டில் வைத்திருந்த படியால் விரல்களைத் தளர்த்தினார். இந்த உதவாக்கரைக் கறுப்பனைக் கடைசிவரை சோதித்துப் பார்த்து விட வேண்டும் என்பது அவருக்கு.

''ஆமாம், படுகிறது. அவர் இன்னும் என்ன செய்கிறார்?''

''இப்போதுதான் அவர் ஒரு வெள்ளைக்காரனுக்கு விட்டார் பாருங்கள் உதை, நேற்று எங்கள் அப்பன் விழுந்தானே, அதே போலக் குப்புற அடித்து விழுந்தான் அவன். அவர்தான் ரொம்ப பலசாலி ஆயிற்றே, வெள்ளைக்காரனால் அவரை ஒன்றும் பண்ண முடியவில்லை.''

பெனிடிக்ட் பாதிரியாரின் பொறுமை தீர்ந்து போய்விட்டது. இடது கையால் பையன் கருஞ்சிண்டை லபக்கென்று பற்றினார்,

வலது கையால் பையிலிருந்து சாட்டையை உருவினார். அதில் சிறுசிறு முடிச்சுக்களிருந்தன. கறுப்புப் போக்கிரிப் பயலைச் சுளீர் சுளீரென்று விளாசிக் கொண்டே வசவும் திட்டுமாகப் பொழிந்து தள்ளினார். நியாயமான பெருங் கோபத்தால் தம்மை மீறிய நிலையிலிருந்தார் அல்லவா? அதனால்.

''ஏனடா, சபிக்கப்பட்ட நரகத்துக் குட்டிச் சாத்தான்! நீ ஒன்றையும் பார்க்கவுமில்லை; பார்க்கும் தகுதியும் உனக்கில்லை. புளுகுணிப் பயலே, சாத்தான் ஆட்டிவைக்கும் சனியே! உன் பீடை பிடித்த உடம்பைப் போலவே உன் ஆன்மாவும் கறுப்பேறிக் கிடக்கிறது. உன்னை மரத்திலே தலைகீழாகக் கட்டித் தொங்கவிட்டு, சதையெல்லாம் எலும்பிலிருந்து சிம்பு சிம்பாகப் பிய்ந்து விழும் வரை வெளுத்து விளாச வேண்டும்; அப்புறம் எறும்புகள் அணு அணுவாய்க் கறவித் தின்னும்படி அங்கேயே விட்டு விட வேண்டும்.''

உடம்பெல்லாம் வியர்த்து வடிய, களைப்பினால் மூச்சுத் திணறிய போதுதான் அவர் அடிப்பதை நிறுத்தினார். எய்த்து இளைத்துக் கொண்டு பொத்தென்று தரையில் உட்கார்ந்தார்; பால் பெர்ன்ஹார்டைத் தண்ணீர் கொண்டுவரச் சொன்னார்; அதில் 'ரம்' கலந்து குடித்தார். கொஞ்சம் களைப்பாறி, விடாய்

ஆற்றிக்கொண்ட பின் நிதானத்துக்கு வந்தார். பாவிப் பையனை முழந்தாள் படியிட்டு அமரச் சொல்லி, அவனைக் கண்டித்துப் பிரசங்கம் செய்தார்.

''சாக்கடைப் புழுவே, நீ கடவுளைப் பார்க்கவில்லை, உன்னால் பார்க்கவும் முடியாது. அவரைப் பார்த்ததாகச் சொல்லிக் கடவுளுக்குப் பெரும் பாவம் செய்துவிட்டாய். எனக்கும் நீ இழைத்த பாவம் பெரிது. நான் வயதானவன், நோயாளி. பார், என் உடம்பெல்லாம் எப்படி வேர்த்துக் கொட்டியிருக்கிறது; கோபத்தினால் என் இதயம் எப்படிப் படபடக்கிறது என்று. நீ செய்த குற்றத்தினால்தான் நான் இவ்வளவு களைப்படையும் படி ஆயிற்று. அதனாலேயே ஆரோக்கியத்துக்குக் கேடு விளைத்துக்கொண்டேன். பத்தாயிரம் கறுப்புச் சைத்தான்களின் உயிர்களைவிட எவ்வளவோ விலை உயர்ந்ததாயிற்றே என் உடல் நலம்! நான் கொடுத்த சவுக்கடி உனக்குப் போதவே போதாது. இன்றைக்கு ராத்திரி இன்னும் கொடுப்பேன். நாளைக்கும் உரிப்பேன் உன் தோலை. நீ வழிக்கு வரும்வரை உனக்குச் சாத்துப்படி கொடுத்துக்கொண்டே இருப்பேன்.''

இதே ரீதியில் நெடு நேரம் பேசிக்கொண்டே போனார் பாதிரியார். இனிமேல் என்ன

சொன்னாலும் செய்வதாகப் பால் பெர்ன்ஹார்ட் வாக்குக் கொடுத்த பின்பு தான் அவருடைய சொல்மழை ஒருவகையாய் ஓய்ந்தது.

## 6

வழக்கமாக பெனிடிக்ட் பாதிரியார் மலைச் சரிவில் உட்கார்ந்துகொள்வார். குழந்தைகள் அவரைச் சூழ்ந்து உட்காருவார்கள். பால் பெர்ன்ஹார்ட் அவர் காலடியிலேயே அமர்ந்து கொள்வான்; மற்றவர்கள் காற்று வரும் பக்கத்தை விட்டு விலகி ஒதுப்புறமாகவே உட்கார வேண்டும் — பெனிடிக்ட் பாதிரியாருக்கு அவர்களுடைய நாற்றத்தைப் பொறுக்க முடியாது என்பதனால். எல்லோரும் அவரவர் இடங்களில் அமர்ந்தபின், ஆசீர்வதிக்கும் பாவனையில் இரு கைகளையும் அவர்கள் தலைக்கு உயரே நீட்டியவாறு பாதிரியார் பேச ஆரம்பிப்பார்:

''அடக்கமுள்ளவர்கள் அருள் பெற்றவர்கள், ஏனெனில் உலகத்தை அவர்களே உரிமைப் பொருளாக ஆள்வார்கள். ஆமென். இங்கே உலகத்தை என்று சொன்னது நீங்கள் வாழ்ந்திருப்பதும் சொந்தம் பாராட்டுவதுமான நிலத்தை அல்ல. இந்த நிலமும், நீங்கள் எல்லோரும் லூஸிடியா வேந்தருக்குச் சொந்தம். அவரோ, கடவுளுக்கு அடுத்த படியாக உலகிலே

எல்லாரையும் விட மாட்சிமை தங்கிய அரசர். அவருடன் ஒப்பிடும் பொழுது உங்களுடைய இனத் தலைவர்களும், எங்களது சொந்த அதிகாரிகளும், நானுமே கூட, யானை முன் ஈக்கள் போல அற்பமானவர்கள். இங்கே கூடியிருக்கும் நீங்கள் எல்லோரும், பாவிகளான மற்றக் கறுப்பர்கள் அனைவருமோ, அவருடைய காலடித் துகள் தவிர வேறில்லை. அவருடைய புனிதத் திருப்பாதுகைகளால் நசுக்கப்படும் கௌரவம் எவனுக்கு வாய்க்கிறதோ, அவன் இறப்புடைய ஜீவர்களிலெல்லாம் தன்னை மிகுந்த பாக்கியசாலியாகக் கருதிக்கொள்ள வேண்டும். உங்களுக்கு ஒழுங்கும் கீழ்ப்படிவும் கற்பிப்பதற்காக அவர் தம் படைவீரர்களை அனுப்பியிருக்கிறார். சைத்தானின் பிடியிலிருந்து உங்கள் ஆன்மாக்களை விடுவித்துக் கடைத்தேற்றும் பொருட்டும், கிறிஸ்தவர்களுக்கு மட்டுமே வாக்களிக்கப்பட்டுள்ளதான திரு நாட்டுக்கு உங்களை வழிகாட்டி அழைத்துச் செல்லவும் என்னை அனுப்பிவைத்திருக்கிறார். இவற்றால் நீங்கள் மகிழ்வடைய வேண்டும்.

''ஆனால் நீங்கள் என்ன செய்கிறீர்கள், நன்றிகெட்ட நாய்க்குட்டிகளா? உங்கள் பாவ ஆன்மாக்கள் கடைத்தேறும் பொருட்டுச் சுமக்க வேண்டியிருக்கும் பாரத்தைப் பற்றிக் குறைகூறி நீங்கள் முணுமுணுப்பது என் காதில்

விழவில்லை என்று நினைக்கிறீர்களா? லூஸிடியா வின் இரண்டு படை வீரர்கள் சென்ற வாரம் கொலையுண்டு, காட்டுமிராண்டித்தனமாக அங்க பங்கம் செய்யப்பட்டுப் புதர்களில் கிடந்தார்கள். இதற்குத் தண்டனையாகச் சுட்டுத் தள்ளப்பட்ட இரு நூறு கறுப்புக் கழிசடைப் பயல்களால் மாட்சிமைதங்கிய மன்னர் பிரானின் இரண்டு வீரர்கள் மாண்ட நஷ்டத்துக்கு எங்கேனும் ஈடு செய்ய முடியுமா? இஸ்ரவேல் மக்கள் தங்கள் காலத்திலே அமெலாக்கியர்களைப் பூண்டோடு அழித்தது போலவே உங்களையும் சுட்டும் வெட்டியும் அடியோடு நாசம் செய்திருக்க வேண்டும். நாங்களோ நீண்ட காலமாகச் சகிப்பும் கருணையும் காட்டிவருகிறோம். இரு நூறு பேரை மட்டுமே சுட்டுத் தீர்த்துத் திருப்தி அடைந்துவிட்டோம். அடுத்த தடவையோ ஆயிரம் பேர் கூடப் போதாது. உங்கள் குடிசைகளை எல்லாம் எரித்துச் சாம்பலாக்கி விடுவோம், உங்கள் குடியிருப்புக்களை எல்லாம் இருந்த சுவடே தெரியாமல் அழித்து விடுவோம். இதை நினைவில் வைத்துக்கொண்டு பெரியவர்களிடம் சொல்லுங்கள்.

''கர்த்தரான ஆண்டவன் பெயராலும் மாட்சிமை தங்கிய லூஸிடியா மன்னர் பிரான் பெயராலும் நாங்கள் இங்கே இருக்கிறோம். இந்த நாடு தங்களுக்கே சொந்தம் என்று

ப்ருஸிடியர்கள் உரிமை கொண்டாடுகிறார்கள். ஆயினும் எக்காரணத்தைக் கொண்டும் எக் காலத்திலும் இதை விட்டுவிடமாட்டோம். உங் களில் பலர் மஞ்சள் மலையின் பக்கமாகத் திருட் டுத்தனமாய்ப் பார்ப்பது எனக்குத் தெரியாது என்று நினைக்கிறீர்களா? ப்ருஸிடியக் கயவர் கள் எப்பொழுதடா அந்தத் திசையிலிருந்து வரப் போகிறார்கள் என்று இவர்கள் எதிர்பார்த் துக் கொண்டிருக்கிறார்கள். நல்ல வேளையாக, என்றால் மதமாற்றம் செய்யப்பட்டவர்கள், எங்களுக்கு நம்பகமான கிறிஸ்தவ சகோதரர் கள் பலர் உங்களிடையே இருக்கிறார்கள். எங் களுக்கு எதிராக நீங்கள் செய்யும் இரகசியச் சூழ்ச்சிகளை யெல்லாம் பற்றி அவர்கள் எங் களுக்குத் தகவல் கொடுத்து வருகிறார்கள். ஆண்டவன் அவர்களுக்கு அருள் நல்குவாராக! ஹூரஸிடியா மன்னர் அவர்களது தொண்டுக ளுக்கு உரிய பரிசு வழங்குவாராக!

''எல்லா மனிதர்களும் ஒருவரை யொரு வர் உடன்பிறந்தவர்களைப் போல் நேசிக்க வேண்டும் என்று நேற்று உங்களுக்குச் சொன் னேன் அல்லவா? அத்துடன் இன்னொரு விஷய மும் சேர்த்துச் சொல்ல மறந்துவிட்டேன். இப் போது சொல்லுகிறேன்: உலகம் முழுவதை யும் தாமே கவர்ந்துகொள்ள வேண்டுமென்று பேராசை பிடித்தலையும் ப்ருஸிடியர்களை மன

மாற வேறுங்கள். குஷ்டரோகத்தையும் மற்ற வெந்துயர்களையும் விட அதிகமாக அவர்களைக் கண்டு அஞ்சுங்கள்! நல்லவர்கள், தீயவர்கள் எல்லோருக்கும் ஒரே மாதிரி ஒளி வீசுமாறு ஆண்டவன் தமது படைப்பான சூரியனுக்குக் கட்டளை யிட்டிருக்கிறார். ஆயினும் ப்ரூஸிடி யாவை மட்டும் அவர் கனத்த மூடுபனியால் போர்த்து மூடியிருக்கிறார். கதிரவனின் கிரணங் களோ, உயிர்தரும் மழைத் துளிகளோ அந்தப் போர்வையை ஊடுருவிச் செல்ல முடியாது. ஒருவருக்கும் புரியாததும் ஒருவராலும் நன்கு கற்க முடியாததுமான ஒரு மொழியை ப்ரூஸி டியர்களுக்கு அளித்ததன் மூலம் கர்த்தர் அவர் களைத் தண்டித்திருக்கிறார். ப்ரூஸிடியர்களுக்கு மாட்டுக் கண்ணைப் போலப் பெரியதான ஒரே ஒரு கண்தான் உண்டு, அதுவும் நெற்றியின் நடுவிலே. ப்ரூஸிடியன் தரையிலே துப்பினால் அந்த எச்சிலிலிருந்து ஒரு பாம்பு நெளிந்து வரும். ப்ரூஸிடியர்களிடம் எச்சரிக்கையா யிருங்கள்! அவர்களைப் பற்றி யாரேனும் கச முசவென்று பேசிக்கொள்வது உங்கள் காதில் விழுந்தால் உடனே என்னிடம் வந்து தெரிவி யுங்கள். ராஜத்துரோகிகளுக்கு உரிய தண்டனை அப்பொழுதுதான் கொடுக்க முடியும். இப்படி நீங்கள் செய்யாவிட்டால் சுவர்க்க ராஜ்ஜியத்

தில் வாழ்வதற்கு ஒரு நாளும் அருகர் ஆகமாட்டீர்கள்!''

இத்தகைய சொற்களாலும் இவை போன்ற இன்னும் பல வார்த்தைகளாலும் பெனிடிக்ட் பாதிரியார் மத நம்பிக்கை, புண்ணியம் இவற்றின் பாதையில் அவர்களுக்கு வழிகாட்டி நடத்திச் சென்றார். மதம் மாறியவர்கள் எல்லோரிலும் மிக மிகத் துடியானவன், மிக மிகக் கீழ்ப்படிதலுள்ளவன் பால் பெர்ன்ஹார்ட் தான். இதனால் பெனிடிக்ட் பாதிரியாருக்கு எல்லோரையும் விட அவன்மீது அன்பு. எப்போதும் அவனையே உதாரணமாக எடுத்துக் காட்டிவந்தார்.

கிறிஸ்தவ மதமும் பண்பாடும் கடற்கரையிலிருந்து தொலை ஏரி, மஞ்சள் மலை வரை நியாங்கீ பள்ளத்தாக்கு முழுவதிலும் மளமள வென்று பரவின. ஒரு காலத்தில் கறுப்பர்கள் வெள்ளைக்காரியைத் தின்ற அருவியின் கரை மீது ஒரு சிலுவையும் அதன் அருகே ஒரு கம்பமும் நாட்டப்பட்டன. ஞாயிறு தோறும் எவனாவது ஒரு கறுப்பனைப் பிடித்து வந்து இந்தக் கம்பத்தில் கட்டிச் சவுக்குகளால் அடிப்பார்கள். அவன் கூச்சலிடுவதும் நெளிந்து துடிப்பதும் ஒரேயடியாக ஓய்ந்து போகும்வரை அடித்

துக்கொண்டே இருப்பார்கள். இந்தக் கொடூர தண்டனையைக் காணும் பொருட்டு வழக்கமாகக் கட்டாயப்படுத்தி ஓட்டிவரப்படுபவர்களுக்காக பெனிடிக்ட் பாதிரியார் நீண்ட உபந்நியாசம் செய்து மனித ஊன் தின்பது எத்தகைய கொடிய பாவம் என்பதை விளக்குவார்.

பெண்களைக் கடத்திச் செல்லும் சுமார் இருபது கறுப்புத் திருடர்களை வெள்ளையர்கள் பிடித்தார்கள். ஏறக்குறைய நூறு திருடர்களை ஏரியில் முழுகடித்தார்கள். இதன் பின் தொலை ஏரிக்குக் கொள்ளை அடிக்கப் போகும் வழக்கத்தைக் கறுப்பர்கள் விட்டுவிட்டார்கள். தனியார் சொத்து புனிதமானது, அதிக்கிரமிக்கத் தகாதது என்பதன் பொருளைத் தம்மால் மதம் மாற்றப்பட்டவர்களுக்கு ரோமச் சட்டத்தின் அடிப்படையில் மனதில் பதியவைத்தார் பெனிடிக்ட் பாதிரியார். நியாங்கீ பள்ளத்தாக்கின் மேட்டுப் பகுதிகளிலிருந்த தங்கவயல்கள், மஞ்சள் மலை அடிவாரத்து ஈயச் சுரங்கங்கள், காப்பித் தோட்டங்கள், பருத்தி விளைகள் ஆகியவற்றில் பாடுபட்டும், துறைமுகங்களில் படகுகளிலும் கப்பல்களிலும் சரக்கு ஏற்றி இறக்கியும், நிர்மாண ஸ்தலங்களில் வேலை செய்தும் கறுப்பர்கள் சலியா ஊக்கத்துடன் உழைத்தார்கள். உழைப்பின் பெருமையையும், ஓராஸிடியாவின் வர்த்தகமும் தொழிலும்

வளர்ச்சி பெறுவதன் சிறப்பையும் கறுப்பர்கள் உணரும்படி செய்யும் பொருட்டு பெனிடிக்ட் பாதிரியார் தமது சொல்லாற்றல் முழுவதையும் தங்கு தடையின்றிப் பயன்படுத்தினர். இப்போது கறுப்பர்களில் ஆண்களெல்லாம் காற்சட்டை அணிந்தார்கள், சிறுமிகளும் பெண்டிரும் இடுப்பைச் சுற்றித் துணி உடுத்தார்கள். தமது இடைவிடாத உபதேசப் பிரசங்கங்கள் மூலம் கறுப்பர்கள் வெட்கம் என்பதன் பொருளை அறிந்துகொள்ளும்படியும் நாணத்துக்கும் நாணமின்மைக்கும் உள்ள வேறுபாட்டைத் தெரிந்துகொள்ளும் படியும் பயிற்சி அளிப்பதில் பெனிடிக்ட் பாதிரியார் வெற்றி பெற்று விட்டார். நியாங்கீயின் உயர்ந்த கரையில் செபவீடு ஒன்று கட்டப்பட்டது. கிறிஸ்தவர்களாக மதம் மாறிய கறுப்பர்கள் ஞாயிற்றுக் கிழமை தோறும் அங்கு வந்து கூடிப் பிரார்த்தனை செய்து பாவமன்னிப்புக் கோருவார்கள். லூஸிடியா அரசரும் பெர்கோனியா அரசரும் கறுப்பர்களை எல்லாம் ஆள்பவருமான மாட்சிமை தங்கிய மன்னர் பிரானுக்கு அருள் புரியுமாறும் அவர்கள் கர்த்தரை வேண்டிக்கொள்வார்கள். லூஸிடியா மீதும் தங்கள் எஜமானர்கள், ஆள்பவர்கள் மீதும் அவர்கள் ஆழ்ந்த அன்பு கொள்ளுமாறு பெனிடிக்ட் பாதிரியார் பாடுபட்டார். சவுக்கால் அடிப்பதைவிட அதிக

மாக அன்பொழுக வாதாடினார், கண்டிப்பை விட அதிகமாகக் கிறிஸ்தவ நேயப்பான்மை ததும்பும் மனப்பூர்வமான பிரசங்கங்களைக் கையாண்டார். ஆப்பிரிக்கக் காட்டிற்கு உள்ளே, பணிவுள்ள கறுப்பர்களின் கூட்டம் கர்த்தரையும் ஹூஸிடியாவையும் புகழ்ந்து தோத்திரப் பாடல்கள் பாடுவதைக் கேட்கும் போது அவருக்கு உண்மையாகவே உள நெகிழ்ச்சி உண்டாயிற்று.

கிறிஸ்தவப் பண்பாடு இவ்வாறு வளர்வதை ப்ரூஸிடியர்களின் சூழ்ச்சிகள் மேலும் மேலும் தடைசெய்து வந்தன. ஊர் ஊராகக் கறுப்பர்கள் தங்கள் குடிசைகளை விட்டு விட்டு மஞ்சள் மலைக்கு அப்பால் ஓடிச் செல்வது நாளாக ஆக முன்னிலும் அடிக்கடி நிகழலாயிற்று. பிடிபட்டவர்களுக்குக் கடுமையான தண்டனை அளிக்கப்பட்டது. அவர்களில் குழந்தைகளும் கிழவிகளும் பிடிபட்ட இடத்திலேயே சுட்டுக் கொல்லப்பட்டார்கள். அவர்களுடைய கால்நடைகளும் சொத்து முழுவதும் பறிமுதல் செய்யப்பட்டன. இளமையும் உடல் வலிமையும் வாய்ந்த கறுப்பர்கள் இரக்கமின்றிச் சவுக்கால் அடிக்கப்பட்டார்கள்; சங்கிலிகளால் பிணைக்கப்பட்டு வெள்ளையர் குடியிருப்பிலிருந்த பாசறைகளுக்கு அனுப்பப்பட்டார்கள். அவர்களைக் கட்டாயப்படுத்திக் கடுமை

யிலும் கடுமையான வேலை வாங்கப்பட்டது. இந்த நடவடிக்கைகள் எல்லாம் எடுக்கப்பட்டுங் கூட அவர்கள் தப்பி ஓடுவதும் கலகஞ் செய்வதும் மட்டும் நிற்கவில்லை. பகல் நேரத்தில் பெனிடிக்ட் பாதிரியார் கிறிஸ்தவப் போதனைகளை விதைத்துச் சென்ற இடங்களில் இரவு நேரத்தில் சைத்தான் நடமாடிக் களைகள் நட்டுப்போனான். ஒரு முறை பகிரங்கக் கலகமே நிகழ்ந்தது. கறும் பிசாசுகள் மாட்சிமை தங்கிய மன்னர் பிரானின் வீரர்களைத் தாக்கினார்கள். இரண்டிரண்டு அல்லது மூன்று மூன்று பேராகத் தம்மை எதிர்த்த படைவீரர்களை எல்லாம் ஆடுமாடுகளை வெட்டுவது போல் செத்தி எறிந்து விட்டார்கள். தங்கவயல் மேற்பார்வையாளர்களைக் கத்திகளால் குத்தினார்கள்; இயந்திரங்களைத் தகர்த்து நொறுக்கினார்கள்; கட்டிடங்களுக்குத் தீ வைத்தார்கள்; பட்டத்து இளவரசனுக்குத் திருமணப் பரிசாக அனுப்பப்பட்ட யானைத் தந்தங்களும் வேறு பல விலையுயர்ந்த பொருள்களும் ஏற்றிச் சென்ற கப்பலை நியாங்கீ ஆற்றிலே மூழ்கடித்தார்கள். லூஸிடியாவின் அரசாங்கப் பொக்கிஷத்துக்கு ஒரு கோடி நஷ்டம் விளைத்தார்கள்.

புதிய படைகளும் ஆயுதங்களும் ஏற்றிக் கொண்டு மூன்று துருப்புக் கப்பல்கள் தாய் நாட்டிலிருந்து வந்து சேர்ந்த பின்பே நியாய

நிர்வாகத்தையும் ஒழுங்கையும் மீண்டும் நிலை நாட்ட முடிந்தது. ஐரோப்பியப் பண்பாடு எத்தகையது,"அதைப் பரப்புவோர் எத்தகைய வர்கள் என்பதை அப்பொழுது தான் கறுப் பர்கள் நன்கு உணர்ந்தார்கள். நெருப்பும் வாளும் மூன்றிலொரு பங்கு கறுப்பர்களைப் பூண்டோடு களைந்து ஒழித்துவிட்டன. நியாங்கீ ஆற்றின் மஞ்சள் நீர் இடை விட்டு விட்டுச் செக்கச் செவேரென்று ஒளிர்ந்தது. நீரில் ஊறி உப்பிய பிணங்கள், ஆற்றுப் பரப்பு முழுவதை யும் மூடியவாறு தொலை ஏரியை நோக்கி மிதந்து சென்றன. அளவு மீறி இரை யெடுத்த அண்டங் காக்கைகளும் மற்ற ஊன் தின்னிப் பறவைகளும் முள்மரக் கிளைகளில் சோம்பலுடன் ஊசலாடின. இரத்தம் படிந்த முகத்தினவான சிங்கங்களும் கழுதைப் புலிகளும் உயிருள்ள மனிதர்களைக் கடந்து ஆலசியமாக ஆடி அசைந்து சென்றன. மனிதர்களை அவை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. மரங்களில் தலைகீழாகக் கட்டித் தொங்க விடப் பட்டு, எறும்புப் புற்றுகள் மீது கிடந்து துடி துடித்த கறுப்பர்களின் கூக்குரல்கள் இரவு நேரத்தில் விலங்குகளின் பெரு முழக்கங்களையும் அமிழ்த்திக்கொண்டு மேலெழுந்தொலித்தன. எத்தனையோ நெருப்புக்களின் பிரகாசத்தால் வானம் இரவெல்லாம் செவ்வொளி படர்ந்து திகழ்ந்தது.

பால் பெர்ன்ஹார்டின் அம்மாவை வெள்ளையர்கள் துப்பாக்கிச் சனியனால் உடலை ஊடுருவக் குத்தி ஆற்றில் கடாசிவிட்டார்கள். தாடிக் கார்ப்போரல் ஒருவன் பால் பெர்ன்ஹார்டின் தம்பியுடைய கால்களைப் பற்றிப் பாறையில் மோதியடித்ததில் குழந்தையின் மண்டை சில்லு சில்லாகச் சிதறிப்போயிற்று. எறும்புப் புற்றின் மேல் கிடந்து துடித்துக் கதறியவர்களில் அவன் தகப்பனும் ஒருவன். பால் பெர்ன்ஹார்டுக்கும் இதே கதி நேர்ந்திருக்கும். பெனிடிக்ட் பாதிரியார்தான் அவனைக் காப்பாற்றித் தன்னுடன் வெள்ளையர் குடியிருப்புக்கு இட்டுச் சென்றார். அந்த நன்றிகெட்ட பயலோ, தாயிடமிருந்து பிரிக்கப்பட்ட சிங்கக்குட்டி போல அவரோடு போராடினான்; அவரைக் கடித்தான்; பறண்டினான். பெனிடிக்ட் பாதிரியார் கடுமையான ஒழுங்கு நடவடிக்கைகள் எடுப்பது அவசியமாயிற்று. இவற்றின் விளைவாக அடுத்த மூன்று நாட்களுக்குப் பால் பெர்ன்ஹார்ட் காவல் அறையின் மூலையில் எழுந்திருக்க முடியாமல் கிடக்க நேர்ந்தது.

உடம்பு நேரானதும் படைத்தலைவரின் வீட்டில் பணியாளாக அவன் அமர்த்தப்பட்டான். பூட்சுகளைப் பாலிஷ் செய்வது, மலச் சட்டிகளைத் துப்புரவு செய்து கழுவிவைப்பது, தூங்கும் அறைகளிலிருந்து பல்லிகளை விரட்டுவது,

குடி விருந்துகளின் போது நிலவறையிலிருந்து சாராயவகைகள் கொண்டு தருவது, போதை யேறிய இராணுவ அதிகாரிகள் தன்னுடைய கறுப்புத் தோலைக் கிள்ளும் போதும், புதிய சவுக்குகளைத் தனது முதுகில் பரீட்சித்துப் பார்க்கும் போதும் சிலை போல அசையாமல் நிற்பது, இவையே அவன் செய்ய வேண்டி யிருந்த வேலைகள். பெனிடிக்ட் பாதிரியார் 'ரம்' கலந்த நீர் தவிர வேறு எதுவும் பருகு வதில்லை யாதலால் எப்போதும் நிதானத்துடன் இருப்பார். கிள்ளல்கள், சவுக்கடிகள் நடக்கும் சந்தர்ப்பங்களில் அவர் அவனைத் தேற்றி உப தேசம் செய்வார்:

''பொறுமையும் மௌனமும் கடைப் பிடிப் பாயாக, மகனே. அரசின் ஆட்சி கர்த்தராலேயே விதிக்கப்பட்டது. எனவே அதற்குப் பணிந்து கீழ்ப்படிவது நம் கடமையாகும். கருணையுள்ள வர்கள், கடுமையானவர்கள், இரண்டு வகையான எஜமானர்களுக்கும் ஒரே மாதிரியாக நாம் தலை வணங்க வேண்டும். எதற்காக முகத்தை இப்படி உர்ரென்று வைத்துக்கொள்கிறாய், கண்களை ஏன் இப்படி விகாரமாக உருட்டி விழிக்கிறாய்? இப் போது நீ படும் துன்பங்களெல்லாம் நிலையற்ற வை. உனது தேகம் மரித்த பின்பு, புண்ணிய சாலிகள் எல்லோருடனும் சேர்ந்து நீ நேரே சுவர்க்கம் செல்வாய். அங்கே உனது ஆன்மா

அனுபவிக்கப் போகிற பேரின்பத்துடன் ஒப்பிடும் போது இந்தத் துயரங்களெல்லாம் எம்மாத் திரம்! மகிழ்வடைவாயாக, என் மகனே! உன்னை மிதித்துத் துவைக்கும் பாதங்களை முத்தமிடு வாயாக!'' என்பார்.

இந்தப் போதனையையும் பால் பேர்ன் ஹார்ட் கற்றுத் தேர்ந்து விட்டான். தாடிக் கார்ப்போரலால் பாறையில் தலை மோதிச் சிதறும்படி காலை வாரி அடிக்கப்பட்ட தம்பி, வெள்ளையர்கள் துப்பாக்கிச் சனியனால் உடலை ஊடுருவக் குத்தி ஆற்றில் கடாசிவிட்ட தா யார், எறும்புப் புற்றுக்கு மேல் ஏழு பகலும் ஏழு இரவும் தலைகீழாகத் தொங்கி, முடிவில் ஒரு துணுக்கு மாமிசம் கூட மீதமின்றி வெள்ளை வெளேரென்றாகிவிட்ட எலும்புக் கூடாக மரத் தில் கட்டுண்டு ஊசலாடிய தகப்பன், எல்லோ ரையும் அவன் நாளடைவில் மறந்தே போனான். நடந்தவற்றை நினைத்துப் பார்க்க அவனுக்கு நேரம் ஏது? அவன் கணப்போதும் வேலையின்றி வெறுமே இராதவாறு அவனது ஆறு மேலதி காரிகளும் பார்த்துக்கொண்டார்கள். சமையல் காரர்களும், குசினிக்காரப் பையன்களும் போர் வீரர்களும் அவனவனுக்கு, எங்கு, எப்போது தேவைப்பட்டதோ அனுப்பி இஷ்டப்படி அவனை வேலை வாங்கினார்கள். எல்லோரையும் திருப்திப் படுத்தவும் எல்லோருக்கும் தொண்டு செய்

யவும் அவன் தன்னால் ஆனவரை முயன்றான். வெள்ளையர்கள் குடித்து வெறியயர்ந்ததையும், சீட்டாடியதையும், பிடிபட்ட கறுப்புப் பெண்களுடன் நடந்துகொண்டதையும், போதையினால் உணர்விழந்து தங்கள் மலத்திலேயே புரண்டதையும் அவன் கண்டான். அவர்கள் உண்டமிச்சத்தைத் தட்டுகளிலிருந்து இரகசியமாகப் பொறுக்கித் தின்பதும், கிளாசுகளில் எஞ்சியிருக்கும் மதுவைப் பருகுவதும், சுருட்டுத் துண்டுகளைப் புகைப்பதும் அவனுக்கு வழக்கமாகி விட்டன. இது முற்றிலும் புதுமையான உலகம். இதிலே தனக்குப் புலப்பட்ட காட்சிகளை, ஆற்றில் எறியப்பட்ட உலர்ந்த கடற்பஞ்சு நீரை உறிஞ்சி நிறைத்துக்கொள்வது போல அவன் தன் மனத்தில் நிறைத்துக்கொண்டான்.

## 8

நாள் ஆக ஆக அவன்மீது பெனிடிக்ட் பாதிரியாருக்கு அன்பு மிகுந்துகொண்டு போயிற்று. இந்த அன்பே அவனுக்கு வினையாக முடிந்தது.

"ஆயத்தமாகு, மகனே, நாளையே நாம் வெளியே போகிறோம்" என்று திடீரென ஒரு நாள் பெனிடிக்ட் பாதிரியார் அவனிடம் கூறினார்.

பால் பெர்ன்ஹார்டுக்கு இது சற்றும் எதிர்பாராத அதிர்ச்சி. இரவுதோறும் அவனைச் சங்கிலியால் கட்டிப் போடுவதை நிறுத்தி, தலைமைச் சமையல்காரனின் அறைக் கதவின் பக்கம் தரையில் படுத்து உறங்குவதற்கு என்று அவனுக்கு அனுமதி அளித்தார்களோ அன்று முதல் சொல்வதைக் காதில் வாங்கிக்கொள் வதும் கேள்விகளுக்குப் பதிலளிப்பதும் மட்டு மின்றி, தானே கேள்விகள் கேட்பதற்கும் அவ னுக்குச் சலுகை தரப்பட்டிருந்தது. ஆகவே, ''எங்கே போகிறோம், பாதிரியார் ஐயா?'' என்று கேட்டான்.

''மிக மிகத் தூரமான இடத்துக்கு, மகனே. முதலில் கடற்கரைக்கு, அப்புறம் கப்ப லில் ஏறிப் பெரிய நகரம் ஒன்றுக்கு. அங்கே இருக்கும் வீடுகளிலே, மக்கள் ஒருவர் தலைக்கு மேல் ஒருவராக ஆறு அடுக்குகளிலே வாழ்கிறார் கள். மாதாகோயில்களின் கூம்பு கோபுரங்க ளோ, இதோ, இந்த மரங்களில் இருபதை ஒன்றன் மேல் ஒன்றாக நிறுத்தினால் எவ்வளவு உயரம் இருக்குமோ அவ்வளவு உயரமானவை. வருஷம் முன்னூற்றறுபத்தைந்து நாளும் அங் குள்ளவர்கள் பூட்சு போட்டுக்கொண்டு தான் நடப்பார்கள். இங்கே கடுங்கோடையாயிருக்கும் போது அங்கே தெருக்களிலும் வீட்டுக் கூரை கள் மேலும் வெண்பனி மொத்தையாகப் படிந்

திருக்கும். நீ போதிய அளவு பயிற்சி பெற்று விட்டாய். கர்த்தரின் பெயராலும், திருச்சபையின் புனிதக் கைங்கரியத்தின் பெயராலும் உன்னை இந்தக் காட்டுமிராண்டிச் சூழலிலிருந்து ஒரேயடியாக அகற்றி, அசலான கிறிஸ்தவப் பண்பாட்டில் பழக்க விரும்புகிறேன். இப்போது நீ முள்ளாலும் கத்தியாலும் நேர்த்தியாக உணவருந்துகிறாய்; லூஸிடியர்களின் அழகிய மொழியைப் பேசவும் எழுதவும் செய்கிறாய்; பெருக்கல் வாய்ப்பாடு, கர்த்தருடைய செபம், பத்துக் கட்டளைகள் ஆகியவற்றை மனப்பாடம் பண்ணி விட்டாய். மற்றவர்களின் மனைவிகளையும் பசுக்களையும் திருடுவது, பாம்புகளையும் வெள்ளைக்காரர்களையும் உணவாக உபயோகிப்பது போன்ற அஞ்ஞானிகளின் அருவருக்கத்தக்க வழக்கங்களை நீ அடியோடு மறந்துவிடுவாய். கைக்குட்டையில் மூக்கைச் சிந்தவும், பூட்சுகள் போட்டுக் கொள்ளவும், கஞ்சி போட்ட சட்டைகள் அணியவும் கற்றுக்கொள்வாய். சுருக்கமாய்ச் சொல்வதானால், கிறிஸ்தவர்களின் பழக்கவழக்கங்களில் நீ ஊறிப் போவாய். குப்பை மேட்டில் கண்டெடுத்த சாதாரணக் கண்ணாடிச் சில்லு ஒன்றை உன் தகப்பன் கடவுளாகக் கருதி வழிபட்டதையும், மற்ற உனது இனத்தவர்கள் தாமே செய்த உருவங்களையோ ஏதேனும் அழுக்குப் பிராணியையோ தொழுத

தையும் அறவே மறந்துவிடுவாய். இதை நீ விரும்புகிருயா? நான் கற்பித்தவாறே ஒழுகுவதாக வாக்களிக்கிருயா, மகனே?''

''விரும்புகிறேன்; வாக்களிக்கிறேன்'' என விடையிறுத்தான் பால் பெர்ன்ஹார்ட்.

''அப்படியாளுல் நாளை பொழுது புலர்கையில் புறப்படத் தயாராயிரு. இந்த யாத்திரையில் கர்த்தர் உனக்கு அருள் பாலிப்பாராக.''

வாக்களிக்கும் படி கேட்டதளுல் பால் பெர்ன்ஹார்ட் வாக்களித்தானே தவிர உள்ளூற அவனுக்கு ஒரே ஏக்கம். இரவு முழுவதும் நியாங்கீ ஆற்றின் கரையில் முழங்கால்களைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். விந்தையான விஷயம் என்னவென்ருல் நியாங்கீ பள்ளத்தாக்கை முதன் முறையாக இப்பொழுதுதான் கண்ணெதிரே காண்பதுபோல அவனுக்குத் தோன்றியது. ஒருபுறம் தொலை ஏரிக் காடுகள் நீல எழில் காட்டின. மற்ருெரு புறம் மஞ்சள் மலையின் தங்க வெண் சிகரங்கள் தகதகத்தன. நியாங்கீக்கு அப்பால், கடல்வரை சாம்பல் நிற மூடுபனி அடர்த்தியாகப் பரவியிருந்தது. துப்பாக்கிச் சனியளுல் ஒரு புறம் குத்தி மறு புறம் வாங்கப்பட்ட அவன் தாயின் உடலை முன்ருெரு நாள் ஆற்றுப் பெருக்கு அந்தப் பக்கமாகத்தான் அடித்துச் சென்றது. அப்பால், எங்கேயோ மிகத் தொலைவில் விளங்குகிறதாம் புதுமையான ஒரு

நகரம். அதிலுள்ள ஜனங்கள், ஒருவர் தலைமேல் ஒருவராக ஆறு அடுக்குகளாய் நடக்கிறார்களாம், பூட்சுக் கால்களால் ஒருவரை ஒருவர் மிதித்துத் துகைக்கிறார்களாம். இந்த பூட்சுகளின் கூரிய ஆணிகள் தனது பிடர்த்தலையில் இப்போதே குத்துவது போலிருந்தது பால் பெர்ன்ஹார்டுக்கு. தான் இப்பொழுது அழவேண்டும் என்று அவனுக்குப் பட்டது, அழுவதற்குத் தான் அவன் இன்னும் கற்றுக்கொள்ள வில்லை. புதர்களில் கழுதைப்புலிகள் ஊளையிட்டன. அவற்றுடன் சேர்ந்து அவனும் தணிந்த குரலில் தேம்பினான். நெடுநேரம் வரை, பாராக்காரன் வந்து தன்னை முட்கம்பி வேலிக்குள் விரட்டும்வரை, அவன் தேம்பிக் கொண்டிருந்தான்.

கப்பலேறிய பின்பும் அவன் மனம் நீண்ட நேரம் நிலைகொள்ளாமல் தவித்தது. முறுக்குக் கம்பிச் சுருளின் பின்னே மறைந்துகொண்டு, முழங்கால்களைக் கட்டியவாறே உட்கார்ந்து, ஆப்பிரிக்காவின் மஞ்சள் கரை சிறிது சிறிதாகக் கடலில் மூழ்குவதைக் கண் கொட்டாது நோக்கினான். அவனால் எழுந்து நிற்க முடிய வில்லை, தலை கிறுகிறுத்தது, கப்பலின் இடைவிடாத ஆட்டத்தினால் அவனுக்குக் குமட்டிக் குமட்டி யெடுத்தது. பெனிடிக்ட் பாதிரியாருக்கோ, பால் பெர்ன்ஹார்ட் படும் வாதனையைப் பற்றிச் சிந்திக்கத் தானும் நேரமில்லை.

வெள்ளைக்காரச் சீமாட்டிகளையும் சீமான்களையும் அவனிடம் அழைத்து வந்தார்; ''பரமண்டலத்திலிருக்கும் எங்கள் பிதாவே'' என்ற செபத்தையும் மற்றச் செபங்களையும் ஒப்பிக்கச் சொன்னார், ஏழு ஐந்து எத்தனை என்ற கேள்விக்கு விடை அளிக்கும்படி கட்டளையிட்டார். மாலையாகிக் கொஞ்சம் குளிர்ச்சி வந்ததும் துரைசானிகளும் துரைமாரும் கப்பல் மேல் தட்டில் போடப் பட்டிருந்த நாற்காலிகளில் ஒய்யாரமாகச் சாய்ந்துகொண்டு, விஸ்கியும் தண்ணீரும், ரம்மும், ஒயினும் பருகிக் களையாறினார்கள். புத்துணர்ச்சி தரும் இந்தப் பானங்களை அருந்தியபின் அவர்களுடைய களிப்பும் குதூகலமும் உச்சத்தை எட்டியதுமே பால் பெர்ன்ஹார்ட், கறுப்பர்கள் பாடுவது போலப் பாடியும், ஆடுவது போல ஆடியும் காட்ட வேண்டியதாயிற்று. சீமான்கள் சிரித்த சிரிப்பில் கண்களில் தளும்பிய நீர் கன்னங்களில் வழிந்தோடியது. சீமாட்டிகளோ, ஒரேயடியாகக் கூவியவாறு விரல்களால் காதுகளை இறுக்க அடைத்துக்கொண்டார்கள். பின்பு ஜாக்கிரதையாக அவனருகே வந்து மெல்லிய வெண்விரல்களால் அவன் கறுப்புத் தோலை வருடி, அதன் கருமை விரல்களில் ஒட்டிக்கொள்ளவில்லை என்று கண்டதும் ஓகோகோ என்று சிரித்து மகிழ்ந்து போனார்கள். ஆவலே வடிவாக மொய்த்த

இந்தக் கூட்டத்தின் நடுநாயகமாக விளங்கினார் பெனிடிக்ட் பாதிரியார். அவர்கள் கேள்விகளுக்கு விடையளித்து விளக்கினார், உத்தரவுகள் இட்டார், எல்லோரது வியப்புக்கும் மதிப்புக்கும் பாத்திரராகத் திகழ்ந்தார்.

நீண்ட காலம் வரை பால் பெர்ன்ஹார்டால் பெரிய நகரத்துக்குப் பழக்கமாக முடியவில்லை. ஒரே கூச்சலும் கும்மாளமுமாக மசமசவென்று நெரிந்த கூட்டத்தினிடையே அவனுக்குக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போலிருந்தது. பெனிடிக்ட் பாதிரியாரின் கையை உடும்புப் பிடியாகப் பற்றிக்கொண்டான். முதன் முறையாக டிராம் வண்டியைக் கண்டதும் அரண்டுபோய் வீறிட்டான். சைக்கிள் ஒன்று எதிர்ப்பட்டதுமோ பாலத்துக்கடியே பாய்ந்து பதுங்கி விட்டான். அவனை மறுபடி வெளியே வரச் செய்வதற்கு பெனிடிக்ட் பாதிரியார் அரும்பாடு பட நேர்ந்தது. கஞ்சி போட்டு மொட மொட வென்றிருந்த வெள்ளைச் சட்டை அவன் கழுத்தை உராய்ந்து வேதனைப் படுத்தியது. செருப்பே போட்டுப் பழகாத கால்களை அவன் அணிந்திருந்த மஞ்சள் ஜோடுகள் இரக்கமின்றிக் கடித்துப் புண்ணாக்கின. பெனிடிக்ட்

பாதிரியார் வாங்கித் தந்த கனத்த கம்பளிக் கோட்டைப் போட்டிருந்த போதிலும் குளிர் தாங்க முடியாமையால் அவன் பற்கள் கடகட வென்று அடித்துக்கொண்டன. ஒரு நிமிடங்கூட அவனல் அப்பாடா என்று தன் இஷ்டப்படி இருக்க முடியவில்லை. கூச்சலிடுவதும், சீழ்க்கை அடிப்பதும், நையாண்டி செய்வதும், அழுகிய ஆப்பிள் பழங்களை அவன் மேல் விட்டெறிவது மாகத் தெருப் பையன்கள் கூட்டங்கூட்டமாய் அவன் பின்னே துரத்திக்கொண்டு வந்தார்கள். பெரியவர்களுங்கூட அவனைக் கண்டதுமே நடை பாதைகளில் அங்கங்கே நின்று வேடிக்கை பார்த்தார்கள். அவர்களது கூட்டங்களுக்கு இடையே வழி கண்டுபிடித்து நடப்பதற்குள் அவனுக்குப் போதும் போதுமென்ருகி விட்டது. பெனிடிக்ட் பாதிரியார் கணப்போதும் பால் பெர்ன்ஹார்டை விட்டு விலகாமல் உடன் நடந்த வாறே அவனுக்கு இடைவிடாது உபதேசம் செய்தார்.

''இவர்களிடமிருந்து கற்றுக்கொள்வாயாக, மகனே. இவர்கள் செய்வது போலவே செய் வாயாக. இவர்கள் கற்றுத் தேர்ந்த மக்கள், ஐரோப்பியப் பண்பாட்டின் மணம் வீசும் மலர்கள். காட்டு வாழ்வின் இயல்பும் அஞ் ஞானிகளது பலவகைப் பழக்கங்களும் உன் உள்ளத்திலே ஊறிப்போயிருப்பதால் இவர்க

ளுடைய உதாரணத்தைப் பின்பற்றுவது உனக்குக் கடினமாகவே இருக்கும். ஆயினும் கர்த்தரின் துணையால் இந்தத் தடைகளை எல்லாம் கடந்து, ஆதர்சக் கிறிஸ்தவனாகத் திகழ்வாய். நான் உன்னைக் கிறிஸ்தவ சமயத்துக்கு மாற்றினேன். இயேசு நாதரின் போதனைகளின் ஒளியை மேலும் மேலும் விரிவாகப் பரப்புவதற்கான கருவியாக நீ கர்த்தரால் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறாய்'' என்றார்.

ஆன்மீகத் துறையிலும் லௌகீகத் துறையிலும் உயர் நிலையிலிருந்த திருவாளர்கள் பலரிடம் பால் பெர்ன்ஹார்டை அவர் அழைத்துச் சென்றார். அவர்கள் எல்லா விஷயங்களையும் பற்றி அவனை நுணுக்கமாகக் கேள்விகள் கேட்டு, அவன் அளித்த புத்திசாலித்தனமான விடைகளைச் செவிமடுத்து வியந்தார்கள். ஒரு நாள் அவர்கள் பெரிய ஹால் ஒன்றிற்கு அவனை அழைத்துப் போனார்கள். ஹாலில் தங்க முலாம் பூசிய லஸ்தர்களில் மிகப் பல விளக்குகள் பிரகாசித்தன. ஒரே மழமழப்பாயிருந்த தரையில் பால் பெர்ன்ஹார்டுக்குக் கால் வழுக்கிவிடவே அவன் நெடுஞ்சாண்கிடையாய்த் தடாலென்று விழுந்துவிட்டான். ஹாலில் இருந்த முப்பத்தாறு பாதிரிகளும் பல அறிவாளிகளும் அவனுடைய அசட்டுப் பிசட்டுத்தனத்தைக் கண்டு மனம்விட்டுக் கெக்கெலி கொட்டி நகைத்தார்

கள். இங்கேயும் அவன் ''பரமண்டலத்திலிருக்கும் எங்கள் பிதாவே'' என்று தொடங்கும் செபத்தை ஒப்பிக்கவும், தோத்திரப் பாடல்கள் பாடவும், சுவிசேஷத்திலும் ஞான உபதேசத்திலும் தனது தேர்ச்சியைக் காட்டவும் வேண்டியதாயிற்று. அறிவாளிகள் பெனிடிக்ட் பாதிரியாரின் போதனுமுறையால் மிகவும் திருப்தி அடைந்து அவரைப் பலபடியாகப் புகழ்ந்து பாராட்டினுர்கள். நாளடைவில் இத்தகைய நிகழ்ச்சிகள் பால் பெர்ன்ஹார்டுக்குப் பழகிப் போய்விடவே எவ்வித அச்சமோ கூச்சமோ இல்லாமல் அனுயாசமாகத் தன் திறமையைக் காட்டி வந்தான். நன்கு உடையணிந்தான், உணவு உண்டான். வெறியூட்டும் குடிவகைகள் ஏதாவது அவ்வப்போது ஓரிரண்டு கிளாஸ் திருட்டுத்தனமாகக் குடித்தான். அவனுடைய இந்தக் கெட்ட வழக்கம் பெனிடிக்ட் பாதிரியாருக்குத் தெரியும். என்ருலும் பார்த்தும் பாராதவர் போல் இருந்துவந்தார். தம்மால் மதம் மாற்றப்பட்டவன் களிப்பும் குதூகலமுமாகவே இருப்பது தான் அவருக்கும் வாய்ப்பாயிருந்தது, சாவுக்கு ஒப்பான அஞ்ஞான இருளிலிருந்து மீட்கப்பட்டதனுலேயே அவன் அவ்வளவு மகிழ்வுடன் இருப்பதாகப் பார்ப்பவர்கள் எண்ணிக்கொள்வார்கள் அல்லவா? அதனுல்.

பெனிடிக்ட் பாதிரியாரின் முயற்சிகளின்

விளைவாகத் திருச்சபையாரின் தொண்டுகளுக்கு ஊக்கமளிக்கும் பொருட்டுப் பிரமாதமான விழா கொண்டாடப்பட்டது. மூன்று பாண்டு வாத்தியக் கோஷ்டிகள் உடன் வர, பெருந் திரளான மக்கள், விளம்பரப் பலகைகளை யும் கொடிகளையும் ஏந்திக்கொண்டு, நகர் வலம் வந்தனர். ஊர்வலத்தின் முன்வரிசையில் ஆறு பாதிரிகள் சென்றனர். அவர்களுக்கு ஓரடி முன்பாக பெனிடிக்ட் பாதிரியார் பால் பெர்ன்ஹார்டைக் கையைப் பிடித்து நடத்திச் சென்றார். பால் பெர்ன்ஹார்ட் மஞ்சள் ஜோடு களும் நீண்ட வெள்ளைக் கோட்டும் அணிந்து, தொப்பியைக் கையில் பிடித்தவாறு நடந்தான். சிலுவை கட்டிய வெள்ளிச் சங்கிலி அவன் கழுத்தில் தொங்கியது. நடு நடுவே அவன் தொப்பியை மார்புடன் அழுத்திக் கொண்டு வானை நோக்கிக் கண்களை உயர்த்துவான். இவ் வாறு செய்யும்படி அவனுக்குக் கற்றுக் கொடுத் தவர் பெனிடிக்ட் பாதிரியார் தான். எப்போதா வது அவன் இந்த அபிநயம் செய்ய மறந்து விட்டாலும் அவனுடைய கோட்டுக் கையை மெதுவாக இழுத்து அவனுக்கு நினைவூட்டுவார் அவர். அன்று ஒருவராவது அவனைக் கண்டு நகையாடவில்லை. மத்திய வர்க்கப் பெண்களும் கம்மியர்களின் மனைவிமாரும் குழந்தைகளைக் கையைப் பிடித்து அழைத்துச் சென்றபடியே,

மதம் மாற்றப்பட்ட கறுப்பனை நீர் மல்கும் கண்களுடன் அவர்களுக்குக் காட்டினார்கள். விளக்குக் கம்பங்களில் மாட்டப்பட்டிருந்த விளம்பர அட்டைகளில் அவனுடைய படம் அச்சிடப்பட்டிருந்தது. அதில் அவன் உதடுகள் உள்ளதை விட அதிகப் பருமனாகவும் கண்கள் ஒரே வெளுப்பாகவும் காட்டப்படிருந்தன. தோட்டச் சுவர்களிலும் கட்டிடங்களிலும் ஒட்டியிருந்த வேண்டுகோள்களில் அவன் பெயர் கொட்டை எழுத்துக்களில் பொறித்திருந்தது. அவனுடைய வாழ்க்கைக் குறிப்பு துண்டுப் பிரசுரமாக அச்சிடப்பட்டிருந்தது. சிறு பையன்கள் காச்சுமூச்சென்று கத்திக்கொண்டே தெருக்களில் குறுக்கும் நெடுக்குமாக ஓடி ஓடி அந்தப் பிரசுரங்களை வினியோகித்தனர்.

மூன்று பாண்டு வாத்தியக் கோஷ்டிகளும் இடைவிடாமல் இசை முழக்க, ஊர்வலம் தலைமைப் பாதிரியாரின் மாளிகையை அடைந்து அதன் எதிரே நின்றது. மாளிகையின் முன் மாடத்தில் பாதிரியார் நின்று கொண்டிருந்தார். அவருக்குப் பின்னால் அவர் மனைவி கறுப்பு மகமல் கவுன் அணிந்தும், மாணவர்களான இரு மகன்கள் பல்கலைக்கழகத் தொப்பிகளுடனும், ஒரு மகன் இராணுவ அதிகாரியின் உடுப்பிலும், ஐந்து பெண்கள் வெள்ளைப் பட்டாடையும், தங்கக் காதணிகளும் கைகளில்

கங்கணங்களும் இலங்கவும் நின்று கொண்டிருந்தார்கள். பெண்களின் கைகளில் மலர்ச் செண்டுகள் இருந்தன. வாத்தியக் கோஷ்டியின் பின்னணி இசையுடன், ''கர்த்தரே எமது மேய்ப்பர்'' என்ற பாடலைக் கூட்டத்தினர் பாடினார்கள். பாட்டு முடிந்ததும் தலைமைப் பாதிரியார் ஓரடி முன்னே நகர்ந்து இடக்கையை மாடத்தின் அழியின் மீது தாங்கலாக வைத்துக் கொண்டு வலக்கரத்தைப் பால் பெர்ன்ஹார்டின் தலைக்கு உயரே ஆசீர்வதிக்கும் பாணியில் நீட்டியவாறே, ''என் மகனே, அஞ்ஞானிகளின் குருட்டு நம்பிக்கைகளிலிருந்து விடுபட்டு, அற்புதவசத்தால் மீட்கப்பட்டுக் கிறிஸ்தவ சமுதாயத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட உன்னை வரவேற்கிறேன். என்னிடம் என்ன கூற விரும்புகிறாய், என் மகனே?'' என்று கேட்டார்.

இந்தச் சந்தர்ப்பத்தில் என்னென்ன செய்ய வேண்டும் என்பதை பெனிடிக்ட் பாதிரியார் பால் பெர்ன்ஹார்டுக்குக் கற்றுக் கொடுத்திருந்தார். இப்போதும் அவன் தவறு செய்த போதெல்லாம் தணிந்த குரலில் திருத்தினார். பால் பெர்ன்ஹார்ட் முழந்தாள் படியிட்டான், நெற்றி நிலத்தில் படும்படி முதலில் வணங்கினான், அப்புறம் இரு கைகளையும் மார்புறச் சேர்த்துக்கொண்டு வானை அண்ணாந்து பார்த்தான், அதன் பின்பே முன்மாடத்தில் நின்றிருந்த பெரியவரை நோக்கினான்.

''எனது பிதாவே, எட்டாத் தொலையி லுள்ள ஆப்பிரிக்கப் பாலைவனத்திலிருந்து, சமீப காலம்வரை ஆன்மீக இருளிலும் உருவ வழிபாடு என்னும் இழிவிலும் உழன்று கொண் டிருந்தவர்களும், இன்று இயேசு கிறிஸ்து நாதரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, தமது ரட்சிப்புக்கு வழி காட்டுபவர்களின் பொருட்டாகச் சர்வ வல்லவரான கர்த்தரின் திரு முன்பு நன்றிப் பிரார்த்தனை புரிபவர் களுமான பல கோடி கறுப்பு மக்களின் வாழ்த் துக்களைத் தேவரீர் சமுகத்துக்குக் கொணர்ந் திருக்கிறேன்.''

இந்த முழநீள வாக்கியத்தை ஒரே மூச் சில் சொல்லி முடிப்பது அவனுக்குப் பெரும் பாடாயிருந்தது. பல முறை வார்த்தைகள் தொண்டையில் சிக்கிக்கொண்டன. பெனிடிக்ட் பாதிரியாரின் உதவியால்தான் இடையூறின்றி ஒரு வழியாகச் சொல்லித் தீர்த்தான். தலைமைப் பாதிரியார் இரு கைகளையும் அவன் தலைக்கு மேலே நீட்டி ஆசீர்வதித்தவாறே பின்வரும் மொழிகளைப் பகர்ந்தார்:

''நமது கர்த்தரின் பெயரால் எனது ஆசிகளை அவர்கள் எல்லோர் சார்பாகவும் பெற்றுக்கொள்வாயாக. உனக்காக இவ்வளவு அரும்பாடு பட்டு, உன் ஆன்மாவின் கடைத் தேற்றத்தில் இத்தகைய கவலை காட்டியவர்

களை ஒருகாலும் மறவாதிருப்பாயாக. இந்தத் தெய்வக் கருணையைக் கண்ணாரக் கண்ட விசுவாசிகளே, உங்கள் இதயங்களையும் பணப்பைகளையும் நெகிழ்த்துவீர்களாக. துக்கமுற்ற இந்த ஆன்மாக்களின் ரட்சணையின் பொருட்டுத் திருச்சபையின் பெருந்தொண்டு நடப்பதற்காக நன்கொடை வழங்குவீர்களாக. ஆமென்.''

''எல்லோரிலும் உயர்ந்தவருக்கு நன்றி செலுத்துகிறோம்'' என்ற துதிப் பாடலை ஜனங்கள் பாண்டு வாத்தியங்களின் பின்னணி இசையுடன் பாடினார்கள். பாட்டு முடிந்ததும் பால் பெர்ன்ஹார்ட் முழங்கால்களை நிமிர்த்தி எழுந்து நின்றான். வெள்ளை நங்கையர் அவன் காலடியில் மலர் தூவினர். அவற்றில் ஒரு ரோஜாப் பூவை எடுத்துத் தன் பருத்த உதடுகளில் ஒற்றிக்கொண்டான். இருந்தாற்போலிருந்து பல்லெல்லாம் தெரியக் காட்டிப் பக்கென்று சிரித்துவிட்டான். எலும்புந் தோலுமாக ஒடிசலாய் ஓங்கி வளர்ந்த ஒரு கிழவி பெருக்கிய ஆனந்தக் கண்ணீர் அவளது நீண்ட கிளிமூக்கின் நுனியில் பெருங்கண்ணாடித் துளியாகத் தொங்கியது அவன் கண்ணில் பட்டுவிட்டதே இந்தச் சிரிப்பின் காரணம். பெனிடிக்ட் பாதிரியார் அவன் சிரித்ததற்காகத் தணிந்த குரலில் கடிந்துகொண்டார். எனினும் மொத்தத்தில் அவருக்கு ஒரே மகிழ்ச்சி தான். நாலு

திசையிலும் இப்போது அவர் பெயர் விளங்கி ஒளிர்ந்தது. திருச்சபையாரின் புனிதத்தொண்டு தொடர்ந்து நடக்கும் பொருட்டு மாதா கோயில்களில் பெருந்தொகைகள் நன்கொடை களாக வசூலிக்கப்பட்டன. அவர் மகிழ்ச்சிக்குக் கேட்பானேன்?

## 10

பொருளும் புகழும் பரிசாகப் பெற்று, தமது உழைப்பைத் தொடர்ந்து நடத்தும் பொருட்டு ஆப்பிரிக்கா திரும்பினர் பெனிடிக்ட் பாதிரியார். கிறிஸ்தவ ஒழுக்கத்தில் தேர்ச்சி பெறவும், நேர்மையான உழைப்பில் ஈடுபட வும், காட்டுமிராண்டிகளிலிருந்து நாகரிக மக் கள் அவ்வளவு துல்லியமாக வேறுபட்டிருப் பதற்குக் காரணமான உயர்ந்த கல்விஞானத் தைப் பெறவும் வேண்டிப் பால் பெர்ன்ஹார்ட் பெரிய நகரத்திலேயே தங்கிவிட்டான்.

தலைமைப் பாதிரியாரின் உதவியால் ஒரு மாதாகோயிலில் அவன் வேலைக்கு அமர்த்தப் பட்டான். தேவாராதனையின் போது ஆர்கன் வாத்தியப் பெட்டியின் காற்றுத் துருத்தியை அழுத்திச் சுருதி போட வேண்டியது அவன் வேலை. ஆர்கன் வாத்திய இசை இனந்தெரியாத காட்டு விலங்குகள் ஊளையிடுவதும் முழங்கு

வதும் போல அவன் காதுகளைத் துளைத்தது. துருத்தியின் புஸ¬புஸ¬ப்பும் பெடல்களின் கிரீச் சொலியும் இந்தக் காட்டுக் கூப்பாடு காதில் விழாதபடி ஓரளவு அடக்கின. இந்த வேலையை மிகுந்த உற்சாகத்துடன் செய்துவந்தான். ஒவ்வொரு முறை தேவாராதனை முடிந்த பின்னும் மாதாகோயிலைப் பெருக்கித் துப்புரவு செய்வது அவன் கடமை. இந்த வேலை அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. துடைப்பத்தை வீசி வீசிப் போட்டு, பனிப்படலம் போலத் தூசி வெகு உயரமாக எழுந்து பரவித் தன்னையே மூடிவிடும்படி செய்ய முயல்வான். இந்தத் தூசி, கொதிக்கும் ஆப்பிரிக்கப் பாலைவனங்களில் மிக அடிக்கடி சுழன்றெழும் புழுதிப் படலங்களை அவனுக்கு நினைவூட்டியது. சிலுவையில் அறையப்பட்ட இயேசுவின் பிரம்மாண்டமான உருவம் தன் நாட்டில் சமீப காலத்தில் தான் அவன் கண்ட பயங்கரக் காட்சிகளை நினைவூட்டும். ஆதலால் அதைப் பார்க்கும் போதே அவனுக்குக் குலை பதறும். எனவே வேதிகையிலிருந்து மெழுகுவத்திகளை அகற்றுவதற்கு முதுகுப் புறமாகவே நடந்து செல்வான். மாதாகோயிலில் தனித்திருக்கும் வேளைகளில் அடிக்கடி கதவை உட்புறம் தாளிட்டுக்கொண்டு பிரசங்க மேடை மீது ஏறி நின்று, உபதேசியார் போலவே கைகளை வீசி

ஆட்டுவான். இவ்வாறு செய்வதில் அவனுக்கு ஒரே மகிழ்ச்சி. மனம் விட்டுச் சிரிப்பான். கோத்திக் கட்டிடத்தின் உட்கவிந்த முகடு ஏக்கத்துடன் எதிரொலித்து அவனுக்கு விடையளிக்கும்.

மணியடிப்போன் வீட்டிலே, ஓர் அழகிய சிறு அறையில், நாகரிக மக்கள் எல்லோரையும் போலவே அவன் வசித்துவந்தான். நாள்தோறும் காலையில் நல்ல வாசனைச் சோப்பினால் முகங் கழுவிக்கொள்வான், தலைமயிரை நடுவகிடெடுத்து வாரிக்கொள்வான், பூட்சுகள் பளபளக்கும்படி பாலிஷ் போடுவான்; தூய ஆடைகள் அணிவான், நறுமண நீர் மேலே தெளித்துக் கொள்வான். ஞாயிற்றுக் கிழமைகளில் கெடிகாரமும் சங்கிலியும் அணிந்து, விரலுக்கு ஒரு மோதிரமாகப் போட்டுக் கொண்டு, பிரம்பை வீசி யாட்டியவாறு உலா வருவான். கண்ணைப் பறிக்கும் பளபளப்பான பொருள்களில் அவனுக்கு இருந்த மட்டற்ற மோகம் ஒன்றுதான் அவனது முந்தைய வாழ்க்கையின் சின்னமாக இன்னும் நிலைத்திருந்தது. இந்த விஷயத்தில் வெள்ளையர்கள் தனக்கு எவ்விதத்திலும் வேறானவர்கள் அல்ல என்பதை விரைவிலேயே கண்டுகொண்டான். மொத்தத்தில் கிறிஸ்தவ ஒழுக்கத்திலோ பண்பாட்டிலோ தனக்கு முற்றிலும் பரிச்சயமில்லாத புது

இயல்பு எதுவும் அவனுக்குத் தென்படவில்லை. கறுப்பு ப்ராக் கோட் அணிந்து, தலையில் தொப்பி மாட்டி, வாயில் சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டதுமே, தான் அப்படியே வெள்ளையனைப் போல் இருப்பதாக எண்ணிக் கொண்டான். கறுப்புத் தோலின் காரணமாக மட்டுமே அவனுக்குக் கொஞ்சம் கூச்சமாயிருந் தது. அதற்கு அவன் ஒன்றுமே செய்ய முடி யாதே.

அதிகக் கிராக்கியில்லாத சாப்பாட்டுக் கடையில் சாப்பிடுவான். ஒவ்வொரு முறையும் சாப்பாட்டுடன் ஒரு கிளாஸ் சாராயம் அருந்து வான். அதைக் குடித்ததும் சிறிது நேரத்திற்கு மகிழ்ச்சியும் தன்னம்பிக்கையும் உண்டாகும். மாலை வேளைகளில் நாடக மன்றத்தில் மலிவான இடத்திலோ அல்லது கான்ஸர்ட் ஹாலில் பின் வரிசையிலோ அமர்ந்து பொழுது போக்கு வான். ஹாலிலுள்ளவர்கள் மேடையை விட அதிகமாக அவனையே உற்று உற்றுப் பார்ப் பார்கள். இதெல்லாம் அவனுக்கு நெடுங்கால மாகவே பழகிப்போயிருந்தது. இப்போதெல் லாம் அக்கம் பக்கத்திலிருப்பவர்களைக் கூச்சமே இன்றி அவனும் உறுத்து உறுத்து நோக்கு வான். இப்பொழுது அவனுக்கு அநேகமாகப் பக்குவ வயது. எனவே மற்ற எதையும் விடப் பெண்கள் மீது அவனுக்கு அதிக நாட்டம்

விழுந்தது. அவர்களை வெறித்து வெறித்துப் பார்த்தவாறே தன் எண்ணங்களில் ஆழ்ந் திருப்பான். திடீரென அவனது பருத்த உதடு களுக்கிடையே வெண்பல் வரிசை பளிச்சிடும். மணியடிப்பவனது குடும்பத்தாருடன் ஒவ் வொரு நாள் காலையிலும் பிரார்த்தனையில் கலந்துகொள்வான், காதைத் துளைக்கும் உரத்த குரலில் பாடுவான்; முழந்தாள் படியிட்டு, ''பரமண்டலத்திலிருக்கும் எங்கள் பிதாவே'' என்று செபிப்பான். காலை மாலைச் செய்தித் தாள்களை வாங்குவான், அரசியல் விமர்சனங் கள், மார்க்கெட் நிலவரங்கள், தொடர்கதை கள், விளம்பரங்கள் எல்லாவற்றையும் ஒன்று விடாமல் படிப்பான். சமகால ஐரோப்பியப் பண்பாட்டில் நாளுக்கு நாள் முன்னிலும் ஆழ்ந்து மூழ்கலானான். ஆப்பிரிக்காவில் திருச் சபையினரின் வேலை பற்றியும் முக்கியமாகத் தன்னைப் பற்றியும் வெளியாகி யிருந்த சில பிரசுரங்கள் அவனிடம் இருந்தன. மதமாற் றத்துக்குமுன் கறுப்பர்கள் இருந்த நிலையைக் காட்டும் படங்களை மணிக்கணக்காக உற்றுப் பார்ப்பான். நம்ப முடியாத அளவு அவலட் சணம் பிடித்தவர்களாக—உயிருள்ள பாம்பு களைத் தின்பது போலவும், எலும்புகளைக் கறவு வது போலவும், பன்றிகள் மாதிரிச் சேற்றில் புரள்வது போலவும் அவர்கள் வரையப்பட்

டிருந்தனர். இதே கறுப்பர்கள் மதமாற்றத்துக் குப்பின் எப்படி ஆகிவிட்டார்கள் என்பதை வேறு படங்கள் காட்டின. கண்கவர் கூட்டமாக மேஜையைச் சூழ்ந்து அமர்ந்திருந்தார்கள் ஆடவரும் பெண்டிரும். ஆண்கள் எல்லோரும் காற்சட்டைகளும் கோட்டுகளும் அணிந்திருந்தார்கள். பெண்கள் ஆடை உடுத்திருந்தார்கள். கைகளைக் குவித்து, வானை நோக்கியவாறு அவர்கள் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தனர். ஒவ்வொருவர் கழுத்திலும் நாப்கின் கட்டப்பட்டிருந்தது. மேஜை மேல் சில தட்டுக்களும், கடுகுச் சட்டினிப் பாத்திரமும் வைக்கப்பட்டிருந்தன. பால் பெர்ன்ஹார்டின் அப்பன் மூக்கு வளையமணிந்த கொழுத்து உயர்ந்த ஆளாகவும், அவனுடைய தாய் முதுகில் கூடையைக் கட்டிக்கொண்டு அலங்கோலத் தோற்றமளித்த முதியவளாகவும் தீட்டப்பட்டிருந்தார்கள். பால் பெர்ன்ஹார்டும் படத்தில் இருந்தான், கோட்டு அணிந்து, மார்பில் சிலுவை இலங்க. பெனிடிக்ட் பாதிரியாரோ பலவகை உடைகளிலும் பலவகைப் பாவனைகளிலும் காட்டப் பெற்றிருந்தார். சில படங்களில் தனியாயிருந்தார். சிலவற்றில் தம்மால் மதமாற்றம் செய்யப்பட்ட கறுப்பர்களுக்கிடையே காணப்பட்டார். சில படங்க

ளில் துப்பாக்கியும் தோளுமாகக் கூடக் காட்டப் பட்டிருந்தார். சவுக்கும் கையுமாகத்தான் ஒரு படத்தில் கூட இல்லை.

தனது சிறிய அறையும் நாகரிக வாழ்வும் பால் பெர்ன்ஹார்டுக்கு முற்றிலும் பழக்கமாகி விட்டன. பெனிடிக்ட் பாதிரியாரின் அன்பளிப் பான இயேசுவின் சிலுவையுரு அவன் மேஜை மீது இருந்தது. அது ஒன்று தான் எவ்வளவு முயன்றும் அவனுக்குப் பழக்கமாக மாட்டே னென்றது. அதைப் பார்க்கும் போதெல்லாம், எறும்புப் புற்றுகளுக்கு மேல் தொங்கவிடப் பட்டு, இரவு முழுவதும் கோ கோ வெனக் கதறி ஊளையிட்டு, முடிவில் சதையெல்லாம் கறவப்பட்ட எலும்புக் கூடுகளாய் மரங்களில் கட்டுண்டு ஊசலாடிய கறுப்பர்களின் நினைவு அவனுக்கு உண்டாகும் — எதனுலோ, கடவு ளுக்கே வெளிச்சம். வழக்கமாக அவன் இந்தச் சிலுவையைச் செய்தித்தாளால் மூடி மறைத்து விடுவான். இருந்தபோதிலும், அடிக்கடி நள் ளிரவில் அலறியடித்துக்கொண்டு விழிப்பான், அச்சத்தால் பற்கள் கடகடக்க, கண்கள் மேஜையை உறுத்து நோக்க, படுக்கையின் ஓரத்தில் ஒண்டி முடங்கியவாறு, ஆப்பிரிக் காவின் முள்புதர்களில் ஊளையிடும் கழுதைப் புலியைப் போலத் தேம்புவான்.

## 11

மாதாகோயில் வேலையில் பால் பெர்ன் ஹார்ட் நீண்ட காலம் நிலைத்திருக்கவில்லை. ஞாயிற்றுக் கிழமைகளில் தேவாராதனையின் போது கூட்டத்தின் முன் வரிசையில் வழக்க மாக உட்காரும் பக்தியுள்ள சீமாட்டி ஒருத் திக்கு அவனைப் பிடித்துவிட்டது. தன் வீட்டில் எடுப்பாளாக வேலை செய்யும்படி அவள் அவனை வற்புறுத்தி அழைத்துச் சென்றாள். மாதாகோ யிலில் இருந்த சிலுவையுருவம் பால் பெர்ன் ஹார்டுக்கு நாளாக ஆக அதிக அச்சம் விளைத் தது. அதன் பயத்தால் பிரசங்க மேடைமேல் ஏறிக் கைகளை ஆட்டுவதைக்கூட அவன் விட்டு விட்டான். எனவே, சீமாட்டியின் அழைப்பை மகிழ்வுடன் ஏற்றுக்கொண்டு மாதாகோயில் வேலைக்குத் தலை முழுகிவிட்டான்.

பக்தியுள்ள சீமாட்டியின் வீட்டில் அவன் வாழ்க்கை இன்பமாகக் கழிந்தது. அவள் வண்டி யில் உலாப் போகையில் பால் பெர்ன்ஹார்ட் வண்டி யோட்டியின் அருகே உட்கார்ந்துகொள் வான். சீமாட்டியின் நோயாளித் தாயாரைத் தள்ளு வண்டியில் உட்கார வைத்து, பார்க்கி லோ, அவர்களது பங்களாவை அடுத்த தோட் டத்திலோ தினந்தோறும் ஓரிரு மணி நேரம் தள்ளுவதும் அவன் வேலை. சீமாட்டி விருந்தளிக்

கும் போது விருந்தாளிகளின் மேல்கோட்டு களைக் கழற்றிவாங்கி உடுப்பறையில் மாட்டு வதும், சீமாட்டிகளின் ரப்பர் மேல்ஜோடுகளைக் கழற்றுவதும், விருந்தாளிகளுக்குச் சாராயம் ஊற்றிக் கொடுப்பதும், பழங்களை வினியோகிப் பதும் அவன் கடமைகளே. சிறுவர் சிறுமியர் விளையாட்டிடங்களில் பந்தாட்டமோ வேறு ஆட்டங்களோ ஆடும்போது பால் பெர்ன்ஹார்ட் அவர்களுக்கு உதவியாளாகப் பணி புரிவான். மட்டக் குதிரைச் சவாரியும் மற்ற விளையாட்டுக் களும் அலுத்துப் போனதும் சிறுமிகள் அவன் தோள்களில் ஏறி அமர்ந்து அவன் தலைமயிரைப் பிடித்துக்கொண்டு, குதிமுள் அணிந்திருப்பது போன்ற பாவனையுடன் அவனை உதைப்பார் கள். அவன் குதிரையைப் போலவோ ஒட்டகத் தைப் போலவோ பாய்ந்தோட வேண்டும், இல்லாவிட்டால் நெருப்புக் கோழி போலக் குதித்தோட வேண்டும். ஒட்டத்தின் விரை வினால் மேலே குந்தியிருக்கும் தாட்டையன் களுக்கு மூச்சுத் திணறும்வரை அவனுக்கு இதி லிருந்து விமோசனம் கிடையாது.

சீமாட்டியின் கணவன் பணக்காரச் சீமான். அவன் தலை ஒரே வழுக்கை. அவனுக்குப் பால் பெர்ன்ஹார்ட்டைக் கண்டாலே கரிக்கும். அதே போலப் பால் பெர்ன்ஹார்டுக்கும் அவனைக் கண்டால் ஆகாது. கணவனுக்கும் மனைவிக்கு

மிடையே ஏழாம் பொருத்தந்தான் என்பதை உணர்ந்துகொண்ட பால் பெர்ன்ஹார்ட், எல்லா விஷயங்களிலும் கணவனை அடியோடு புறக்கணித்துவிட்டு, மனைவியைத் திருப்தி செய்வதற்குத் தன்னால் ஆன வரை முயன்றான். அவனுக்கு பிரெஞ்சு மொழியும் ஆங்கிலமும் கொஞ்சம் கொஞ்சம் புரியும் என்பதை அறியாத சீமாட்டி, தன் நண்பர்களிடம் அவனைப் பற்றிப் பெருமை யடித்துக் கொள்வாள். அவன் நாயைப் போன்ற விசுவாசமுள்ளவன் என்பாள். அவன் கனவில் கூடச் செய்தறியாத வீரச் செயல்களை அவன் புரிந்ததாக வர்ணிப்பாள். இவற்றை யெல்லாம் கேட்டு அவனுக்கா, ஒரேயடியாக மகிழ்ச்சி பொங்கும். அளவுக்கு மீறிய தற்பெருமையும், தனது உடல் வலிமை, திறமை, படிப்பு, கிறிஸ்தவ மதபக்தி ஆகியவை பற்றி ஒரே கர்வமும் கொண்டிருந்தான் அவன். சுவிசேஷ வர்ணனைகள் பற்றிய படங்களால் தன் அறைச் சுவரை அலங்கரித்தான். காலைப் பிரார்த்தனையின் போது மற்றவர்களை விட அதிக நேரம் முழந்தாள் படியிட்டவாறே இருந்து, தலை தரையில் மடாரென்று படும்படி விழுந்து விழுந்து வணங்குவான். இவ்வாறு செய்வது தன் எஜமானர்களுக்கு உகப்பாயிருக்கும் என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும்.

அவன் மேலும் ஆன்மீக வளர்ச்சி பெறு

வதில் அவன் எஜமானி ஆழ்ந்த அக்கறை காட்டினாள். மதவிஷயங்கள் பற்றிய நூல்களை அவனுக்கு வாங்கிக் கொடுத்தாள். அமர ஆன்மாகடைத்தேறச் செய்பவையான பல விஷயங்கள் சம்பந்தமாக அவனுடன் நீண்ட நேரம் உரையாடி வந்தாள். அவனுக்கு என்னவோ இந்த உரையாடல்களை விட எஜமானி தனக்காகக் கற்பனை செய்து தயாரித்தளித்த விதம் விதமான ஆடைகள்தாம் அதிக இன்பமளித்தன. காலை வேளைகளில் வெள்ளைப் பிளானல் சட்டையும் வீட்டிலணியும் மென்மையான ஜோடுகளும் போட்டுக்கொள்வான். பகல் சாப்பாட்டு நேரத்தில் இந்த உடையைக் களைந்து விட்டு, மஞ்சள் பொத்தான்கள் உள்ள நீலக் கோட்டும், குட்டையான குறுகல் கால்சட்டையும், வெண்பட்டுக் காலுறைகளும் அணிந்து கொள்வான். இந்தக் காலுறைகள் அவனது முறுக்கேறிய தசைகளின் அழகை நன்கு எடுத்துக் காட்டின. மாலை வேளைகளில் மத்திய தர வகுப்பாருக்குரிய அடக்கமான கோட்டும், காற்சட்டையும், கஞ்சி போட்டு முடமுடப்பாக விறைத்து நிற்கும் கழுத்துப் பட்டையும், வெண்ணிற 'டை'யும் அணிவான். இந்த மாலை உடையைவிடப் பகல் உடையே அவனுக்கு விருப்பமாயிருந்தது. கெடிகாரமும் சங்கிலியும் அணிந்து கைப்பிரம்பைச் சுழற்றிக்கொண்டு

அவன் ஒய்யார நடை நடப்பதெல்லாம் சாதாரணமாகத் தன் அறையில் தான். சில சமயம் நகரில் உலாவி வருவதற்கும் அவனுக்கு அனுமதி கிடைப்பதுண்டு. இந்தத் தருணத்தைப் பயன்படுத்திக்கொண்டு அவன் ஏதேனும் சாராயக் கடையில் நுழைந்து ஒரு கிளாஸ் சாராயம் பருகி, ஒரு சுருட்டைப் புகைப்பான்.

சீமாட்டியின் கணவன் ஏதோ அலுவலாக வெளியூர் சென்றுவிடவே, மாலைத் தேவாராதனைக்கு அவளை அழைத்துச் செல்வது பால் பெர்ன்ஹார்டின் பொறுப்பாயிற்று. அவளது பிரார்த்தனைப் புத்தகத்தையும் மாலையிலணியும் சால்வையையும் கையிலேந்திய வாறு மரியாதையாக அவள் பின்னே நடப்பான். வழியில் போகிறவர், வருகிறவர்கள் எல்லோரும் அவர்கள் இருவரையும் வியப்புக் குறியுடன் நோக்குவார்கள். இது தனது எஜமானிக்கு மிகுந்த மகிழ்ச்சி அளிக்கிறது என்பதை அவன் கண்டுகொண்டான். தேவாராதனையின் போது உபதேசியாரின் மேடையோ, சிலுவையுருவோ கண்ணில் படாத இடமாகத் தேர்ந்தெடுத்து உட்கார்ந்து கொள்வான். பிரார்த்தனை செய்யும் போதும் உபதேசியாரின் உரையைக் கேட்கும் போதும் பக்தியும் மகிழ்வும் பொங்கும் கண்களால் எஜமானியை அடிக்கடி பார்ப்பான். இதுவும் அவளுக்குச் சந்தோஷமளித்தது.

ஒரு நாள் மாலை மாதாகோயிலிலிருந்து திரும்புகையில் அவர்கள் மழைப் புயலில் அகப் பட்டுக்கொண்டார்கள். இடியும் மின்னலுமாக அடைமழை கொட்டியது. வீடு சேர்ந்து ஈர ஆடைகளைக் களைந்து வேறு உடைகள் அணிந்து கொண்ட பின் எஜமானி அவனைக் கூப்பிட்டனுப் பினாள். அவன் வந்ததும், சர்வவல்லமையுள்ள கர்த்தரின் ஆளுகைக்கு உட்பட்டவையும் அவரால் தமது உசிதம்போல உபயோகிக்கப் படுபவையுமான பயங்கர இயற்கை நிகழ்ச்சி களைப் பற்றி இரவு நெடுநேரம்வரை அவனுக்கு விவரித்தாள். இந்த விரிவுரை முடிந்ததும், நாற்காலியிலிருந்து எழுந்து கொட்டாவிவிட் டாள்.

''நான் இப்போது தூங்கப் போகிறேன், மகனே. நீ வெளியே போய்விடாதே. இடி இடிக்கும் போது தனியாயிருக்க எனக்குப் பயம். கர்த்தரின் கண்களுக்கு நாம் எல்லோருமே பாவி கள் தானே! தெய்விக நெருப்பால் எப்போது, யாரைத் தாக்குவார் என்று யார் கண்டது?'' என்றாள்.

எஜமானி தன் அறைக் கதவைத் தாளிட வில்லை. பால் பெர்ன்ஹார்ட் விளக்கை அணைத்து விட்டு இருட்டில் நெடுநேரம் பிரார்த்தனை செய்தான். இடி முழக்கமோ ஓய்ந்த பாடில்லை.

அப்போது அவள், ''எனக்குப் பயமாயிருக்

கிறது, இப்படிக் கிட்டத்தில் வா, மகனே'' என அழைத்தாள்.

உத்தரவுப்படியே செய்தான் பால் பெர்ன் ஹார்ட். நாற்காலியை எடுத்து, சீமாட்டியின் அறைக் கதவின் அருகே போடப் போனுன். அதற்குள் அவள், ''இன்னமும் எனக்குப் பய மாகவே இருக்கிறது. என் அறைக்குள் வா, மகனே'' என்ருள்.

உத்தரவுப்படியே செய்தான் பால் பெர்ன் ஹார்ட்.

மறுநாள் காலே பெனிடிக்ட் பாதிரியாரிட மிருந்து அவனுக்கு ஒரு கடிதம் வந்தது. எத் தனேயோ விஷயங்களோடு அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

''நேர்மையுள்ள, மதிப்பு வாய்ந்த ஜனங் களின் பணியாளாக நீ வேலே செய்கிருய் என்று அறிந்தேன். இது மிக நல்லது, என் மகனே. வயதில் வளர்ந்தவன் ஆயினும் ஆன்மீக, மான சிக வளர்ச்சியில் நீ இன்னும் குழந்தைதான். இந்தக் கிறிஸ்தவக் குடும்பத்தினர் தங்களில் ஒருவனுகவே உன்னே ஏற்றுக்கொண்டு உனது ஆன்மாவின் கடைத்தேற்றத்தில் அக்கறை காட் டுகிருர்கள். அவர்கள் இட்ட ஏவலேத் தட்டின்றி நிறைவேற்றி வருவாயாளுல் இந்தப் புதிய வேலே யில் நிச்சயமாக முன்னேறுவாய். உனது அறிவு நிறைவு பெறும்; பண்பாடும் ஒழுங்கும் உள்ள

மக்களின் உலகஞானத்தைக் கிரகித்துக்கொள் வாய். இவ்வாறு செய்வதனுல், துன்பத்திலும் அஞ்ஞானத்திலும் இருந்து வெளியேறி, உண் மையான கிறிஸ்தவப் பண்பாட்டின் பூர்ணத் துவத்தை நோக்கி முன்னேறுவதற்கான பாதை யைச் செம்மைப்படுத்திக்கொள்வாய். எனது ஆசிகளைப் பெற்றுக்கொள், மகனே. ஆமென்.''

பெனிடிக்ட் பாதிரியாரின் கட்டளைகளைச் சந்தோஷத்துடன் நிறைவேற்றினன் பால் பெர்ன்ஹார்ட்.

## 12

பரிவுள்ள சீமாட்டியின் வீட்டில் பால் பெர்ன்ஹார்டின் வாழ்வு விரைவிலேயே எதிர் பாராத விதத்தில் முடிந்துவிட்டது. வெளியூரி லிருந்து திரும்பிய அவள் கணவன், பால் பெர்ன் ஹார்டை முன்னிலும் இருமடங்கு வெறுக்க லானன். ஆன்மாவின் கடைத்தேற்றம் பற்றிய உரையாடல்களைக் கேட்கவே அவனுக்குப் பிடிக்கவில்லை. தனது பெண்களைப் பால் பெர்ன் ஹார்டின் பக்கத்தில் அண்டவே விடவில்லை அவன். ஆகக் கடைசியில் ஒரு நாள் பால் பெர்ன் ஹார்ட், கையில் பிரம்பும், வெயிஸ்ட்கோட் டில் கெடிகாரச் சங்கிலியுமாக அப்பெரிய நகரத் தின் வீதியில் நிற்க நேர்ந்தது. இப்போது அவன் எங்கு வேண்டுமானுலும் போகலாம்.

நாகரிக நாட்டிலே ஒருவனுக்கு நேரக் கூடிய துன்பங்களில் எல்லாம் கொடியது எங்கு வேண்டுமானாலும் போகலாம் என்ற நிலைமையே என அவன் விரைவில் அறிந்துகொண்டான். அவன் போவதற்கு ஓரிடங்கூட இல்லை. கால் போன போக்கில் தெருக்களில் அலைந்தான், துறைமுகத்தில் சுற்றினான், சாராயக் கடைகளுக்குள் நுழைந்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் அவனிடம் கெடிகாரமுமில்லை; சங்கிலியுமில்லை; பணமோ, செப்பாலடித்த காசுகூட இல்லை. எனினும் அதிர்ஷ்டவசமாக அவனுக்கு வேலை கிடைத்துவிட்டது. ஒரு சினிமாத் தியேட்டர் வாயிலில் நின்று கூவி விளம்பரம் செய்வது அவன் வேலை. மாலை ஐந்து மணி வாக்கில் சினிமாத் தியேட்டருக்கு வெளியே நடைபாதையில் நின்று, இடைவிடாது மணி அடித்துக்கொண்டே, உரத்த குரலில் கூச்சலிடுவான்:

''முந்துங்கள்! இடத்துக்கு முந்துங்கள்! நகரத்திலேயே முதல் தடவை! வயது வந்தவர்களுக்கு மட்டுமே! மயிர்க்கூடச் செறியும் சம்பவங்கள்! இரத்தக்களரியும் பயங்கரமும்! ஆயிரத்து ஐந்நூறு மீட்டர்கள்!''

கண்களைப் பயங்கரமாக உருட்டி விழித்துப் பற்கள் தெரியும்படி இளித்து மூன்று மொழிகளில் இவ்வாறு கத்துவான். அவன் கத்துவ

தே ஜனங்களைத் திரள் திரளாக ஈர்த்தது. கூடைக்காரிகள், பள்ளிப் பையன்கள், தெருச் சுற்றும் சிறுவர்கள், மற்ற வழிப் போக்கர்கள் எல்லோரும் நின்று அவனை நோக்குவார்கள்; அவன் தோலைத் தொட்டுக் கறுப்பு ஒட்டிக் கொள்கிறதா என்று பார்ப்பார்கள். அவனோ விளம்பரப் பிரசுரங்களை அவர்கள் கைகளில் திணித்து அவர்களை டிக்கட் கொடுக்கும் இடத் தின் பக்கம் தள்ளுவான். அவன் இப்படி உபசார மின்றி அடாபிடித்தனமாக நடந்துகொள்வதை ஒருவரும் அவ்வளவாகப் பொருட்படுத்து வதில்லை. அவன் கறுப்பனை படியால் அவன் நடந்து கொள்ளும் விதம் வெள்ளையரின் வழக் கத்துக்கு மாறாயிருக்கலாமல்லவா? தியேட்டர் மளமள வென்று நிறைந்து வந்தது. எஜமா னுக்கு அவன் மேல் திருப்தி. நள்ளிரவுக்குப் பின்பு, பொதுப் படக்காட்சிகள் முடிந்து முன் வாயிற் கதவுகள் பூட்டப்பட்டதும், எஜமா னுக்கு நன்கு அறிமுகமானவர்கள் பின் வாயில் வழியாக உள்ளே வந்து, ஆண்களுக்காக மட் டும் தயாரிக்கப்பட்ட விசேஷத் திரைப்படங் களைப் பார்ப்பார்கள். அதற்கான கட்டணத் தை அவர்களிடமிருந்து வசூலித்தபின்பு பால் பெர்ன்ஹார்ட் தானும் ஹாலுக்குள் போய் அந்தப் படங்களைப் பார்க்கலாம். காட்டு மிராண்டிகளின் மிருகத்தனத்தையும் ஒழுக்க

வினத்தையும் விட ஐரோப்பியப் பண்பாடு எவ்வளவு உயர்வானது என்பது இந்தப் படங்களில் அசாதாரணமாக மனதில் பதியும் வகையில் விளக்கிக் காட்டப்பட்டிருந்தது. இந்தப் படங்களேப் பார்க்கப் பார்க்க, ஐரோப்பியப் பண்பாட்டின் கவர்ச்சியைப் பால் பெர்ன் ஹார்ட் தெள்ளத் தெளியப் புரிந்துகொண்டான். இந்தப் பண்பாடு வழங்கும் இன்பங்களே எல்லாம் ஒன்று விடாமல் முழுமையாக அனுபவிக்க முயன்ருன்.

இந்த வேலேயையும் அவன் விரைவிலேயே விட வேண்டியதாயிற்று. பேராசை காரணமாகச் சினிமா சொந்தக்காரன் போலீஸ்காரர்களுக்குச் சேர வேண்டிய மாமூலே உரிய நேரத்தில் கொடுக்கத் தவறிவிட்டான். ஓரிரவு, மிக மிகச் சுவையான படம் ஒன்று காட்டப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் போலீஸ்காரர்கள் திடீரென வந்து சோதனே போட்டார்கள். சினிமாத் தியேட்டர் மூடப்பட்டது, சொந்தக்காரன் சிறையில் தள்ளப்பட்டான். பால் பெர்ன்ஹார்ட் மீண்டும் தெருவே கதியாஞன்.

இம்முறையும் அதிர்ஷ்டம் அவன் பக்கம் இருந்தது. மூன்றே நாட்களுக் கெல்லாம் ஊரூராகச் சுற்றும் சர்க்கஸ் ஒன்றில் அவனுக்கு வேலே கிடைத்துவிட்டது. இந்தச் சர்க்கஸுடன் அவன் எல்லா நாடுகளுக்கும் போஞன். முதலே

வாயனுள பூதாகாரமான கறுப்பன் ஒருவன் உயிருள்ள நாயை விழுங்குவது போல் தீட்டப்பட்ட விளம்பரப் படம் பெரிய, சின்ன நகரங்களில் எல்லாம் காட்டப்பட்டது. கிரந்தி நோய் உற்ற, உருத் நிர்வாண மெழுகு பொம் மைகளை எல்லாம் கண்ணுரக் கண்டபின் பார் வையாளர்கள் எழுந்து செல்லத் தயாராகும் வேளையில் பின் சுவரின் எதிரே திரை விலகும். நடுத்தர உயரமான கறுப்பு இளைஞன் ஒரு வன் அங்கே தென்படுவான். உயிருள்ள தவளை யை விழுங்குவது போல அவன் நடிப்பான். தத்தக்க பித்தக்க என்று குதிப்பதும், வயிற் றை அசைப்பதும், எல்லா விதமாகவும் முகத் தைக் கோணிக்கொள்வதுமாக ஏதோ காட்டு நடனம் ஆடுவான். காதுகள் வரை வாயைத் திறந்து அஹ்ஹஹ்ஹா என்று சிரிப்பான். தனது கறுப்புத் தோலைத் தொடவும் கடின மான தசைகளைக் கிள்ளவும் எல்லோரையும் அனுமதிப்பான். தனக்கு இட்ட வேலைகளை எல் லாம் பால் பொ்ன்ஹார்ட் மனப்பூர்வமாகச் செய்துவந்தான். எனினும் சர்க்கஸுக்கு வரு மானம் என்னவோ நாளுக்கு நாள் குறைந்து கொண்டே போயிற்று. சர்க்கஸ் சொந்தக்கா ரன் வேலையாட்களுக்குச் சம்பளம் கொடுக்க முடியாமல் மாதக் கணக்காகக் கடத்திவிட் டான். பால் பொ்ன்ஹார்டுக்கு உயிர் வாழ்வதே

பெரும் பாடாகிவிட்டது. மதுவும், சுருட்டும், பெண்களும், மற்ற உலக இன்பங்களும் துய்க்கும் பழக்கம் அவனிடம் வலிவாக வேரூன்றிப் போயிருந்தது. ஆகக் கடைசியில் வரும்படி மிக மிகச் சுமாரான ஒரு நாள், அவன் சர்க்கஸின் பணப் பெட்டியிலிருந்த பிச்சைக் காசுகளை வறண்டி எடுத்துக்கொண்டு விட்டான். சொந்தக்காரன் முஷ்டி பிடித்துக் கொண்டு அவன் மேல் பாய்ந்தான். பால் பெர்ன்ஹார்டோ அவனைச் சக்கை வேறு சாறு வேருகப் பிழிந்தெடுத்துவிட்டான். இதற்காக அவனுக்குச் சிறைத் தண்டனை கிடைத்தது. சிறையில் ஒரே இட நெருக்கடி. கடுங்குளிர். உண்பதற்குக் கறுப்பு ரொட்டி, தண்ணீர், நீர்த்த பீட்ரூட் சூப், அவ்வளவுதான். காவலாளிகளின் அடிகளுக்குப் பதிலடி கொடுக்க முடியவில்லை. சிறையில் கழித்த ஒன்றரை வருஷங்களில் பால் பெர்ன்ஹார்ட் ஒட்டி உலர்ந்து, எடை குறைந்து, கிழடுதட்டிப் போனுன்.

## 13

சிறையிலிருந்து விடுதலை யானதற்குப் பிந்தைய சில நாட்கள் தாம் அது வரை அவன் வாழ்விலேயே மிக மிகத் துன்பகரமானவை. ஆடை ஒரேயடியாக நைந்து கசங்கியிருந்த படியால் நாணயஸ்தர்கள் வீடுகளில் எவரும்

அவனை நுழைய விடவில்லை. சிறைச் சாலையில் திருடர்கள், கொலைகாரர்களுடன் பழகிப் பழகி அவனுக்குப் படிந்து போயிருந்த நடையுடை பாவனைகளோ, மரியாதையுள்ளவர்கள் அவனை அணுகவே அஞ்சுமாறு செய்தன. வேறு புகலின் மையால் திருடர்களுடனும் பலவகைக் காலாடி களுடனும் பால் பெர்ன்ஹார்ட் உறவாட வேண் டியதாயிற்று. ஏதாவது தெரு மூலையில் அவன் நீக்ரோ நடனம் ஆடுவான், அல்லது கறுப்பர் கள் உயிருள்ள தவளைகளை விழுங்குவது எப்படி என்று காட்டுவான். அதை நம்பி வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பவர்களின் ஜேபிகளை அவன் நண்பர்கள் ஒட்டத் துடைத்து விடு வார்கள். இதிலும் விதி அவனுக்கு எதிராயிருந் தது. சட்டம், அதன் பொறுப்பாளர்கள் ஆகி யோரின் பிடிகளில் பின்னுமொரு முறை அவன் சிக்கிக்கொண்டான். மேலும் ஒரு தடவையோ, இரு தடவைகளோ அவன் சிறைக் குளிரில் விறைத்து, பீட்ரூட் சூப்பைத் தொண்டைக்குள் செலுத்த நேர்ந்தது. அதன் பின் அவன் துறை முகத்தில் சரக்கு ஏற்றி இறக்கும் கூலியாகச் சிறிது காலம் வேலை செய்தான். அந்தச் சமயம் பார்த் துத் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்து அவனை விரட்டி யடித்துவிட்டார்கள். குப்பைக் கிடங்குகளில் உறங்குவதும், உருளைக் கிழங்குத் தோல், நாய்கள் கறவிய எலும்புகள், இவை

போன்ற வேறு கழிவுப் பொருள்கள் ஆகியவற்றை உண்பதுமாக அவன் காலங்கழித்தான். கடற் கரையோரமாகப் போய் வரும் கப்பலொன்றில் இரண்டு மாதம் கரி தள்ளினான். குளிர்காலத்தில் கடல் உறைந்து போகவே அந்த வேலையிலிருந்து நீக்கப்பட்டான். இருப்புப் பாதையிலிருந்து வெண்பனியை அகற்றுவது, தெரு பெருக்குவது, சவக்குழிகள் தோண்டுவது, வீடு வீடாக அலைந்து திரிந்து கிழிசல் துணிகள், காகிதத் துண்டுகள், காலித் தகர டப்பாக்கள், துருப்பிடித்த ஆணிகள் ஆகியவற்றைப் பொறுக்குவது என்று எத்தனையோ விதமான வேலைகள் செய்தான். சில வேளைகளில் எவ்வித வேலையுமில்லாமல், குளிரால் விறைத்து, பசியால் காய்ந்த வயிற்றுடன் தெருத் தெருவாகச் சுற்றி அலைந்தான். முடிவில் ஒரு நாள் உணர்விழந்து தெருவில் விழுந்து கிடந்தான். ஜனங்கள் அவனைத் தூக்கி அகதிகளுக்கான ஆஸ்பத்திரியில் கொண்டு சேர்த்தார்கள். அங்கிருந்து வெளியேறிய போது அவனுக்கு இலவச ரெயில்வே டிக்கட் கொடுக்கப்பட்டது. அதன் உதவியால் ரெயிலேறி மீண்டும் பெரிய நகரத்துக்கு வந்து சேர்ந்தான். அங்கே ஒரு சாராயக் கடையில் பரிசாரகனாக அமர்ந்தான். வேலை ஒன்றும் கடினமாயில்லை. ஆனால் எஜமான் சம்பளம் எதுவும் கொடுக்க

வில்லை, வாடிக்கைக்காரர்களோ, பக்ஷீஸ் கொடுப்பதில் கருமிகளாயிருந்தார்கள். இதெல் லாந்தான் போகிற தென்றால் எல்லோரையும் திருப்தி செய்வது முக்கியப் பிரச்சினையாக இருந் தது. தண்ணீர் கலக்காத சாராயத்தை வாடிக் கைக்காரர்களுக்கு ஊற்றிக் கொடுத்ததற்காக எஜமான் திட்டினான். வாடிக்கைக்காரர்களோ, குடிவகைகளில் ஏகப்பட்ட தண்ணீரைக் கலந்து விட்டதற்காக வாயார வைது நொறுக்கினார் கள். வாடிக்கைக்காரர்களுடன் எஜமான் சீட் டாடும் போது பால் பெர்ன்ஹார்ட் அவர் களது நாற்காலிகளுக்குப் பின்புறமாகக் குறுக் கும் நெடுக்கும் சென்று அவர்கள் கையில் என்ன சீட்டுகள் இருக்கின்றன என்று எஜமா னுக்கு ஜாடை காட்ட வேண்டியிருந்தது. இதற் காகப் பல முறை எஜமானுக்குப் பதில் அவனே அடிபடவும் நேர்ந்தது. இந்தக் காரணத்தினா லேயே முடிவில் அவன் சாராயக் கடைக்குத் தலை முழுகிவிட்டு, விபசார விடுதி ஒன்றில் வேலைக்கு அமர்ந்தான். விடுதியில் வம்பு செய் யும் வாடிக்கைக்காரர்களை வெளியே நெட்டித் தள்ளுவது அவன் வேலை. இங்கேயும் எல்லோர் அன்பிற்கும் பாத்திரனாக, தன் கடமைகளை மிக நன்றாக நிறைவேற்றி வந்தான் பால் பெர்ன் ஹார்ட். ஆனால் ஒரு வருஷமாவதற்குள்ளேயே அவன் கெட்ட நோய் ஒன்றை வாங்கிக் கட்டிக்

கொண்டதால் ஆஸ்பத்திரி செல்ல நேர்ந்தது. ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பியதுமே திடீரென அவனுக்கு அதிர்ஷ்டம் திரும்பியது. அவன் பரிசாரகனுக வேலை செய்த சாராயக் கடைச் சொந்தக்காரன் சிறுநீரக அழற்சியால் இறந்து போனுன். அவன் மனைவி தன்னந் தனியாகிவிட்டாள். முந்திய நாட்களிலும் பால் பெர்ன்ஹார்ட் அவளுடன் அந்தரங்க உறவு கொண்டிருந்தான். எனவே நேரே அவளிடம் போனுன்; வெட்டிப் பேச்சு எதுவுமின்றித் தானே சொந்தக்காரனின் பாத்திரத்தை வகிக்கலானுன். இப்போது சாராயத்தில் தண்ணீர் கலப்பதும் வாடிக்கைக்காரர்களுடன் சீட்டு விளையாடுவதும் அவன் தான். வாடிக்கைக்காரர்களிடம் அடிபடும் விஷயத்தில் முன்பு அவன் வகித்த பாத்திரத்தை இப்பொழுது சொந்தக்காரனின் மனைவி வகித்தாள். இந்தச் சந்தர்ப்பத்தில் பெனிடிக்ட் பாதிரியாரைப் பற்றிய செய்தி அவனுக்கு எட்டியது. என்றுமே மறக்க முடியாத தனது ஆசிரியர் இன்னும் உயிரோடிருப்பதாகவும் கறுப்பர்களைக் கிறிஸ்தவர்களாக்கும் புனிதக் கைங்கரியத்தை விடாது செய்து வருவதாகவும் தெரிந்துகொண்டான். சிறிது காலத்துக்குப் பின் அவரிடமிருந்து பால் பெர்ன்ஹார்டுக்கு ஒரு கடிதம் வந்தது. அதன் ஒரு பகுதி பின்வருமாறு:

''நன்றே செய்தாய், மகனே. எந்த உழைப்பும் புகழுக்கு உரியதே. ஆயினும் யாவற்றினும் அருள் பெற்றதும் பயனுள்ளதுமான உழைப்பு எது வென்றால் தனது சொந்த நன்மைக்காகவும் தனது குடும்பத்தின் நன்மைக்காகவும் செய்யப்படும் உழைப்புத்தான். நீ செல்ல ஆரம்பித்திருக்கும் பாதை உன்னை மதிப்பிற்கு கந்த வாழ்விற்கு இட்டுச் செல்லும். தனியார் சொத்தும் பணமும் — இவை செல்வம் அல்ல, மகனே, — இவைதாம் நமது அரசாங்கத்திற்கும் நமது பண்பாட்டிற்கும் எல்லாவற்றிலும் நம்பகமான அடிப்படை. கர்த்தர் உனக்குத் தக்க பரிசுகள் அருள்வாராயின், உனது தோல் கறுப்பாயிருந்த போதிலும் ஒவ்வொரு வெள்ளையனும் உன்னை எதிரே கண்ட போதெல்லாம் பணிவாக வணங்குவான். நகரக் கவுன்சிலின் உறுப்பினனைகத் தேர்ந்தெடுக்கப்படும் கௌரவம் கூட உனக்குக் கிடைக்கலாம். மீளாத் தூக்கத்தில் ஆழ்ந்து நான் கண் மூடுமுன் இந்தக் காட்சியைக் கண்ணாரக் காண விழைகிறேன். கர்த்தர் உனக்குத் துணை புரிவாராக, மகனே.''

## 14

அந்தக் கணம் முதல் பால் பெர்ன்ஹார்டுக்குக் கர்த்தர் மீண்டும், அதுவும் பெனிடிக்ட்

பாதிரியார் எண்ணியதைக் காட்டிலும் எவ்வளவோ அதிகமாகத் துணைபுரியத் தலைப்பட்டார் என்பதை இதோ காண்போம்.

சிறிது காலத்திற்கெல்லாம் சாராயக்கடையின் சொந்தக்காரி கணவன் போன வழியே போய்ச் சேர்ந்தாள். பால் பெர்ன்ஹார்ட் கிறிஸ்தவ முறைப்படி அவளை அடக்கம் செய்தான். அவள் காலமான பின்பு அவனே சாராயக் கடையின் முழு உரிமை பெற்ற ஒரே சொந்தக்காரன் ஆனான். அதைச் செப்பனிட்டு, விரிவுபடுத்தி, தனி அறைகளும் மற்ற வசதிகளும் கொண்ட முதல்தர ஹோட்டலாக மாற்றினான். இப்போதெல்லாம் அவன் சீட்டு விளையாடுவதுமில்லை, சாராயத்தில் தண்ணீர் கலப்பதுமில்லை. ஆறு பரிசாரகர்களும், நகர ஹோட்டல்களில் வேலை செய்த மிக மிக அழகிய பணிப் பெண்களிலிருந்து பொறுக்கியெடுத்த பன்னிரண்டு பரிசாரகிகளும் அவன் ஹோட்டலில் வேலை செய்தார்கள். கறுப்பு 'டெயில் கோட்டு' அணிந்து, தனது 'நிலையத்'தில் மேலும் கீழுமாக உலாவுவதும், பரிசாரகர், பரிசாரகிகளைக் கண்காணிப்பதும் மட்டுமே அவன் அலுவல். சிற்சில சமயங்களில் ஏதாவது ஒரு மேஜையின் அருகே வாடிக்கைக்காரர்களுடன் உட்கார்ந்துகொள்வான்; இல்லாவிட்டால் தனி அறைகளில் ஒன்றின் கதவைத்

தட்டி, விருந்தாளிகளுக்கு 'வேறு ஏதேனும்' வேண்டுமா என்று கேட்பான். அவனுடைய ஹோட்டலிலோ மனிதன் உள்ளத்தை மகிழ்விப்பவையும் உற்சாகப்படுத்துபவையுமான எல்லா விதப் பொருள்களும் கேட்ட மாத்திரத்தில் கிடைக்கும். தன்வரையில் அவன் ஓரளவு கட்டுக்குள்பட்ட, மிதமான வாழ்வே வாழ்ந்தான். நிதானஸ்தன், நம்பகமானவன் என்று பெயர் பெற்றான். இந்த நற்பெயரின் உதவியால் மதிப்பு வாய்ந்த பெரிய மனிதர்கள் பலருடன் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்திக்கொண்டான். அவனது மதபக்தி அவனுக்கு விசேஷமாக உதவிற்று. ஒரு காலத்தில் தான் பணியாளாக வேலை செய்த அதே மாதாகோயிலில் ஞாயிறுதோறும் பிரார்த்தனைக் கூட்டத்தின் முன் வரிசையில் உட்காருவான். நாளடைவில் அதன் நடைமுறைகள் அவனுக்கு ஒரே யடியாகப் பழகிப் போயின. அப்புறம் சிலுவை கூட அவனுக்கு அச்சம் விளைக்கவோ, சென்ற காலத்தின் பயங்கரக் காட்சிகளை நினைவுக்குக் கொண்டு வரவோ இல்லை. ஆப்பிரிக்காவில் திருச்சபையாரின் கைங்கரியத்திற்காக அவன் பெருந்தொகைகள் தாராளமாக நன்கொடை வழங்கினான். அதே போல நாட்டன்பு மிகுந்த வேறு செயல்களுக்காகவும், புதிய போர்க் கப்பல் ஒன்று கட்டுவது உள்பட, நிறைய நன்கொடை அளித்

தான். நகர மக்கள் இந்தப் போர்க் கப்பல் தங்கள் சொந்தப் பணத்தால் கட்டப்பட வேண்டும் என்று விரும்பினார்கள். அதன் பயனாக, அதற்கு இந்த நகரின் பெயரையே சூட்டுவது என்று தீர்மானமாகியிருந்தது. மாதாகோயிலில் தாய்மார் தம் குழந்தைகளுக்கு அவனைச் சுட்டிக்காட்டுவார்கள். தந்தைமார் அவனுக்கு மரியாதையாக வழிவிட்டு ஒதுங்கி நிற்பார்கள். எல்லோரிலும் மதிப்புமிக்க சீமாட்டிகளோ, பக்தி ததும்பும் பார்வையை அவன்மீதிருந்து அகற்றுவதே இல்லை. சிறப்புயர்ந்த வீடுகளிலெல்லாம் அவன் வரவேற்று உபசரிக்கப்பட்டான். திருச்சபையாரின் அருள் தொண்டைப் பற்றியும், பிரிட்டனின் காலனிக் கொள்கை பற்றியும், கோழிக்கறி அடை தயாரிப்பதற்கான புத்தம் புதிய செய்முறை பற்றியும், பிரமஞானத்தில் கிளைத்திருக்கும் புதுப் போக்குகளைப்பற்றியும், தரையிலிருந்த படியே விமானங்களைச் செலுத்துவது பற்றியும், நகரத்தின் துப்புரவு ஏற்பாடுகளைப் பற்றியும் அங்கே அவர்கள் வார்த்தையாடுவார்கள். அடுத்த போரைக்குறித்து மற்றவர்களுடன் அவன் தர்க்கிப்பான். முடிவான வெற்றி லூஸிடியாவுக்கே என்பதும், அதன் சக்தி வெல்லற்கரியது என்பதும் அவன் தர்க்கிக்கிற தோரணையிலேயே சிறிதும் சந்தேகமறத் தொனிக்கும்.

அந்தக் கோடையில் வந்திருக்கும் நவநவமான ஆடையணிகளைப் பற்றிச் சீமாட்டிகளுடன் பெருந்தகைமையுடன் விவாதிப்பான். குட்டை ஸ்கர்ட்களும் மார்பு தெரியும் கவுன்களும் ஒழுக் கத்திற்குப் பெருத்த கேடு விளைக்கின்றன என்று அங்கலாய்ப்பான். குழந்தைகளுக்கோ, ஆப்பிரிக்கக் காட்டுமிராண்டிகளின் வாழ்க்கை யைப் பற்றி, திருச்சபையார் வெளியிட்டுள்ள துண்டுப் பிரசுரங்களில் தான் படித்தபடி, விவரிப்பான்.

விரும்பிய பொருள்களெல்லாம் அவனிட மிருந்தன; இன்மையே எதிலும் இல்லை. இத் தனை வசதிகளெல்லாம் கொண்ட இந்தப் பண்பாடு இதே காரணத்தினுல் அவனுக்குச் சலிப்பூட்டலாயிற்று. அவன் செயலான மனி தன், பணக்காரன் கூட. எனினும் தன்னைவிட எவ்வளவோ அதிகப் பணக்காரர்கள் பலர் இருப் பதை அவன் கண்டான். விரலைக்கூட அவர் கள் அசைப்பதில்லை, ஆயினும் லட்சக்கணக்கில் செலவிடுவது அவர்களுக்குத் தண்ணீர் பட்ட பாடாயிருந்தது. அவனே சாராயம் ஊற்றிக் கொடுக்கும் பணியாட்களும் பரிசாரகர்களும் தன்னை ஏமாற்றிச் சுரண்டிவிடாத படியும், பரி சாரகிகள் வாடிக்கைக்காரர்களின் விருப்பங் களை யெல்லாம் முகங்கோணுமல் நிறைவேற் றும் படியும் கண்காணிக்க வேண்டியிருந்தது.

ஒரு கண்ணிமைப்பில் ஆயிரக்கணக்கான மக்களை ஆணைக்கு உட்படுத்தும்படி அவ்வளவு அதிகாரம் வாய்ந்த தலைவர்களை அவன் அறிவான். அவனை யோ, ஹோட்டலுக்கு வெளியே, அரசாங்க விவகாரங்களில் ஏனென்று கேட்பாரில்லை. தலை சிறந்த அழகிகளில் எவளை வேண்டுமானு லும் அவன் விரும்பிய மாத்திரத்தில் பெற முடி யும். ஆனுல் ஒரே மாதிரியாக அவர்கள் எல் லோருமே உணர்ச்சி வேகமற்ற ஜடங்கள், சுவையற்றவர்கள்; எனவே விரைவிலேயே அவர்கள் தொடர்பு அவனுக்குச் சப்பென்று போய்விட்டது. ஆம், இத்தனை வசதிகள் எல் லாம் பொருந்திய இந்தப் பாழாய்ப் போன பண்பாடு அவனுக்குத் தெவிட்டிவிட்டது. இதி லும் விந்தை என்ன வென்றுல், நியாங்கீ ஆற்று மணலில் தான் காய்ந்த வயிற்றுடன் புரண்ட, அல்லது நட்சத்திரங்கள் ஒளிரும் ஆப்பிரிக்க வானத்தை நோக்கிய அந்தப் பழைய நாட்களை அவன் அடிக்கடி நினைவு கூர்ந்தான். பட்டுச் சொக்காய் அவனுக்குக் கரடு முரடாயிருப்ப தாகப் பட்டது. தனது கருந்தோலை அன்பு கத கதக்கக் கொஞ்சி வருடிய ஆப்பிரிக்க வெயிலை அவன் மிக அடிக்கடி நினைத்துக் கொண் டான்.

பின்னும் ஒரு முறை அவன் வாழ்வில் எதிர்பாரா மாறுதல் நிகழ்ந்தது. அதனுல் தனக்குக் கேடு விளேயும் என அவன் முதலில் கருதினுன். பின்புதான் அது நன்மையாகவே முடிந்ததைக் கண்டான். இது தெய்வ சித்தம். அவனன்றி ஓர் அணுவும் அசையாதல்லவா?

நகர அதிகாரியின் மனேவிக்கு அவன் மேல் பெரு மதிப்பு. அவனது நற்குணங்களே அவள் வியந்து பாராட்டினுள். இந்தப் பிரமுகன் வீட்டிற்கு அவன் அடிக்கடி வந்து போவது வழக்கம். நகர அனுதை விடுதிக்கும் ஜீவ ரட்சண சபைக்கும் அந்த அம்மாள்தான் தலேவி. இந்த ஸ்தாபனங்களில் எதையாவது ஒன்றைப் பற்றியே எப்பொழுது பார்த்தாலும் பேசிக் கொண்டிருப்பாள். பால் பெர்ன்ஹார்டுக்கோ, நடுத்தர வயதும் பருத்த உடலும் வாய்ந்த அவளது இந்தத் தொனதொனப்பு சீ யென்று போய்விட்டது. அவளுடைய மூன்று மூத்த மகள்கள் கலியாணமாகாதவர்கள். எலும்பும் தோலுமாய் ஒடிந்து விழுபவர்கள்போல் இருப் பார்கள். முட்டுக்கு மேல் ஸ்கர்ட்டும் மார்பு தெரியும்படியான கவுனும் ஒழுக்கத்தை எப் படிக் கெடுக்கின்றன என்பதுதான் அவர்கள் ஓயாது பேசும் விஷயம். இது பற்றி அவர்க

ளோடு உரையாடுவதும் பால் பெர்ன்ஹார் டுக்குச் சுவை தரவில்லை. நான்காவது கடைக் குட்டிப் பெண் விஷயமே வேறு. வயதுக்கு மீறிய வளர்ச்சியும் ரோஜாக் கன்னங்களும் கொண்டவள் இந்தச் சிறுமி. அவளோடு பேசப் பேச அவனுக்கு அலுக்காது. கறுப்பர்களின் வாழ்க்கை, அவர்கள் பசுக்களையும் பெண்களை யும் திருடும் விதம், ராட்சத எறும்புகள், மரங் களைச் சுற்றிப் பிணைந்து கொண்டு வெயில் காயும் பாம்புகள், இவற்றை யெல்லாம் பற்றி அவளுக்கு உற்சாகமாக வருணித்துச் சொல் லுவான். அவள் அவன் மடிமீது ஏறுவாள், அவனுடைய சுளை சுளையான வெண்பற்களைப் பார்த்து நகைப்பாள், விரல் நுனியால் அவனைத் தொட்டு, கறுப்பு ஒட்டிக் கொள் கிறதா என்று பார்ப்பாள். இந்தப் பழக்கங் கள் வெகு காலமாக விட்டுப் போயிருந்த படியால் இதெல்லாம் அவனுக்கு இன்பமா யிருக்கும். இருந்தாற் போலிருந்து நகர அதிகாரி யின் வீட்டில் அவன் வரவு திடீரெனத் தடை செய்யப்பட்டுவிட்டது. இது எப்படி நிகழ்ந்த தென்று அவனாலேயே சொல்ல முடியாது. தெருக்களில் தலைகாட்டவோ, மாதாகோயிலில் புகவோ கூட அவன் துணிய முடிய வில்லை. இரண்டு தடவை அவன் நீதிமன்றத்தில் ஆஜ ராக நேர்ந்தது. கிறிஸ்தவப் பாதிரிமார்கள்

இரண்டு முறை அவனை அழைத்து அவன் செயல்களுக்குச் சமாதானம் கூறும்படி கேட்டார்கள். சிறைச்சாலை, குளிர், நீர்த்த பீட்ரூட் சூப், இவற்றையெல்லாம் இதற்குள் அவன் அறவே மறந்திருந்தான். இப்போது மீண்டும் எங்கேனும் இந்தத் துன்பங்களை, ஒருகால் இன்னும் மோசமானவற்றை, அனுபவிக்க நேருமோ என்று நினைத்தபோதே அவன் நெஞ்சு பகீரென்றது. ஜனங்கள் வம்பு பேசுவார்களே என்ற பயத்தால் நகர அதிகாரி தனக்கு எதிராக முடிவான நடவடிக்கைகள் எடுக்கத் தயங்குவான் என்பதை அவன் அறிவான். எனினும் இந்த நகரத்தில் அவன் வாழ்க்கை நரகமாகி விட்டது.

கிட்டத்தட்ட இதே சமயத்தில் காலனிப் படையின் லெப்டினன்ட் ஒருவன் அவன் ஹோட்டலுக்கு அடிக்கடி வரலானான். இவன் அப்போது தான் ஆப்பிரிக்காவிலிருந்து திரும்பி வந்திருந்தான். நியாங்கீ பள்ளத்தாக்கில் கறுப்பர்கள் கிளர்ச்சி நடத்தியது, மாட்சிமை தங்கிய மன்னர் பிரானின் ஒரு சைனியம் முழுவதையும் அவர்கள் படுகொலை செய்தது ஆகிய நிகழ்ச்சிகள் பற்றிய எல்லா விவரங்களையும் பால் பெர்ன்ஹார்ட் இந்த லெப்டினன்ட் வாயிலாகக் கேட்டறிந்தான். தனது அன்புள்ள ஆசிரியரும் ஆன்மீக ஆலோசகருமான பெனிடிக்ட் பாதிரி

யார் கூடக் காட்டுமிராண்டிகளின் இரத்த வேட்கைக்குப் பலியாகிவிட்டார் என்று தெரிந்து கொண்டான். கறுப்பு மிருகங்களுக்குச் சூடான பதில் கொடுக்கும் பொருட்டு தண்டனைப் படைகள வேகமாகத் தயார் செய்யப்பட்டு வருகிறது எனவும், ஆறு துருப்புக் கப்பல்களும் இரண்டு போர்க்கப்பல்களும் புறப்படுவதற்கு ஆயத்தமாகத் துறைமுகத்துக்கு வெளியே நின்று கொண்டிருப்பதாகவும் கேள்விப்பட்டான். நகரத்திலோ, ஒரே கொந்தளிப்பு. பால் பெர்ன்ஹார்ட் நான்கு கதவுகளைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே பதுங்கிக் கிடந்தான். ஹோட்டலுக்கு வெளியில் ஜனக்கூட்டம் திரண்டதும், ஹோட்டல் ஜன்னல்கள் மீது கற்களை எறிந்ததும், தன்னை நாவில் நரம்பின்றித் திட்டியதும் அவன் காதில் விழுந்தன. குலை நடுக்கத்துடன் கேட்டுக் கொண்டிருந்தான். அவனுக்கு ஆத்திரம் பொங்கியது. இனத்தாரின் கிளர்ச்சிக்கு அவனு பொறுப்பாளி?

லெப்டினன்டுக்கு உயர் லெப்டினன்டைத் தெரியும், உயர் லெப்டினன்டுக்குத் தலைமை லெப்டினன்டைத் தெரியும், தலைமை லெப்டினன்டுக்கு தண்டனைப் படைத் தளகர்த்தனைத் தெரியும். கரும் பாவிகளைத் தேடிப் பிடிப்பதும், தண்டிப்பதும், பூண்டோடு ஒழிப்பதும் சுளுவாய் நிறைவேறுவதற்கு, நம்பகமான கறுப்

பன் ஒருவனது உதவி அவர்களுக்குத் தேவைப் பட்டது. எனவே பால் பெர்ன்ஹார்டைக் காணவும் அவனுடன் பேசவும் விரும்புவதாகத் தளகர்த்தன் தெரிவித்தான். பால் பெர்ன்ஹார் டுடன் பேசியது தளகர்த்தனுக்கு மிகுந்த திருப்தி அளித்தது. இதற்குச் சிறிது காலத் திற்கெல்லாம் பால் பெர்ன்ஹார்டைத் தனது ஸிவில் உதவி யதிகாரியாகவும் நெருங்கிய ஆலோசகனுகவும் அவன் நியமித்துவிட்டான். பால் பெர்ன்ஹார்ட், தனது ஹோட்டலை, சாராயம் ஊற்றிக் கொடுப்பவனுக்கு வருஷக் குத்தகைக்கு விட்டான்; வருஷக் குத்தகைத் தொகையை முன்பணமாக வாங்கிக்கொண்டான்; மேற்கொண்டு குத் தகைப் பணம் தவணை தவணையாகச் செலுத்து வதற்குக் கருரான நிபந்தனைகள் விதித்தான். சில நாட்களுக் கெல்லாம் பால் பெர்ன்ஹார்ட் கப்பலில் தன் அறையிலிருந்தான். புறப்பட விருந்த தண்டனைப் படைக்கு வெற்றி கூறியும் அதன் புனிதக் கடமை நலமே நிறைவேறக் கடவுள் அருள்வாராக என வாழ்த்தியும் துறை முகத்தில் நிறைந்திருந்த ஜனக்கூட்டம் சள சளத்தது அவனுக்குக் கேட்டது.

தெளிவுபடாத பல பல எண்ணங்களும் திட்டங்களும் பால் பெர்ன்ஹார்ட் மனத்தில் குமைந்தன. நகர அதிகாரிக்கும் சட்டம்,

ஒழுங்கு ஆகியவற்றின் பாதுகாவலர்களான, இறுக்கமாக உடுப்பணிந்த கனவான்களுக்கும் பயந்து தப்பி ஓடுகிறோமா, நாட்டன்பு நிறைந்த செயலில் பங்காற்ற விரும்புகிறோமா, இல்லை, வெள்ளையர்கள் அகாரணமாக இழைத்த கொடுமைகள், அவமானங்கள் எல்லாவற்றிற்கும் பழிதீர்த்துக்கொள்ள இனத்தாருக்கு உதவப் போகிறோமா என்று அவனுக்கே துலங்கவில்லை. பகல் நேரத்தில், படை அதிகாரிகளுடன் தேச வரைப்படத்தை ஆராய்வான். காரிய ரீதியான தோரணையில் அவன் விளக்குவதை அவர்கள் ஆழ்ந்த கவனத்துடன் கேட்பார்கள். ஸிவில் ஆலோசகர் வேலை அவனுக்கு மிக உவப்பாயிருந்தது. இரவில், சாராயத்தால் மயக்கங்கொண்டு, சிவப்பு மகமல் துணி விரித்த சோபாவில் உறங்குவான்; உயரமான எறும்புப் புற்றுகளையும், தன் இனத்தவரின் எலும்புக் கூடுகள் வெயிலால் வெளேரென்று வெளுத்து, தலைகீழாக அவற்றுக்கு மேல் தொங்குவதையும் பற்றிக் கனவு காண்பான்.

மஞ்சள் மணலார்ந்த ஆப்பிரிக்கக் கடற்கரையைக் கண்ணுற்றதுமே அவனுக்கு ஒரே இன்பக் கிளுகிளுப்பு உண்டாயிற்று. இயல்பாக எழுந்த ஆனந்தக் கூச்சலை அடக்கிக்கொள்வதே அரும்பாடாகிவிட்டது.

சென்ற காலம் திரும்புவது போலவும்,

ஆப்பிரிக்காவில் வெள்ளையர் தலைகாட்டுவதற்கு முன்னர் இருந்தது போன்றே, தான் இப்போதும் ஆவது போலவும் அவனுக்குத் தோன்றியது. தனது கடமை என்ன என்பதை இப்போது அவன் தெளிவாகப் புரிந்து கொண்டான். தன் இனத்தாருடன் இரகசியமாகப் போய்ச் சேர்ந்துகொள்வதென்றும் வெள்ளையர்கள் எல்லோரையும் நாசம் செய்வதென்றும் அவன் திட்டமிட்டான். அவர்களது நாகரிக நாட்டில் வாழ்ந்த வருடங்களில் அவர்களை நன்கு அறிந்து கொண்டிருந்தானல்லவா?

நியாங்கீ பள்ளத்தாக்கைக் கண்ணுற்றதுமே அவன் ஒரேயடியாக மலைத்துப்போனான். அழிபாட்டின் பயங்கரமான அடையாளங்களைத் துயரமும் ஏக்கமும் பொங்க நோக்கினான். துறைமுகம் நெருப்புண்டு தரைமட்டமாக்கப் பட்டிருந்தது; ஒரு காலத்தில் கிராமங்கள் இருந்த இடங்களில் எரிந்து கரிந்த கம்பங்களும், நெருப்பில் பொசுங்கிக் கழுதைப்புலிகளால் ஒட்டக் கறவப்பட்டிருந்த மனித எலும்புகளுமே காணப்பட்டன. பருத்தி விளைகளும் காப்பித் தோட்டங்களும் பாலை நிலங்களாகக் காட்சி தந்தன. அவன் அங்கிருந்த போதே மஞ்சள் மலை அடிவாரத்தில் போடத் தொடங்கியிருந்த இருப்புப் பாதை தகர்க்கப் பட்டிருந்தது. நீர்க் கிணறுகள் மணலால்

செம்மப்பட்டோ, நச்சுப் பூண்டுகளால் விஷ மாக்கப்பட்டோ இருந்தன. மேல் காலெல்லாம் அழுகிச் சொட்டும் காயங்களுடன், பயங்கர மாகத் தேய்ந்து மாய்ந்து போயிருந்த சுமார் இருபது வெள்ளையர் முள்புதர்களின் மறை விலிருந்து வெளிவந்தார்கள். ஒரு துண்டு மாமிசம் உண்டு, ஓரிரு மடக்கு சாராயம் குடித்ததுமே அவர்களில் ஆறு பெயர் உயிர் நீத்தனர். புதிதாக வந்த வெள்ளைப் படை யினர் பற்களை நெறு நெறுத்து, ஆண்டவனுக் கும் மாட்சிமை தங்கிய மன்னர் பிரானுக்கும் அபசாரம் இழைத்த கறுப்பர்களைக் கொடுமை யாகப் பழிவாங்குவோம் எனச் சபதம் புரிந்த போது பால் பெர்ன்ஹார்டுக்கு என்ன செய்வ தென்று விளங்கவில்லை.

## 16

தண்டனைப் படையினர் முதலாவதாக முகாம் அமைத்துக்கொள்வது அவசியமாயிருந் தது. அதன் பின்பே தப்பியோடிய கறுப்பு மிருகங்களை விரட்டிச் சென்று அவர்களைப் பூண்டோடு அழிக்கும் புனிதச் செயலைத் தொ டங்க முடியும். ஆப்பிரிக்காவின் பொசுக்கும் வெயிலிலோ வெள்ளைக்காரர்கள் உழைக்கவே இயலாதவர்களாகி விட்டார்கள். கைகால்களைக் கொஞ்சம் அசைத்தால் கூட அவர்களுக்குச்

சோர்வு உண்டாயிற்று. வெயில் தாக்கியதால் பலர் இறந்து விழுந்தார்கள், பலருக்கு மூளை பிசகி விட்டது, வேறு பலர் சுரத்தாலும் இரத்தக் கடுப்பாலும் மடிந்தார்கள். கையில் அகப்படும் கறுப்பர்களை யெல்லாம் வெட்டி யெறிவதில் வெள்ளையர்களுக்கு எவ்வளவோ விருப்பந்தான். கரும்பாவிகள் அத்தனை பேரை யும் கொன்று தீர்க்க வேண்டு மென்று ஒவ் வொரு வெள்ளையனுக்கும் அடங்காத வேட்கை தான். இருந்தபோதிலும் கறுப்பு அடிமைகள் இன்றியமையாது தேவைப்பட்ட படியால் முத லில் பிடிபட்ட கைதிகளை அவ்வாறு கொல்ல முடியாது போயிற்று. ஆம், குழந்தைகளை மட் டும் தவளைக் குஞ்சுகளைப் போலத் துப்பாக்கிச் சனியன்களில் குத்திக் குத்திக் கோத்து ஆற்றிலே எறிந்து விட்டார்கள். மாதர்களை அவர்கள் அசைய முடியாமல் விறைத்துப் போகும்வரை பலாத்காரம் செய்து, பின்னர் அவர்கள் முலைகளை வெட்டியெறிந்து, வயிறு களைக் குத்திக் கிழித்தார்கள். கிழவர்களும் கிழவியர்களும் துப்பாக்கிக் குந்தாவாலேயே அடித்துக் கொல்லப்பட்டனர். ஒரேயடியாக அருவருக்கத்தக்கவர்களா யிருந்த படியால் இவர்களைக் கையால் தொட எவனும் விரும்ப வில்லை. பலமுள்ள கறுப்பு இளைஞர்களை இரண்டிரண்டு, மூன்று மூன்று பேராகச்

சங்கிலிகளால் பிணைத்து, இடையிடையே சிறு ஆணிகள் வைத்துப் பின்னியிருந்த சவுக்குகளால் சுளீர் சுளீரென அடித்து, இரக்கமின்றி வேலை வாங்கினார்கள். அப்போதும் சில கறுப்பர்கள் ஒரே முரட்டுப் பிடிவாதம் காட்டினார்கள். உடலமைப்பை நன்கு அறிந்த, நாகரிக மனிதனின் கற்பனையில் மட்டுமே உதித்திருக்கக் கூடிய பண்பட்ட சித்திரவதைகள் எல்லாம் அவர்கள் மீது பிரயோகிக்கப்பட்டன. அவர்களோ எதற்கும் மசியவில்லை, விரலை அசைக்கக் கூட மறுத்துவிட்டார்கள். இந்தக் கறுப்பர்கள் தூண்களில் தலைகீழாகக் கட்டப்பட்டார்கள், மரங்களில் கட்டித் தொங்கவிடப்பட்டார்கள், அல்லது முதலில் வாள்களால் வெட்டிச் சிதைக்கப்பட்டு, உயிரோடிருக்கையிலேயே இடுப்பு வரை மணலில் புதைக்கப்பட்டார்கள். பின்பு கொசுக்களும், ஈக்களும், எறும்புகளும் மற்றப் பூச்சி புழுக்களும் அவர்கள் உடல்களை அணு அணுவாக அரித்துத் தீர்த்தன. இவ்வளவெல்லாம் பட்டும் இந்தப் பாவ ஜென்மங்கள் கத்தவில்லை; கதறவில்லை; கருணை காட்டும்படி கெஞ்சி இரக்க வில்லை. பற்களை இறுகக் கெட்டித்துக் கொண்டு, சித்திரவதை செய்பவர்களை மௌனமாக உறுத்து நோக்கினார்கள். அவர்களுடைய பார்வையைக் கண்டாலே குலைபதறி மயிர் குத்திட்டு நின்றது.

விந்தை என்ன வென்றால் இந்த அஞ்ஞானிகளில் பலர் பெனிடிக்ட் பாதிரியாரின் போதனைகளை அறிந்தவர்கள்; ஞானஸ்நானம் செய்விக்கப்பட்டவர்கள்; புனித ஐக்கியத்தில் கலந்துகொண்டவர்கள்; ஒரு காலத்தில் வெள்ளை எஜமானர்களுக்குப் பணிவாகத் தொண்டு புரிந்தவர்கள். இவர்களுடைய கரிய ஆன்மாக்களைச் சைத்தான் மீண்டும் ஆட்கொண்டு, பெனிடிக்ட் பாதிரியார் அவ்வளவு வளமையாக விதைத்திருந்த இயேசு நாதரின் போதனைகளைத் துவைத்து, நசுக்கி மண்ணுக்கிவிட்டான். மிக நல்ல நோக்கங்களால் தூண்டப்பட்டு, பால் பெர்ன்ஹார்ட் இவர்களுக்கு அருகே செல்லும் போதுதான் இந்தப் பாழாய்ப்போன கறுப்பு ஜென்மங்கள் பேசத் தொடங்கும். அப்போது அவற்றின் பாவ வாய்களிலிருந்து பொழியும் தெய்வநிந்தனையையும் வசவுகளையும் தாங்க முடியாமல் பால் பெர்ன்ஹார்ட் காதுகளைக் கைகளால் பொத்திக்கொண்டு ஓடியே போய்த் தன் அறைக்குள் பதுங்கிவிடுவான்.

தனது நல்ல நோக்கங்கள் இங்கே செல்லுபடியாகா என்பதைப் பால் பெர்ன்ஹார்ட் நாளடைவில் அறிந்துகொண்டான். தற்போதைய நிலைமைகளில் நாகரிக முறைகளினாலும் ஆய்ந்தோய்ந்து வகுக்கப்பட்ட உபாயங்களினாலும் கறுப்பர்களை விடுவிப்பதென்பது அசாத்தியம்

மட்டுமல்ல; சிந்திக்கவே முடியாதது; இவற்றால் எவ்விதப் பயனும் விளையாது என்று அவனுக்குத் தீர்மானமாகப் பட்டது. நாகரிகச் சமூகத்தில் வாழ்ந்த வருடங்களில் எந்தத் தர்க்கம் பால் பெர்ன்ஹார்டுக்கு முற்றிலும் பழகிப் போயிருந்ததோ, அதைப் பற்றிய அறிவு தானும் இந்தப் புழுக்களுக்குத் துளிக்கூடக் கிடையாது. அரசாங்க ஆட்சியைப் பற்றிய ஞானமோ, சட்டம் பற்றிய உணர்வோ, ஒழுங்கைப் பற்றிய எண்ணமோ இவர்களுக்கு லவலேசமும் இல்லை. எந்த நாகரிகத்துக்கும் அடிப்படை இவை தாமே! ஆடு மாடுகளைப் போல,வாழ்விற்கான இயல்பூக்கம் ஒன்றுதான் இவர்களை இயக்குவது. தங்களைவிட எவ்வளவோ வலிமை மிகுந்த பகைவர்களைத் தங்கள் அதிக எண்ணிக்கை யொன்றினாலேயே வென்றுவிடலாம் என்று நினைக்கிறார்கள். கட்டுப்பாடு, ராஜதந்திரம் இவற்றின் அறிகுறியே இவர்களிடம் காணப் படவில்லை. எல்லையற்ற வெறுப்பு, இயல்பான தந்திரம், குருட்டுத்தனமான உணர்ச்சிக் கொந்தளிப்பு, இவை மட்டுமே இவர்களிடம் உள்ளவை. நவீனப் போர்முறை, யுத்ததந்திரம், பீரங்கிக் குழாய்கள், இயந்திரத் துப்பாக்கிகள் ஆகியவற்றுக்கெதிரே, பாறைமேல் மோதும் அலைபோல மோதிச் சிதறிவிடுகின்றன இவை யெல்லாம்.

எண்ணமிட்ட பால் பெர்ன் ஹார்ட், மாட்சிமை தங்கிய மன்னர் மன்னரது படைவீரர்களும் அதிகாரிகளும் தனக்கு எவ்வளவு வேற்றுராக இருந்தார்களோ அதைவிட அதிகமாகக் கறுப்பர்கள் அன்னியராகி விட்டனர் என்பதை உணர்ந்தான். இப்போதோ, அவனும் மாட்சிமை தங்கிய மன்னர் மன்னரின் படை அதிகாரிகளுக்குரிய உடுப்பு அணிந்து, இடையில் உடைவாளும் இடுப்பு வாரில் ரிவால்வருமாக இலகினுன். காலேயில் புதிய உள்ளாடைகள் அணிந்தான், வாசனைச் சோப்பினுல் முகங் கழுவிக்கொண்டான், தலே மயிரில் பொமேட் தடவி, நடு வகிடெடுத்து வாரிக்கொண்டான். ஒரு வெள்ளேக்கார வீரன் அவனது ஆர்டர்லியாகப் பணி புரிந்தான். இரண்டு கறுப்புப் பையன்கள் வேறு அவனது மலச் சட்டியைக் காலி செய்து கழுவி வைப்பதும், பூட்சுகளுக்குப் பாலிஷ் போடுவதும், இரவில் அவன் அறை வாயிலில் உறங்குவதுமாகக் குற்றேவல் செய்து வந்தனர்.

## 17

ஆறு கலகக்கார இனத்தினர், மக்கள், ஆடுமாடுகள், சொத்துக்கள், இனத் தலேவர்கள் சகிதம் மஞ்சள் மலேயின் அருகே

யிருந்த பள்ளத்தாக்கில் முற்றுகை யிடப்பட்டிருந்தனர். அந்தப் பேதைகளோ, உயிர்ப் பகைவர்களான வெள்ளையர்களைத் தாங்களே சுற்றி வளைத்துக்கொண்டுவிட்டதாக அறியாமையினால் கற்பனை செய்துகொண்டு, இரவெல்லாம் நெகிடிகள் மூட்டி அவற்றைச் சுற்றி வந்து வெற்றி நடனம் ஆடினார்கள். முக்கியப் படைகளுடன் பால் பெர்ன்ஹார்ட் இருப்பு வளையம் போலத் தங்களைச் சூழ்ந்து நெருக்கிவிட்டான், இனித் தாங்கள் உயிர் தப்ப வழியே இல்லை என்பதை அவர்கள் அறிந்துகொள்ளவில்லை.

பால் பெர்ன்ஹார்ட் அவசரப்படாமல் நிதானமாகவே செயல் நடத்தினான். தனது நாட்டினர் எத்தகைய நிலைமையில் சிக்கியிருக்கிறார்கள் என்பதைச் சீர்தூக்கி ஆய்ந்து பார்த்தான். தண்டனைப் படைத் தளகர்த்தன் இரத்தக் கடுப்பால் இறந்து போய்விட்ட படியால் அவனே இப்போது தளகர்த்தன். எதிர்ப் பட்டிருக்கும் அபாயத்தைப்பற்றி எவனாவது ஒரு கைதி மூலமாகக் கறுப்பர்களை எச்சரித்து, இரகசிய மலைப்பாதைகள் வழியாக அவர்கள் தப்பியோடச் சந்தர்ப்பமளிப்பது அவனுக்கு எளிதே. எனினும் அவன் அவ்வாறு செய்யவில்லை. இங்கே, போர்க்களத்திலே கூட, அவன் வசிப்பதற்காக விசாலமான கித்தான் கூடாரம்

அடிக்கப்பட்டிருந்தது, சுவையான பச்சிளம் பன்றிக் கறியும் பதனிட்ட பழங்களும் சற்று முன்புதான் உண்டு, ரெனிஷ் ஓயின் ஒரு பாட்டில் குடித்திருந்தான். சிங்கத் தோலில் படுத்து, கால்மேல் கால் போட்டவாறு, பூட்சுக் குதி முள்கள் ஒன்றின் மேல் ஒன்று படும்போது எழும் இனிய ஒலியை அனுபவித்துக் கொண்டிருந்தான். அந்த நேரத்தில் முகாமிலிருந்து திடீரென வந்த அஞ்சல்காரன், காலஞ்சென்ற தளகர்த்தரின் ஸ்தானத்தில், தண்டனைப் படைத் தளகர்த்தனாகவும் கைப்பற்றப்படும் பிரதேசத்தின் தாற்காலிக கவர்னராகவும் பால் பெர்ன்ஹார்டை நியமனம் செய்ய மாட்சிமை தங்கிய மன்னர் மன்னர் திருவுளம் கொண்டார் என்ற அறிவிப்பைக் கொணர்ந்தான். இந்த அறிவிப்புடன் அவனது சென்றகாலச் சேவைகளின் பொருட்டு வழங்கப்பட்ட பதக்கமும் இருந்தது. கணப் போதும் தாமதியாமல் தனது வெள்ளை உடுப்பில் இந்தப் பதக்கத்தை அணிந்துகொண்டான் பால் பெர்ன்ஹார்ட். அணிந்த நொடியிலேயே அவனுடைய ஏக்கம் நிறைந்த எண்ணங்களும் ஐயங்களும் மாயமாய் மறைந்து விட்டன. அவனது வருங்காலம் புகழொளி வீச, கறுப்பர்கள் கனவிலும் அறிந்திராத செல்வமும் விருதுகளும் கொழிக்க, அவன் முன் விளங்கியது. நிமிர்ந்த தலையுடன்

கூடாரத்தை விட்டு வெளியே வந்து, குதிரையைக் கொண்டுவரச் செய்து, அதன்மீது ஆரோகணித்துக் கொண்டு, சமிக்கை செய்தான். தாக்குதல் தொடங்கியது — மரணத்தின் அந்த இரத்தக் களரியில் ஆறு இனங்கள் மாண்டொழிந்தன.

மறுநாள் மாலை, பால் பெர்ன்ஹார்ட் தன் கூடாரத்துக்குத் திரும்பி வந்தான். வழி நெடுகப் பாதைகளிலும் புதர்களிலும், கொலையுண்டவர்களும் குற்றுயிரானவர்களு மாகிய கறுப்பர்கள் குவியல் குவியலாய்ச் சிதறிக் கிடந்தனர். ஊறி உப்பிய உடல்கள் ஆற்றில் மிதந்து சென்றன. அஸ்தமன சூரியனின் ஒளியில் ஆற்று நீர் ஒரே குருதி வெள்ளமாய்க் காட்சி யளித்தது. மாட்சிமை தங்கிய மன்னர் மன்னரின் படைவீரர்கள், மேலெல்லாம் இரத்தம் தெளித்த கறையுடன், சிறைப்பட்டவர்களைக் கூட்டங் கூட்டமாக ஓட்டி வந்த வண்ணமா யிருந்தனர். இனத்தலைவர்கள் அறுவரையும் சித்திரவதை செய்வதற்காகத் தளகர்த்தன் இருப்பிடத்திற்கு எதிரே யிருந்த மேட்டு நிலத்தில் ஆறு கம்பங்கள் நாட்டப்பட்டு விட்டன. துப்பாக்கிக் குண்டுகளின் வெடியோசை, இறப்பவர்களின் முனகல்

கள், காயமடைந்தவர்களின் கதறல்கள், இரத்த நாற்றத்தால் கிளர்ச்சியுற்ற கழுதைப்புலிகள், நரிகள் ஆகியவற்றின் ஊளைகள், இவற்ருல் தரை அதிர்ந்தது.

கித்தான் நாற்காலியில் கணநேரம் சாய்ந்து, வானத்தை—பிரகாசமான பெரிய நட்சத்திரங்கள் ஒளிரும் ஆப்பிரிக்கக் கரு வானத்தை—நோக்கிஞன் பால் பெர்ன்ஹார்ட். அவனுக்குக் களைப்பே தோன்றவில்லை. சண்டையின் கோலாகலத்தாலும் களேபரத்தாலும், இவை எல்லாவற்றையும் விட அதிகமாக, கர்வத்திஞலும், சற்றும் எதிர்பாராதபடி தனக்கு அளிக்கப்பட்ட அதிகாரத்திஞலும், தலைதான் கொஞ்சம் கிறுகிறுத்தது. அவன் எழுந்தான். ஒரு கிளாஸ் சாராயம் பருகிஞன். பின்பு ஜன்னலருகே சென்ருன். சிறைப்பட்டவர்களிலிருந்து அவனுக்கென விசேஷமாகப் பொறுக்கப்பட்ட பன்னிரண்டு பெண்கள், அடுத்த அறையில் கசமுச வென்று இரகசியம் பேசிக் கொண்டிருந்தார்கள். சங்கிலிகளால் பிணைக்கப்பட்ட ஆறு கறுப்பர்களை மேட்டிலிருந்த கம்பங்களை நோக்கிப் படைவீரர்கள் ஓட்டிப் போஞர்கள். பாண்டு வாத்தியக் கோஷ்டி அரசவாழ்த்து கீதத்தை முழக்கியது. தொலையில் எரிந்த நெருப்பின் பிரகாசம் முகத்

தில் பட்டு ஒளிர, இராணுவ முறைப்படி கால்களைச் சேர்த்து, வலக்கை இராணுவத் தொப்பியின் விளிம்பில் படும்படி உயர்த்தியவாறு, திறந்த ஜன்னல் அருகே விறைப்பாக நின்றான் பால் பெர்ன்ஹார்ட்.



## வாலெந்தின் கத்தாயெவ்

*வாலெந்தின் கத்தாயெவ்(பிறப்பு 1897)— ருஷ்ய சோவியத் எழுத்தாளர். மக்களால் மிக மிக விரும்பப்படும் சோவியத் உரை நடை ஆசிரியர்களில் கத்தாயெவ் ஒருவர். அவருடைய இலக்கியத் தொண்டைப் பாராட்டி, மிக உயர்ந்த அரசாங்க கௌரவமான லெனின் விருது அவருக்கு வழங்கப்பட்டது.*

*''தனியே ஒளிரும் வெண் கப்பற்பாய்''*

என்ற அவரது நவீனம் மிகப் பிரசித்தி பெற்றது. புரட்சி நிகழ்ச்சிகள் என்ற உக்கிரமான கடற்சுழலில் அகப்பட்டுக்கொண்ட கவ்ரீக், பேத்யா என்னும் இரண்டு சிறுவர்களைப் பற்றியது இந்தக் கதை. ''குழந்தைகள் சம்பந்தமான சுவை ததும்பும் அழகிய நவீனம்'' என்று எழுத்தாளர் அலெக்சேய் தல்ஸ்த்தோய் இதைப் பாராட்டியிருக்கிறார். ''காலமே, முன்னேறு'', ''நான் உழைப்பாளி மக்களின் மைந்தன்'', ''சோவியத் அரசாட்சிக்காக'' முதலிய அவரது நவீனங்களும் புகழ் பெற்றவை.

*1941-1945* ஆண்டுகளில் பாசிஸத்துக்கு எதிராக சோவியத் மக்கள் நடத்திய மாபெரும் தேசபக்திப் போரின் போது கத்தாயெவ் போர் முனையில் பணி புரிந்தார். போர் பற்றிய அவரது கோவை சோவியத் இலக்கியத்தின் தலைசிறந்த எழுத்தோவியங்களில் ஒன்றாகும்.

கத்தாயெவின் போர்க் கதைகளில் ஒன்றான ''கொடி'' என்பது இந்தத் தொகுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

# கொடி

தீவிற்குள் வெகு தொலைவில் சில கற் பலகைக் கூரைகள் தென்பட்டன. அவற்றுக்கு மேலே கம்பீரமாக விளங்கியது மாதாகோயி லின் குறுகிய முக்கோண வடிவான கூர்ங் கோபுரம். கோபுரத்தின் உச்சியிலிருந்த கருஞ் சிலுவை, மப்புப் போட்ட வானின் பின்னணி யில் துலக்கமாகத் தெரிந்தது.

கற்பாங்கான கடற்கரை நிர்ஜனமாகக் காணப்பட்டது. கடலோ, நாற்புறமும் நூற்றுக் கணக்கான மைல்களுக்கு வெறுமையா யிருப் பது போலத் தோன்றியது. ஆனால் உண்மை யில் அப்படி யில்லை.

சிற்சில சமயம், கடலில் நெடுந்தூரத்தில் போர்க் கப்பல் அல்லது துருப்புக் கப்பலின் மங்கிய நிழலுரு புலப்படும். அந்தக் கணத் திலேயே, கனவில் நடப்பது போல, கதைகளில் நிகழ்வது போல, ஒரு கற்பாறை பிலவாயைத்

திறந்து கொண்டு சந்தடியின்றி, நாசூக்காக ஒரு புறம் விலகும். பிலவாயின் அடியிலிருந்து மூன்று தொலைதாக்குப் பீரங்கிகள் சர்ரென்று மேலே எழும்பும். கடல் மட்டம் வரை வந்த பின் அவை முன்னே நகர்ந்து நிற்கும். அவற்றின் குழல் வாய்கள் எதிரிக் கப்பலின் போக்குக்கேற்ப, காந்தத்தால் கவரப்பட்டவை போலத் திரும்பும். கனத்த உருக்கு மரைகளின் மேல் பிசுபிசுப்பான பச்சை எண்ணெய் பளபளக்கும்.

குத்துப் பாறைக்குள் ஆழத்தில் அமைக்கப்பட்டிருந்த காப்பரண்களில் காவற்படையினர் தளவாடங்களுடன் வைக்கப்படிருந்தனர். துருப்புக்களின் இருப்பிடத்திலிருந்து ஒட்டுப் பலகைத் தடுப்பால் வேறுபடுத்தப் பட்டிருந்த குறுகிய ஒதுக்கிடத்தில் காவற்படைத் தலைவரும், கட்சிக் கமிஸாரும் வசித்து வந்தனர்.

அவர்கள் இருவரும், சுவர்களுக்குள் அகழப்பட்டிருந்த படுக்கை யிடங்களில் அமர்ந்திருந்தனர். அவர்களுக்கு முன்பு சிறிய மேஜையிருந்தது. மேஜை மேல் எரிந்து கொண்டிருந்த மின்சார விளக்கு காற்றுப்போக்கியின் அலகுகளில் மின்னல் போலப் பிரதிபலித்துக் கொண்டிருந்தது. வறண்ட காற்று, காகிதங்களைச் சலசலக்கச் செய்து கொண்டிருந்தது. குட்டைப் பென்சில் ஒன்று கடல் வரைப்படத்

தின் மீது முன்னும் பின்னுமாக உருண்டு கொண்டிருந்தது.

வரைப்படத்தில் எட்டாவது இலக்கமிட்ட சதுரத்தில் பகைவர்களின் நாசகாரிக் கப்பல் ஒன்று காணப்பட்டதாக அப்போதுதான் தலைவருக்குத் தகவல் கிடைத்திருந்தது. அவர் தலையை அசைத்தார்.

கண்களைக் குருடாக்கும் ஆரஞ்சு நிற நெருப்புப் பிழம்புகள் பீரங்கிகளிலிருந்து கிளம்பின. ஒன்றன்பின் ஒன்ருக மூன்று வெடியதிர்ச்சிகள் கடலையும் பாறைகளையும் கிடுகிடுக்கச் செய்தன. சலவைக் கல் மீது உருக்குப் பந்துகள் உருள்வது போன்ற ஓசையுடன் பீரங்கிக் குண்டுகள் விர்ரென்று பாய்ந்து நெடுந் தொலை சென்றன. சில விநாடிகளுக்கு அப்பால் மூன்று வெடிகளின் ஒலி கேட்டது.

படைத் தலைவரும் கமிஸாரும் மௌனமாக ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர். சொற்களுக்குத் தேவையே இல்லை. தீவு பகைவர்களால் முற்றுகையிடப்பட்டிருக்கிறது என்பது அவர்களுக்குத் தெரிந்ததுதான். ஒரு மாதத்துக்கு மேலாகவே, கப்பல்களிலிருந்தும் விமானங்களிலிருந்தும் வந்த இடைவிடாத தாக்கைச் சமாளித்தவாறு அஞ்சாநெஞ்சர்களான ஒரு சில வீரர்கள் தீவைப் பாதுகாத்து வந்தார்கள். குத்துப்பாறைகள் மீது குண்டுமாரி

தணியாத உக்கிரத்துடன் பொழிந்த வண்ணமாயிருந்தது. டார்ப்பிடோ படகுகளும் துருப்புப் படகுகளும் நாற்புறமும் கடலில் வேவு பார்த்துக் கொண்டிருந்தன. எதிரிகள் திடீரென்று தாக்கித் தீவைக் கைப்பற்றப் பலமுறை முயன்ருர்கள். ஆனால் கருங்கற்பாறைகள் அசையாது எதிர்த்து நின்றன. பகைவர்கள் மீண்டும் மீண்டும் கடலில் நெடுந்தூரம் பின்வாங்கிச் சென்று, படைகளை மறுபடி அணிவகுத்து, இன்னொரு முறை தாக்குவார்கள். தற்காப்பில் எங்காவது பலவீனமான இடைவெளி தென்படாதா என்று தேடுவார்கள், ஆனால் அத்தகைய இடுக்கு எதுவும் அவர்களுக்குக் கிட்டாது.

இப்படியே நாட்கள் சென்றன.

இதற்கிடையே கோட்டையில் யுத்த தளவாடங்களும் உணவுப் பொருள்களும் குறைந்து கொண்டு போயின. தலைவரும் கமிஸாரும் தேவைப் பொருள்களை அதிக காலத்திற்கு நீடிக்கச் செய்யும் பொருட்டு மணிக் கணக்காக யோசனை செய்து எல்லாவிதமான வழிகளையும் தேடிப் பார்த்து விட்டார்கள். ஆனால் பொருள்கள் காலியாகிக்கொண்டு போயின. முடிவு நெருங்கிக் கொண்டிருந்தது.

''அப்புறம்?'' என்ருர் கமிஸார், கடைசியில்.

''அப்புறம் என்ன? அவ்வளவுதான்'' என்ருர் படைத் தலைவர்.

''அப்படியானல் நாட்குறிப்பு எழுது.''

படைத் தலைவர் நிதானமாக நாட்குறிப் புப் புத்தகத்தைத் திறந்தார். கடிகாரத்தைப் பார்த்தார். பின்பு தெளிவான கையெழுத்தில் பின்வருமாறு எழுதிஞர்:

''அக்டோபர் 20. இன்று காலை முதல் எல்லாப் பீரங்கிகளாலும் சுட்டோம். பிற் பகல் 17.45க்குக் கடைசிக் குண்டு சுடப்பட் டது. மேற்கொண்டு குண்டுகளே இல்லை. இன் னும் ஒரு நாளைக்கு உணவு இருக்கிறது.''

தலைவர் குறிப்புப் புத்தகத்தை மூடிஞர், சிறிது நேரம் அதை உள்ளங்கையில் எடை பார்ப்பது போலப் பிடித்திருந்தார், பின்பு அலமாரியில் வைத்தார்.

''அந்த வேலை முடிந்தது, கமிஸார்'' என்று வறண்ட முகத்துடன் கூறிஞர்.

யாரோ கதவைத் தட்டிஞர்கள்.

''உள்ளே வாருங்கள்.''

பளபளப்பான கோட்டு நனைந்து சொட்ட ஒரு மாலுமி அறைக்குள் வந்து, அலுமினியக் குழல் ஒன்றை மேஜைமேல் வைத்தான்.

''செய்தியா?''

''ஆம்.''

''யார் போட்டது?''

''ஜெர்மானியப் போர் விமானம்.''

படைத் தலைவர் குழல் மூடியைத் திருகித் திறந்து அதற்குள் இரண்டு விரல்களை நுழைத்து ஒரு காகிதச் சுருளை வெளியில் எடுத்தார். அதைப் படித்ததும் அவர் முகம் கடுத்தது.

எண்ணெய்க் காகிதத்தில் பச்சை மையினால் தெளிவான, கொட்டை எழுத்துக்களில், தப்புந்தவறுமான ருஷ்ய மொழியில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

''சோவியத் கோட்டைக்கும் பீரங்கிப் படைக்கும் தலைவருக்கு. நீங்கள் முற்றுகையிடப்பட்டிருக்கிறீர்கள். உங்களிடம் மேற்கொண்டு போர்த் தளவாடங்களோ உணவோ இல்லை. அனாவசியமான இரத்தம் சிந்தலைத் தடுக்கும் பொருட்டு நீங்கள் பின்வரும் நிபந்தனைகளின் பேரில் உங்களை ஒப்புக் கொடுக்க வேண்டும் என்று யோசனை கூறுகிறேன்: தலைமை அதிகாரியும் மற்ற அதிகாரிகளும் உட்பட, கோட்டையின் காவற்படையினர் அனைவரும் பீரங்கிகளை நல்ல நிலைமையில் விட்டுவிட்டு, மாதாகோயிலின் அருகிலுள்ள மைதானத்துக்கு நிராயுதபாணிகளாகச் சென்று, அங்கே சரணடைய வேண்டும். மத்திய ஐரோப்பிய நேரப்படி காலை சரியாக 6 மணிக்கு, மாதாகோயிலின் கூர்ங் கோபுரத்தின் மீது வெள்ளைக்

கொடி பறக்கவிடப்பட வேண்டும். இவ்வாறு செய்தால் உங்களுக்கு உயிர்ப்பிச்சை அளிப்பதாக உறுதிகூறுகிறேன். தவறினுல் மரணம்.

ஜெர்மானியக் கரையிறங்கு படைத் தலைவர்,
ரியர் அட்மிரல் வான் எவெர்ஷார்ப்''

சரணுகதி நிபந்தனைகளைத் தலைவர் கமிஸாரிடம் கொடுத்தார். அவர் அவற்றைப் படித்துவிட்டு மாலுமியிடம், ''சரி, நீங்கள் போகலாம்'' என்ருர்.

மாலுமி வெளியே சென்ருன்.

''அவர்களுக்குக் கூர்ங் கோபுரத்தின் மேல் கொடி பறப்பதைப் பார்க்க வேண்டுமாம்'' என்று சிந்தனையுடன் சொன்னுர் தலைவர்.

''ஆம்'' என்ருர் கமிஸார்.

தலைவர் மேல்கோட்டை அணிந்து கொண்டே, ''அவர்கள் கட்டாயம் பார்ப்பார்கள். நீ என்ன நினைக்கிருய், கமிஸார், அவர்களுக்கு அது தென்படுமா? அவர்கள் தவருமல் அதைப் பார்த்தாக வேண்டும். எவ்வளவு முடியுமோ அவ்வளவு பெரிதாக இருக்க வேண்டும் கொடி. நமக்குப் போதுமான நேரம் இருக்கிறதா?'' என்று கேட்டார்.

குல்லாயைத் தேடியவாறே, ''இருக்கிறது''

என்று பதிலளித்தார் கமிஸார். ''இரவு முழுவதும் கிடக்கிறதே. தயாரித்துவிடுவோம். வீரர்கள் கடுமையாக உழைப்பார்கள். கொடி பிரம்மாண்டமா யிருக்கும் என்று உறுதி கூறுகிறேன்.''

தலைவரும் கமிஸாரும் வாழ்க்கையில் முதன் முறையாக ஒருவரை யொருவர் மார்புறத் தழுவிக்கொண்டார்கள். மறு முறை இதற்கு வாய்ப்புக் கிடைக்காது என்பது அவர்களுக்குத் தெரியும். எனவே அவர்கள் அவசர அவசரமாக, உணர்ச்சிப் பெருக்குடன் ஒருவரை யொருவர் அணைத்து முத்தமிட்டார்கள்.

கமிஸார் வீரர்களின் இருக்கைக்குள் போய், சிறு மேஜை மேலிருந்த லெனின் சிலையை நகர்த்தி அதன் கீழிருந்து சிவப்பு வெல்வெட்டு விரிப்பை எடுத்துக்கொண்டார். பிறகு முக்காலி மீது ஏறி, கோஷம் பொறித்த சிவப்புப் பாவட்டாவை அவிழ்த்தார்.

காவற்படை வீரர்கள் எல்லோரும் இரவு முழுவதும் கொடி தயாரிப்பதில் முனைந்திருந்தனர். தரை கொள்ளாதபடி பிரம்மாண்டமாயிருந்தது கொடி. கப்பல் பாய் தைக்கும் ஊசிகளில் மாலுமிகளுக்குரிய முரட்டு நூலைக் கோத்து, வீரர்களின் இராணுவ டிரங்க் பெட்டிகளிலிருந்த ஒவ்வொரு துண்டுத் துணியையும் ஒட்டுப் போட்டுத் தைத்தனர்.

பொழுது புலர்வதற்குச் சற்று முன்பு, சுமார் ஆறு துப்பட்டிகள் அளவான கொடி தயாராகிவிட்டது.

மாலுமிகள் கடைசித் தடவையாக முக க்ஷவரம் செய்துகொண்டு, தூய சட்டைகளை அணிந்துகொண்டார்கள். பின்பு, கழுத்துக்களி லிருந்து ஸப் மெஷின்-கன்கள் தொங்க, பைக ளெல்லாம் தோட்டாக்களால் நிறைந்து பிதுங்க, ஒருவர்பின் ஒருவராக நிலவறைக் கதவைத் திறந்துகொண்டு மேலே ஏறிச் சென்றார்கள்.

பலபல வென்று விடியும் தறுவாயில் ஜெர்மானியக் கப்பலின் பாரா அதிகாரி, அட் மிரல் எவெர்ஷார்ப்பின் அறைக் கதவைத் தட் டினன். எவெர்ஷார்ப் முழு இராணுவ உடை அணிந்து, கட்டிலில் படுத்திருந்தான். கதவு தட்டிய சத்தம் கேட்டதும் அவன் எழுந்து கழுவு தொட்டியருகே சென்று கண்ணுடியில் தன்னைச் சரி பார்த்துக்கொண்டு, முகத்தில் ஓடிகொலோன் தடவிக்கொண்டான். அதன் பின்பே அவன் பாரா அதிகாரியை உள்ளே வர அனுமதித்தான். அதிகாரி ஒரே கிளர்ச்சியுடன் இருந்தான். சலாம் செய்கையில் அவனுக்கு மூச்சுத் திணறியது.

''மாதாகோயில் மேல் கொடி பறக்கிற தா?'' என்று கேட்டான் எவெர்ஷார்ப்.

''ஆம். பகைவர்கள் சரணடைகிறார்கள்.''

''ரொம்ப நல்லது. நீர் அருமையான செய்தி கொணர்ந்திருக்கிறீர். நான் உம்மை மறக்கமாட்டேன். சபாஷ். மாலுமிகளை எல்லாம் மேல் தளத்துக்கு வர உத்தரவிடும்.''

ஒரு நிமிடத்திற்குப் பிறகு அட்மிரல் எவெர்ஷார்ப் கப்பலின் மேல் தளத்தில் கப்பித்தான் மேடைமீது கால்களை அகலப் பரப்பி நின்றான். அப்போதுதான் பொழுது புலர்ந்திருந்தது. சரத்கால முடிவில் காணும் கூதல் வீசும் இருண்ட காலை. தொடுவானத்தில் தெரிந்த பாறைத் தீவைத் தொலைநோக்கி வழியாகப் பார்த்தான் எவெர்ஷார்ப். அழகற்ற சாம்பல் நிறக் கடலின் நடுவே திகழ்ந்தது அத்தீவு. சலிப்புத் தரும் ஒரே தோற்றத்துடன் எழும்பிய அலைகள் கரையோரப் பாறைகள் போன்று உருமாறிக் காணப்பட்டன. கடல் முழுவதுமே கருங்கல்லால் செதுக்கியது போலத் தென்பட்டது.

செம்படவர் குடியிருப்புக்கு மேலே கம்பீரமாக விளங்கியது மாதாகோயிலின் குறுகிய முக்கோண வடிவான கூர்ங்கோபுரம். அதன் உச்சியிலிருந்த கருஞ் சிலுவை, மப்புப்போட்ட வானின் பின்னணியில் துலக்கமாகத் தெரிந்தது. பிரம்மாண்டமான கொடி யொன்று கூர்ங்கோபுரத்தின் உச்சியில் வீசிப் பறந்தது. காலையின்

மங்கலில் அது முற்றிலும் இருண்டு, அநேக மாகக் கறுத்துக் காணப்பட்டது.

''ஐயோ பாவம். இவ்வளவு பெரிய வெண் கொடி தயாரிப்பதற்கு அவர்கள் தங்களிட மிருந்த துப்பட்டிகளை எல்லாம் தத்தம் செய் திருக்க வேண்டும். வேறு வழி ஏது? சரணடைவ தென்றால் அதற்குள்ள அசௌகரியங்களைப் பொறுத்துத்தானே தீர வேண்டும்!'' என்றான் எவெர்ஷார்ப்.

அவன் உத்தரவிட்டான்.

கரையிறங்கு துருப்புக் கப்பல்களும் நாச காரிகளும் தீவை நோக்கிப் புறப்பட்டன. தீவு வரவரப் பெரிதாகியது, நெருங்கியது. மாதாகோயிலின் அருகேயுள்ள மைதானத்தில் மாலுமிகளின் சிறு கும்பல் நிற்பது வெறுங் கண்களுக்கே தெரிந்தது.

இந்தக் கணத்தில் மேலெழுந்தது குங்குமச் செம்பரிதி. வானுக்கும் கடலுக்கும் நடு வே அது தொங்கியது. நீண்ட புகை நிற மேகம் அதன் மேல்விளிம்பை மறைத்திருந் தது. பரிதிக் கோளத்தின் அடிவிளிம்பு அலை பொங்கும் கடலை வருடியது. தீவில் காரொளி பரவியது. மாதாகோயில் மீது பறந்த கொடி யோ, உருக்கிய எஃகுப் போலச் செக்கச் செவே லென்று தகதகத்தது.

''இவன்கள் நாசமாய்ப் போக, எவ்வளவு அழகான காட்சி!'' என்று வியந்தான் எவெர் ஷார்ப். ''சூரியன் போல்ஷெவிக்குகளை நன்ருய் நையாண்டி செய்கிருன். வெள்ளைக் கொடிக்குச் செந்நிறம் பூசிவிட்டான். போகட்டும், விரைவிலேயே அதை மீண்டும் வெண்கொடி ஆக்கிவிடுவோம்.''

காற்று பேரலைகளை எழுப்பியது. அலைகள் பாறைகள் மீது மோதின. அவற்றின் தாக்குதலைச் சிதறடித்த பாறைகள் வெண்கலம் போல ஒலித்தன. மெல்லிய கணகணப்பு, தூவானம் நிறைந்த காற்றில் நடு நடுங்கியது. நனைந்த கற்களை வெறுமையாக்கிவிட்டு அலைகள் கடலில் கலந்தன. வலிமையைத் திரட்டிக்கொண்டு எழுந்து அவை மீண்டும் பாறைகளைத் தாக்கின. கற்களுக்கு இடையே இருந்த, குறுகிய, கோணல் மாணலான இடுக்குகளுக்குள்ளெல்லாம் புகுந்து, ஆழ்ந்த வெடிப்புக்களுக்குள் கசிந்து, தற்காப்பில் எங்கேயாவது பலவீனமான இடம் கிடைக்காதா என்று அவை துருவித் தேடின. தண்ணீர் களகளத்தது, கண்ணுடி உடைந்து சிதறுவது போலக் கணகணத்தது, சீறியது. கண்ணுக்குத் தெரியாத தடை யொன்றின்மேல் திடீரென மோதி, பீச்சும் ஊற்றைப் போல நுரைக்கும் ரோஜா நிறத் தூவானத்தை வாரிச் சிதறிய

வாறு பீரங்கி வெடி போன்ற அதிரோசையுடன் சடாலென்று பின்வாங்கியது.

துருப்புப் படகுகள் கரை தட்டின. கொந்தளிக்கும் நீரில் மார்புவரை ஆழ்ந்து, ஸப் மெஷின்-கன்களைத் தலைக்குயரே தூக்கிப் பிடித்துக்கொண்டு ஜெர்மானியர் கோட்டையை நோக்கி விரைந்து முன்னேறினர். அவர்கள் பாறைக்குப் பாறை தாண்டினர், சளப்பென்று தண்ணீரில் விழுந்தனர், மீண்டும் மேலேறினர். ஆயிற்று, அவர்கள் குத்துப் பாறையின் உச்சியை அடைந்துவிட்டார்கள். இதோ அவர்கள் பீரங்கிப் படையின் திறந்த நிலவறை வாயில்களுக்குள்ளே புகுகிறார்கள்.

அட்மிரல் எவெர்ஷார்ப், கப்பித்தான் மேடையின் கம்பிக் கிராதியைப் பற்றியவாறு அசையாது நின்று, கரையை வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண்டிருந்தான். அவன் உள்ளம் களி துள்ளியது. மகிழ்ச்சியால் அவன் கன்னங்கள் துடித்தன.

"முன்னேறுங்கள், வீரர்களே, முன்னேறுங்கள்!"

திடீரெனத் தரைக் கீழ் வெடியதிர்ச்சிகளால் தீவு கிடுகிடுத்தது. நிலவறைகளுக்குள்ளிருந்து இரத்தக் கறை படிந்த துணிக் கிழிசல்களும் சதைத் துண்டுகளும் வெளியே சிதறின. பாறைகள் ஒன்றாக நகர்ந்து வெடித்துச் சில்லுச்

சில்லாய்ப் பறந்தன. அவை துடிதுடித்தன, தீவின் நெஞ்சுக் குழியிலிருந்து மேலே எகிறின, பின்பு, உடைந்த பீரங்கிகள் அதுங்கி மொத்தையாய்க் கிடந்த திறந்த கிடங்குகளுக்குள் மீண்டும் விழுந்தன.

''பீரங்கிகளை வெடிவைத்துத் தகர்க்கிறார்கள்!'' என்று வீறிட்டான் எவெர்ஷார்ப். ''சரணாகதி நிபந்தனைகளை மீறிவிட்டார்கள், கயவாளிப் பயல்கள்!''

இந்தக் கணத்தில் கதிரவன் மேகத்துக்குள் மெல்லென நழுவினான். மேகம் சூரியனை விழுங்கிவிட்டது. தீவுமீதும் கடல்மேலும் தண்ணொளி பரப்பிய செஞ்சுடர் மறைந்துவிட்டது. நாற்புறமும் எல்லாம் கருங்கல்லின் சலிப்புத் தரும் சாம்பல் நிறமாக மாறின. எல்லாம்—மாதாகோயில் உச்சியில் பறந்த கொடியைத் தவிர. தனக்கு எங்கேனும் மூளை பிசகிவிட்டதோ என்று எவெர்ஷார்ப் எண்ணினான். மாதாகோயில்மீது பறந்த பிரம்மாண்டமான கொடி, இயற்கை விதிகளுக்கெல்லாம் மாறாகத் தொடர்ந்து செந்நிறத்தில் திகழ்ந்தது. நாற்புறமும் நிலவிய கருஞ்சாம்பல் நிறத்தின் பின்னணியில் அதன் செவ்வண்ணம் முன்னிலும் ஆழ்ந்து பளிச்சிட்டது. அதன் பளப்பளப்பு கண்ணைப் பறித்தது. அப்போதுதான் அட்மிரல் எவெர்ஷார்ப்புக்கு எல்லா விஷயங்களும் புரிந்

தன. கொடி ஒருபோதும் வெண்மையா யிருக்க வில்லை. எப்போதும் சிவப்பாகவே தான் இருந் திருக்கிறது. அது வேறுவிதமாக இருந்திருக் கவே முடியாது. யாரோடு சண்டை யிடுகிறோம் என்பதை எவெர்ஷார்ப் மறந்துவிட்டான், அது தான் விஷயம். இது ஒன்றும் கண் மயக்கல்ல. அவனைச் சூரியன் ஏமாற்றவில்லை. அவன்தான் தன்னையே ஏமாற்றிக்கொண்டான்.

அட்மிரல் எவெர்ஷார்ப் புதிய கட்டளை பிறப்பித்தான்.

குண்டு வீசும் விமானங்களும் தாக்கு விமானங்களும் போர்விமானங்களும் அணி அணி யாக மேலே எழும்பின. நாசகாரிகளும் துருப்புப் படகுகளும் நாலாபுறமிருந்தும் தீவை நோக்கி விரைந்தன. கரையிறங்கு துருப்புக்களின் புதிய அணிகள் ஈரப் பாறைகள்மேல் தட்டித் தடவி ஏறின. பாரஷூட் துருப்புக்கள் செம்படவர் குடியிருப்பின் மீது பூவரசு மலர்கள் போலப் பொலபொல வென்று உதிர்ந்தன. வெடி யதிர்ச் சிகள் வானைப் பிளந்தன.

இந்த நரகத்தின் நடுவே, மாதாகோயி லின் உதைசுவர்களுக்கு அடியே மறைவிலிருந்த முப்பது சோவியத் மாலுமிகளும் தங்கள் ஸப் மெஷின்-கன்களைத் தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு, நான்கு திசைகளிலும் தயாராகத் திருப்பிக் குறிபார்த்திருந்தனர். இந்த பயங்

கரமான கடைசிக் கணத்தில் அவர்களில் ஒரு வனுவது வாழ்வது பற்றி எண்ணவே இல்லை. வாழ்வுப் பிரச்சினைதான் தீர்ந்தாகிவிட்டதே. சாகப் போகிறோம் என்று அவர்கள் அறிவார் கள். ஆனால் இறக்கும் முன்பு எத்தனை எதிரிக ளைத் துடைத்தொழிக்க முடியுமோ ஒழித்து விடுவது என்று அவர்கள் உறுதி பூண்டிருந்தனர். இது அவர்களுடைய கடமை. அதை அவர்கள் முடிவுவரை நிறைவேற்றியே தீர்த்தார்கள். அவர்கள் குறி தவறாது சுட்டனர். ஒரு குண்டு கூட வீண் போகவில்லை. ஒரு எறி குண்டா வது இலக்குப் பிசகவில்லை. மாதாகோயிலின் அருகே நடந்த போரில் நூற்றுக் கணக்கான ஜெர்மானியத் துருப்பினர் மண்ணைக் கவ்வினர்.

ஆனால் இரு தரப்புக்களின் பலத்திலும் பெருத்த ஏற்றத் தாழ்வு இருந்தது.

குண்டுகளால் பெயர்க்கப்பட்டு மாதா கோயில் சுவர்களிலிருந்து சிதறிய செங்கல், காரைச் சிதர்கள் மேலெல்லாம் பொழிய, முகமெல்லாம் புகை யேறிக் கறுத்து, வியர் வையும் இரத்தமும் வழிய, சொக்காய்களின் உட்புறமிருந்து கிழித்தெடுத்த பஞ்சைக் காயங் களுக்குள் திணித்துக்கொண்டு முப்பது சோ வியத் மாலுமிகளும் கடைசி மூச்சு வரை குண்டு சுட்ட வண்ணமா யிருந்துவிட்டு, ஒருவர்பின் ஒருவராக வீழ்ந்து பட்டனர்.

அவர்களுக்கு மேலே பறந்தது பிரம்மாண்டமான செங்கொடி, கப்பல் பாய் தைக்கும் ஊசிகளில் மாலுமிகளுக்குரிய முரட்டு நூலைக் கோத்து, வீரர்களின் இராணுவ டிரங்க் பெட்டிகளிலிருந்து கிடைத்த விலைமதிப்பற்ற பட்டுக் கைக்குட்டைகள், சிவப்பு லேஞ்சிகள், குங்கும நிறக் கழுத்துக் குட்டைகள், ரோஜா நிறப் புகையிலைப் பைகள், சிவப்புக் கம்பளிகள், ஜெர்ஸிகள், நிக்கர்கள் கூட உள்படப் பல வகைப்பட்ட சிவப்புத் துணிகளை எல்லாம் ஒட்டுப் போட்டு அவர்கள் தயாரித்திருந்த கொடி. ''உள்நாட்டுப் போரின் வரலாறு'' என்ற நூலின் முதல் தொகுதியின் செந்நிறக் காலிகோ அட்டையும், இந்த அழல்நிற ஒட்டு வேலையில் சேர்த்துத் தைக்கப்பட்டிருந்தது.

மிக மிக உயரத்திலே, ஓடுகின்ற மேகங்களுக்கிடையே வீசிப் பறந்த அந்தக் கொடி, கண்ணுக்குப் புலப்படாத மகாவீரன் ஒருவன் போர்ப் புகையினூடே அதைத் தாங்கி வெற்றியை நோக்கி அஞ்சாது முன்னேறிச் செல்வது போலத் தகதகத்தது.



## இயோர்கிய் கூலியா

இளவெயில் கொஞ்சும் கருங்கடற் கரையில், காக்கேஷிய மலைத் தொடரில் இலகுகிறது அப்ஹாசியா, தேயிலைத் தோட்டங்களும், புகையிலை வயல்களும், பூத்துக் குலுங்கும் எலுமிச்சைச் சோலைகளும் திகழும் நாடு.

இரத்தப் பகைமை ஒருகாலத்தில் அந்நாட்டின் எழுதாச் சட்டமாக வழங்கி வந்தது. அந்நாட்களின் நினைவு முதிய மலைவாசிகளின் மனத்தில் இன்றும் பசுமையாயிருக்கிறது.

காலம் மாறிவிட்டது. ஒருபோது மிகப் பயங்கர மாகத் தோன்றிய அவ்வழக்கம் இப்பொழுது எள்ளி நகையாடத் தக்கதாகிவிட்டது. ''வேலி யைத் தாங்குபவை கம்பங்கள், மனிதனைத் தாங்குபவர்கள் மற்ற மனிதர்கள்'' என்பது இன்றைய அப்ஹாசியாவாசிகளுக்குப் பிடித்த மான புதுமொழியாகும். அப்ஹாசியக் குடி யானவர்களது வாழ்க்கைப் போக்கில் ஏற்பட் டுள்ள மாறுதல்களை வருணிக்கிறது கியோர்கிய் கூலியா எழுதிய ''சந்திப்பு'' என்னும் கதை.

எழுதுவது கூலியா குடும்பத்தாருக்கு வழி வழி வந்த தொழிலாகி விட்டது. அப்ஹாசிய எழுத்துக்களைப் படைத்தவரும் முதலாவது அப்ஹாசிய உரைநடை எழுத்தாளருமாவார் த்மீத்ரிய் கூலியா (1874-1960). அவரது புதல் வரே கியோர்கிய் கூலியா (பிறப்பு 1913).

தந்தையும் மைந்தனும் எழுதியுள்ள நூல்கள் மக்களால் மிக மிக விரும்பப்படுப வை. தற்கால அப்ஹாசிய கிராம வாழ்வைச் சித்திரிக்கும் ''ஸாக்கேனில் வசந்தம்'', ''நல்ல நகரம்'', ''காமா'' என்னும் முத்தொகுதி நா வல் இவற்றில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது. இதை இயற்றியவர் கியோர்கிய் கூலியா.

## சந்திப்பு

பேராசிரியர் நான்பாவின் வருகையை எதிர்பார்த்து ஹோட்டலில் அவருக்காக ஓர் அறையை ஏற்பாடு செய்திருந்தார்கள் கூட்டுப்பண்ணைக்காரர்கள். கூட்டுப்பண்ணைத் தலைவர் அலெக்ஸேய் தாம்பியா, ஸ்டேஷனில் அவரை எதிர்கொண்டார்.

நான்பாவுக்கு முப்பத்தைந்து வயதிருக்கலாம். கொம்புப் பிரேம் போட்ட கண்ணாடி அணிந்திருந்ததால் அவர் முகம் கடுகடுப்பாயிருப்பது போலத் தோற்றமளித்தது. பழகும் போது அவர் காட்டிய ஆர்வமும் நட்பும் இந்த எண்ணத்தை விரைவிலேயே அகற்றிவிட்டன.

அவருடையது வீதியைப் பார்த்த அறை. வீதியின் இரு மருங்கிலும் வெள்ளியிலைப் பாப்லார் மரங்களின் கூம்பிய நுனிகள் வானை நோக்கி உயர்ந்து நின்றன. படர்கிளைகள் கொண்ட முசுக்கட்டை மரங்கள், குளுமையான காலைக் காற்றில் மெல்லெனச் சலசலத்தன.

நான்பா ஜன்னல் கதவை விரியத் திறந்து, மரக் கிளைகளின் சலசலப்பை மகிழ்வுடன் உற்றுக் கேட்டார். நாற்புறமும் நிலவிய அமைதி அவருக்குப் புதுமையாயிருந்தது. மரங்களின் சலசலப் பொலி இந்த அமைதியை நன்கு துலக்கிக் காட்டியது.

சரத்காலக் காலை வேளையின் குளிர்ச்சி சிறிது சிறிதாகக் குறைந்து, பகலின் வெப்பம் அதிகரித்தது. தரையிலிருந்து கிளம்பிய ஆவி தொலைவில் தெரிந்த மலைப் பிளவுகளிலே நீலம் பாரித்த மேகங்களாகத் திரண்டு, கதிரவனை எதிர்கொள்ளும் பொருட்டு மலைச் சரிவுகளில் தவழ்ந்து ஏறியது. மிக அருகாமையிலிருந்த மலைத் தொடருக்குப் பின்னே வெண்பனிச் சிகரங்கள் வெயிலொளியில் வாள்கள் போலப் பளிச்சிட்டன. பனிக்கட்டிக் கம்பியின் நுனியில் தொங்கும் நீர்த் துளி போலத் தெள்ளத் தெளிவாய் இலங்கியது காலை.

''மலைகள்! ஆகா, மலைகள்!'' என்று, அவற்றை முன்னர்ப் பார்த்தே யிராதவர் போல வியப்புடன் கூறினார் நான்பா.

''ஆம், மலைகள் எப்படியிருக்க வேண்டுமோ அப்படியே இருக்கின்றன. பழுது சொல்ல முடியாது'' என்று நகைச் சுவை ததும்ப ஒப்புக் கொண்டார் தாம்பியா.

''அப்புறம் மூடுபனி! ஆகாகா, இதை

நான் முந்திய தடவை பார்த்து எவ்வளவு நீண்ட காலம் ஆகிவிட்டது!'' என்று உற்சாக மாகக் கூறிக்கொண்டு போனர் நான்பா.

நான்பா தமது தாய்நாடான அப்ஹாசி யாவுக்குத் திரும்பி வந்தது ஏதோ தற்செய லாக நேர்ந்த வாய்ப்பினுல்தான். தமக்கு மிக வும் பழக்கமான பழுப்பு மலைகளையும், நீலம் படிந்த மூடுபனியையும், தெள்ளிய வானையும் தாம் மீண்டும் கண்டு களிகூர்வோம் என்று சில நாட்களுக்குமுன் நான்பாவுக்குத் தோன்றி யே இராது. தாய்நாட்டை நினைக்கும்போதெல் லாம் அவரது உள்ளத்தில் ஒருபுறம் அன்பு பொங்கும், மற்ெருரு புறம் வெறுப்பு மண்டும். எதிரெதிரான இவ்வுணர்ச்சிகளின் மோதலால் அவருக்கு வேதனையுண்டாகும். தாய்நாட்டின் நினைவை அரும்பாடு பட்டு அடக்கிக்கொள் வார். விடாப்பிடியான உழைப்பும், செய்கை யில் நேர்மையும் வாய்ந்த நான்பா தமது வேலைக் குக் குந்தகம் விளைக்கும் உணர்ச்சிகளில் ஈடு பட மாட்டார். அது அவரால் முடியாது. தாம் வந்த நோக்கத்தைப் பற்றி தாம்பியாவுடன் உரையாடலைத் தொடர்ந்தார்.

''நீங்கள் எழுதியிருந்தீர்களே, அந்த விஷய மெல்லாம் உண்மைதான், அல்லவா?''

''ஆமாம், ஆசிரியரையா.''

''அப்படியானுல் உங்கள் எலுமிச்சை

மரம் உறைமட்டத்துக்குப் பன்னிரண்டு டிகிரி கீழான கடுங்குளிருக்கும் தாக்குப்பிடிக்க முடியும் என்றல்லவா ஆகிறது! பன்னிரண்டு டிகிரிக் குளிர்! மெய்யாகவே தானு? விவசாய நிபுணர்களிடம் சொன்னீர்களா? எங்கே பார்ப்போம்.''

பெரு வியப்புடன் இவ்வாறு கூறிய நான்பா தமது உணர்ச்சியைக் கட்டுப்படுத்திக் கொண்டு நிதானமாக, கலாசாலையில் உரையாற்றுவது போன்று சந்தர்ப்பத்துக்கேற்ற குரல் அழுத்தத்துடன் பேச்சைத் தொடர்ந்தார்.

''அப்படியாஞல் உங்கள் எலுமிச்சை மரம் குளிர்காலத்தைத் தாக்குப் பிடித்துவிட்டதாக்கும்....''

''இரண்டு குளிர்காலங்களே, ஆசிரியரையா.''

''இரண்டு குளிர்காலங்கள் — அதுவும் உறைமட்டத்துக்குக்கீழ் பன்னிரண்டு டிகிரிக் குளிர். காய்க்கவும் செய்ததோ? ஊம்? நீங்கள் சொல்வதில் நிச்சயமாகத் தவறு ஒன்றும் இல்லையே?''

தாம்பியாவின் முகத்தை நுட்பமாகக் கூர்ந்து நோக்கினூர் நான்பா. தாம்பியா அவரது கேள்விகளுக்குத் தட்டுத் தடவலின்றிப் பதிலளித்துக்கொண்டு போனூர். அவர் சொல்வதைச் சந்தேகிப்பதற்கு எவ்விதக் காரணமும் தென்படவில்லை.

''இங்கே பருவநிலை மோசமாயிருக்கிறது. கடுங்குளிர் காரணமாக எலுமிச்சை வளர்க்க முடியாது என்று மக்கள் நினைத்தார்கள். மரங்களைக் குளிர் தாக்காமல் தடுப்பதற்காகக் காப்புகள் அமைப்ப தென்றல் ஏராளமான பணச் செலவாகிறது. ஆகவே குளிர் தாங்கும் எலுமிச்சை வகையை வளர்ப்பது இன்றியமையாததாயிற்று. இவ்வகை எலுமிச்சையை நாங்கள் வளர்த்தும் விட்டோம் என்று காண்கிறது. உங்கள் ஆராய்ச்சி எங்களுக்குப் பெரிதும் உதவியாயிருந்தது. இன்னும் எவ்வளவோ உதவியை உங்களிடமிருந்து எதிர்பார்க்கிறோம்'' என்று உரைத்தார் தாம்பியா.

அடுத்த ஆண்டுக்கான திட்டத்தையும் பேராசிரியருக்கு விவரித்தார் கூட்டுப்பண்ணைத் தலைவர். முதல் சோதனைகள் வெற்றியாக நிறைவேறிவிட்டபடியால் இரண்டு ஹெக்டேர் நிலத்தில் குளிர் தாங்கும் எலுமிச்சை மரங்களை நட்டு வளர்ப்பதென்று கூட்டுப்பண்ணை தீர்மானித்திருப்பதாகவும் வட்டார அதிகாரிகள் உதவி புரிவதாக வாக்களித்திருப்பதாகவும் அவர் தெரிவித்தார்.

ஒட்டுச் செடி வளர்ப்பில் கையாளப்படும் முறைகள் பற்றிப் பல நுணுக்கமான தகவல்களைக் கேட்டறிந்தார் நான்பா. தாம்பியா கொடுத்த தகவல்களில் பல மறுக்க முடியாத

வை, பல விவாதத்துக்கிடமானவை. ஐயப்பாடு களைப் பேராசிரியர் தீர்த்துவைப்பார் என்று இயல்பாகவே எதிர்பார்த்தார்கள் கூட்டுப் பண்ணையினர்.

இரண்டு ஆண்டுகளுக்குமுன் தாம் வெளியிட்ட ஒரு நூலில், கடுங்குளிர் தாங்கும் எலுமிச்சை வகையை உண்டாக்குவது சாத்தியமே என எடுத்துக்காட்டியிருந்தார் நான்பா. இந்த இரண்டு ஆண்டுகளாக, தமது கருத்தை எதிர்த்த பலருடன் ஒருவர் பின் ஒருவராய் வாதிட்ட வண்ணமிருந்தார். இதன் காரணமாக அவருக்கு ஓயா மன வேதனை. தாம் கைப்பற்றிய முறை சரியே என்றும், அதன் விளைவுகள் நல்லனவாகவே இருந்து தீரும் என்றும் அவர் மீண்டும் மீண்டும் எண்ணித் தம்மையே தேற்றிக்கொள்வார். விளைவுகள் ஏற்படுவதிலோ, நீண்ட நேரம் பிடித்தது. தென் பிரதேசங்களைச் சேர்ந்த சில அரசாங்கப் பண்ணைகளிலே அவரது முறை சோதித்துப் பார்க்கப்பட்டது. அச்சோதனைகள் நன்கு வெற்றி பெறவில்லை. சில சிறு நுணுக்கங்கள் அஜாக்கிரதையாக விடப்பட்டதே இதன் காரணமாயிருக்கலாம். சோதனை நடந்த பண்ணைகளுக்குத் தாமே நேரில் சென்று விசாரித்தறிய வேண்டும் என்று நான்பாவுக்குப் பட்டது. எனினும் நகரை விட்டுப் பிரிய அவருக்கு மனம் வரவில்லை. வெயில்

காயும் தென் பிரதேசங்களைவிட, நகரத்து வெப்பத் தோட்ட அறைகளே அவருக்கு மேலாகத் தோன்றின.

இந்த நிலையிலேதான் வந்தது எதிர்பாராத செய்தி. நான்பாவுக்கு எல்லாவற்றையும் விட வியப்பூட்டியது இந்தச் செய்தி அப்ஹாசியாவிலிருந்து வந்தது தான். அப்ஹாசியாவைச் சேர்ந்த கூட்டுப் பண்ணை ஒன்றின் நிர்வாகக் குழுவினர் ''முக்கியமான, சிக்கல் நிறைந்த ஒரு விஷயத்தில்—அதாவது குளிர் தாங்கும் எலுமிச்சை வளர்ப்பதில் கிடைத்த வெற்றியை உறுதிப்படுத்துவதில்'' அவருடைய உடனடியான உதவியைக் கோரிக் கடிதம் எழுதியிருந்தனர். இவ்வளவு கவர்ச்சிகரமான கோரிக்கையை மறுக்க முடியுமா?

கடிதம் கிடைத்ததுமே அதிகக் காலவிரயம் செய்யாமல் புறப்பட்டுவிட்டார் நான்பா. வரும் வழியிலும் வந்து சேர்ந்த பின்பும் தான் இத்தகைய எலுமிச்சை மரம் உண்மையிலேயே இருக்கிறதா, இல்லை, யாரேனும் வம்பர்கள் செய்த சூழ்ச்சியா என்ற ஐயம் அவரை உலப்பியது. இனந்தெரியாத சந்தேகங்கள் அவர் மனதில் எழுந்தன.

சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லி முடித்துவிட்டு, பேராசிரியர் மேலே கேட்கும் கேள்விகளுக்காகக் காத்திருந்தார் கூட்டுப் பண்

ணைத் தலைவர் தாம்பியா. நான்பாவோ, அவரிடம் ஒன்றுமே கேட்காமல், தூய குளிர் காற்றை மகிழ்ச்சியுடன் மூச்சிழுத்துவிட்டு, ''பதினைந்து வருடங்கள் என்பது மிக நீண்ட காலம் அல்ல, இருந்தபோதிலும் எனக்கென்னவோ இப்போதுதான் முதல் தடவையாக இங்கே வந்திருப்பது போல் தோன்றுகிறது'' என்று தமக்குள்ளாகவே கூறிக் கொள்பவர் போல மொழிந்தார்.

தமது எண்ணத் தொடரின் ஒரு துணுக்கையே நான்பா இவ்வாறு வெளியிட்டார். அதன் உள்ளார்ந்த பொருளை அவர் ஒருவரே அறிவார். எனினும், தாம்பியா பேச்சைத் தொடர்ந்த போது இதன் பொருளைப் புரிந்து கொண்டதாகக் காட்டிக்கொள்ளாதது பேராசிரியருக்கு எரிச்சலுண்டாக்கியது.

தாம்பியா ஒரு சிகரெட்டைச் சுருட்டிக் கொண்டே பேசலானார்: ''எனக்கு வியப்பேற்படவில்லை. சொந்த அனுபவ வாயிலாக நான் இதை அறிவேன். நினைவு புதுக்கும் பாட முறையில் மூன்று மாதப் பயிற்சியின் பொருட்டு அண்மையில் நகரத்துக்குப் போயிருந்தேன். திரும்பியதும் பார்க்கிறேன், கூட்டுப்பண்ணையில் ஏதோ மாறுதல் ஏற்பட்டிருந்தது. புதினம் என்ன என்று ஜனங்களிடம் விசாரித்தேன். சிலர் புது வீடு கட்டியிருப்பதாகவும் வேறு சிலர்

புது மேஜை, நாற்காலிகள் வாங்கியிருப்பதாக வும் சொன்னார்கள். குழந்தைகள் இல்லம் திறக்கப்பட்டிருக்கிற தென்றும் தெரிவித்தார் கள். 'இவ்வளவு தானா?' என்று கேட்டேன். 'இவ்வளவே தான்' என்றார்கள். எனக்கு மட் டும் எதையோ அவர்கள் என்னிடமிருந்து மறைக்கிறார்கள் என்று தோன்றியது. அது இன்னது என்றுதான் புலப்படவில்லை. ஒரு நாள் எங்கள் பாராக்காரனிடம் இதைப்பற்றிக் கூறி னேன். அவன் என்ன சொன்னான் தெரியுமோ? 'ஆன்மாவாக்கும் மாறியிருக்கிறது. காகிதங் களைப் புரட்டிப் பார்த்து அதைத் தேடுவதில் நேரத்தை வீணாக்காதீர்கள். மக்களின் உள்ளே யாக்கும் இருக்கிறது அது!' என்றானே. இதைக் கேட்டதும் எனக்கு இந்தக் கிழவன் ஆன்மா வில் ஆரம்பித்து எங்கேனும் பரமான்மாவில் ஐக்கியமாகி விடப் போகிறானே என்ற கவலை யுண்டாயிற்று. அவனை வழிக்குக் கொண்டுவர முயன்றேன்.''

''விவாதத்தில் அவன்தான் உங்களை வென் றிருப்பான். அப்படித்தானே?'' என்று குறுக் கே கேட்டார் நான்பா.

''ஆம். அதுவும் எப்படி என்கிறீர்கள்? என்னுடைய தர்க்கங்கள் அவனுக்கு எரிச்சலைக் கிளப்பிவிட்டு விட்டன. அவன் கூப்பாடு போட் டான். சட்டைப்பையிலிருந்த செய்தித்தாளைச்

சடக்கென்று எடுத்து என் முகத்தில் அதனுல் இடித்து, 'என்னுடைய அறியாமையை நான் அகற்றிக்கொண்டு, ஒவ்வொரு நாளும் அறிவைப் பெருக்கி வருகிறேனே, இந்தச் சேமிப்பு எங்கே குவிகிறது தெரியுமா? இதோ, இங்கே, என் மூளைக்குள். எந்தப் புத்தகத்தில் இந்த விவரம் குறிக்கப்பட்டிருக்கிறது, சொல்லுங்கள் பார்க்கலாம்!' என்று கூக்குரலிட்டான். ஆன்மா என்று அவன் குறிப்பிட்டது அதைத் தான்.''

''நீங்கள் தோல்வியை ஒப்புக்கொண்டீர்களா?''

தாம்பியா சிரித்தார்.

''தோல்வியை ஒப்புக்கொள்ளவில்லை. உண்மைகளுக்கு எதிர்நிற்க மாட்டாமல் பின்வாங்கிவிட்டேன் என்று சொல்லலாம்.''

நான்பா சடக்கென விறைப்பாக நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''நீங்கள் பின்வாங்கியிருக்கக் கூடாது. பதினைந்து ஆண்டுகளில் பல பல செயல்கள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன என்பது உண்மையே. நாற்காலியே கதியாய்க் குந்தி வேலை செய்யும் எனக்குக்கூட இவ்விஷயம் தெளிவாகப் புலப்படுகிறது. ஆயினும், நாம், அல்லது நமது ஆன்மா, உங்கள் பாராக்காரன் சொல்லுவதுபோல அவ்வளவு விரைவாக மாறுதல்

அடைந்திருக்குமானால், நமது வாழ்க்கை பல விதங்களில் வேறு வகையாக உருப்பெற்றிருக்கும்.... கட்டாயமாக, 'ஆமாம்...'' என்று மனப்பூர்வமாகக் கூறினர்.

கடைசிச் சொற்களை நான்பா அதிக அழுத்தங் கொடுத்து உரைத்தார். அவர் எதையோ மறை பொருளாகச் சுட்டிக் காட்டுகிறார் என்று அதிலிருந்து தெரிந்தது.

தாம்பியாவோ, தம் கட்சியை விட்டுக் கொடுக்கத் தயாராயில்லை.

''இந்த விஷயத்தைப் பற்றி நான் உங்களுடன் தர்க்கிக்கப் போவதில்லை. நானும் தான் இதைப் பற்றிச் சிந்தித்திருக்கிறேன். நீங்கள் கற்றவர், எல்லா விஷயங்களையும் புரிந்து கொள்கிறீர்கள், வருங்காலத்தையும் ஊடுருவிப் பார்க்க உங்களால் முடியும். நானே, அப்படியல்ல. சுற்றிலும் காண்பவற்றையும், நானே அனுபவித்தவற்றையும் பற்றி மட்டுமே நான் பேசக் கூடும். ஒரு சாதாரணமான உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். அப்ஹாசியா வாசிகளான நாம், இப்போது தான் சிறிது காலத்துக்கு முன்வரை, இருளிலும் அறியாமையிலும் ஆழ்ந்து கிடந்தோம், இளவரசர்களுக்கும் பிரபுக்களுக்கும் முன்னே சிரம் தாழ்த்து வணங்கி வந்தோம். சிறிது காலத்துக்கு முன்வரை நமது உலகமெல்லாம் வீட்டு

வளவுக்குள் அடங்கியிருந்தது. நம்மில் ஒவ்வொருவரும் குகை வாழ் கரடி போலத் தனி வாழ்க்கை வாழ்ந்தோம். இது எனக்குத் தெரிந்த வாறே உங்களுக்கும் தெரியும். இப்போதுதான் சிறிது காலத்திற்கு முன்பு கல்வியறிவை எந்தக் கடையில் வாங்கலாம் என்பதை நாம் அறிந்து கொண்டோம். இன்று, உங்களைப் போன்ற விஞ் ஞானி யொருவர் நம்மிடையே தோன்றியிருக் கிறார். பார்க்கப் போனால் நீங்களும் இந்தப் புத் துணர்ச்சியின் — புதிய ஆன்மாவின் — ஒரு பகுதிதானே?''

தாம்பியாவின் சொற்கள் மலையருவி போலப் பெருக்கெடுத்தன. அவர் கடைசியாகக் கூறிய வார்த்தைகள் நான்பாவுக்குக் கூச்சம் விளைத்தன.

''என்னைப் பற்றிப் பேச வேண்டாம். கூட்டுப்பண்ணைக்கு எப்போது புறப்படுவோம், அதைச் சொல்லுங்கள் முன்னே'' என்றார் அவர்.

''சரியாக ஒரு மணிக்குக் கார் இங்கே வரும்.''

''நல்லது. புதுமைகளைப் பற்றிப் பேசத் தான் வேண்டுமென்றால் முதன் முதலாக உங் களையும், உங்கள் கூட்டுப்பண்ணையையும் குறிப் பிட வேண்டும் என்பேன் நான். பெரிய விஞ் ஞானப் பிரச்சினை யொன்றைத் தீர்த்த பெரு மை உங்களதல்லவா? இதே கையோடு இன்

ஞெரு விஷயம் கேட்டுவிடுகிறேன். இந்த எலுமிச்சை பற்றிய சோதனை யார் பொறுப்பில் நடக்கிறது என்று நீங்கள் சொல்லவில்லையே. உங்கள் கூட்டுப்பண்ணை விவசாய விஞ்ஞானியின் பொறுப்பிலா அல்லது யாரேனும் வெளியார் மேற்பார்வையிலா?''

''இரண்டுமில்லை. சோதனை நடத்துபவன் சாதாரண உழவன், எங்கள் கூட்டுப்பண்ணை உழவுக் குழு ஒன்றின் தலைவன். எலுமிச்சை மரங்கள் என்றால் அவனுக்கு ஒரே பைத்தியம். 'எலுமிச்சையான்' என்றே நாங்கள் அவனுக்குப் புனைபெயர் சூட்டியிருக்கிறோம்.''

''யார் அந்தப் பேர்வழி? அவன் இயற்பெயர் என்ன?'' என்று ஆவலுடன் குறுக்கிட்டார் நான்பா.

''ஸாலுமான் ஆரான்.''

''ஆரானா?''

''ஆம். குதீமின் மகன். உங்களுக்குக் கூட அவனைத் தெரிந்திருக்குமே?''

''ஆரான் என்றா சொன்னீர்கள்? இல்லை, அவனைத் தெரியாது எனக்கு, ஊஹூம், தெரியாது'' என்று முணுமுணுத்த நான்பா, நெஞ்சில் கையை வைத்தவாறு ஓரடி பின்னே நகர்ந்தார். அவர் இதயம் படபடவென்று அடித்தது. நெற்றிப் பொருத்து நாளங்கள் துடித்தன. ''மன்னிக்க வேண்டும். நரம்புக் கோளாறும்

மற்ற வினைகளும் உண்டு எனக்கு. அவற்றின் விளைவே இது. பயணத்தினால் சிறிது களைத்திருக்கிறேன். கொஞ்சம் இளைப்பாறினால் எல்லாம் சரியாகிவிடும். நிர்வாகக் கமிட்டிக் காரியாலயத்துக்கு நானே வழி கேட்டுக்கொண்டு வந்துவிடுகிறேன். கொஞ்சம் தாமதம் ஆனாலும் ஆகலாம், மன்னிக்க வேண்டும்'' என்றார்.

''உங்களுக்குச் சிறிது தூக்கம் தேவை என்று அப்போதே சொன்னேனே! கேட்டீர்களா?'' எனக் கடிந்துகொண்ட தாம்பியா, வணங்கி விடைபெற்றுச் சென்றார்.

நான்பா தமது எண்ணங்களை முறைப்படுத்த முயன்றார். அவரது தலையோ நீண்ட மூர்ச்சைக்குப்பின் கனப்பதுபோலக் கனத்தது. நிகழ்ச்சிகள் தாம் எவ்வளவு விந்தையாக உருவாகின்றன!

நெடிய உடலும் சிறிது கூனலுமாக, நீண்ட கைகளை முதுகுப்புறம் வைத்தவாறு அறையில் குறுநடை நடந்தார் பேராசிரியர். தரைச் சட்டங்கள் கிரீச்சிட்டன. பொழுது போவது பெரும் பாடா யிருந்தது.

தமக்குள்ளேயே போராட்டம் நிகழ்த்திக் கொண்டிருந்தார் நான்பா. அவரது உள்ளத்தின் அடித்தளத்திலே புகுத்திச் செம்மப்பட்டிருந்தன அலங்கோலமான, பழங்காலக் கருத்துக்கள். வெடிக் குழாயில் மருந்தைத் திணித்

துக் கெட்டிப்பது போல இக்கருத்துக்களைக் கெட்டித்திருந்தார்கள் அவருடைய பாட்டன் மார். இவற்றுடன் மல்லுக்கட்டிக் கொண்டிருந் தார் பேராசிரியர். இப்போது வெடிமருந்து சற்று நமத்துப் போயிருந்தது என்பது உண்மையே. ஆயினும் இப்போதும் அது படா ரென்று வெடித்துச் சிதறக் கூடும் என்பதை நான்பா அறிந்திருந்தார்.

மனத்தை மீண்டும் அமைதியுறுத்த எவ் வளவோ முயன்ருர். சிறிய குவளை நீரில் பழுக் கக் காய்ந்த இரும்புக் கட்டியைப் போட்டால் நீரெல்லாம் ஆவியாகிவிடும், இரும்பு சற்றே கறுத்துக் காணுமல்லவா? இதே போன்ற விளைவு தான் நான்பாவின் முயற்சிகளுக்குக் கிட்டி யது.

நான்பாவின் நெற்றியில் குப்பென வியர் வை துளித்தது. குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டே யிருந்தார், நடந்து கொண்டே யிருந்தார்.

பகல் வெப்பம் ஏறிக்கொண்டு போயிற்று. மலைகள் கனவுவன போன்று ஆவி விட்டவாறு நின்றன. மலைத் தொடரிலிருந்த பிளவுகளை மெல்லிய பஞ்சு மேகங்கள் துலக்கிக் காட்டின. ஜன்னல் குறட்டின் மீது முழங்கைகளை ஊன் றிய வண்ணம் பழைய நினைவுகளில் ஆழ்ந்தார் நான்பா.

...அவர்களுக்கிடையே நிலவியது இரத்தப் பழி. என்ன காரணத்திஞல் தொடங்கியது என்று எவருக்குமே தெரியாது, யாருக்குமே நினைவில்லாது, தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வந்த தீராப் பகை அது. இரண்டு குடும்பங்கள் ஒன்றையொன்று அழித்து, அடியோடு வேரறுப்பதென்று சபதம் பூண்டிருந்தன. பூட்டஞரிடமிருந்து பாட்டஞருக்கும், பாட்டஞர் மூலம் தகப்பஞருக்கும், தகப்பஞரால் மகனுக்கும், பின்னர் அவஞல் அவனுடைய மகன், பேரன், கொள்ளுப்பேரன் என்று இப்படி வழிவழியாகத் தொடர்ந்து வந்த வைரம் அது. இந்தப் பழியைத் தீர்ப்பது புனிதமான கடமை எனக் கருதினர் நான்பா குடும்பத்தார். ஆரான் குடும்பத்தாரோ, ஒரு நான்பா உயிரோடிருக்கும்வரை உருவிய வாளை உறையிலிடுவதில்லை என்று பிரதிக்கினை பூண்டிருந்தனர். இவ்வாறு நெடுங்காலமாக இரு குடும்பத்தினரும் ஒருவர் குரல்வளையை மற்றவர் பாய்ந்து நெரிப்பதற்காகப் பசித்த ஓஞய்கள் போன்று பதிபோட்டுக் காத்திருந்தனர்.

இந்தக் குடும்பங்களில் ஒவ்வொன்றுக்கும் ஓர் இளவரசன் ஆதரவாளஞயிருந்தான். துயரத்திஞலோ சோர்விஞலோ எப்போதாவது பகைமை தணிந்து இரு குடும்பத்தாரும் சமாதானம் செய்துகொள்ள விரும்பிஞல், இரு இள

வரசர்களும் அணையும் நெருப்பை மீண்டும் தூண்டிவிட விரைந்தார்கள். அவ்வளவுதான். மறுபடி ஆதிமுதல் தொடங்கும் பகைமைக் கதை—இரத்தக் களரியும், கண்ணீர்ப் பெருக்கும், வசவு மாரியுமாக. பாம்பின் தந்திரமும், நரியின் வஞ்சகமும், மனிதனின் துவேஷமும் —எல்லாம் மீண்டும் கையாளப்படும்.

நான்பா வீட்டு வாயில் கதவு எத்தனையோ முறை ஏக்கத்துடன் நீட்டி முனகி, நமுதா போர்வையால் இறுக மூடிய பிணம் ஒன்றின் வரவை அறிவித்திருக்கிறது. இடுகாட்டுக்கு எடுத்துச் செல்லப்படும் சவப்பெட்டி வெளியே போனதும் மடாரென்று கடுப்புடன் எத்தனையோ தடவை மூடிக் கொண்டிருக்கிறது அக் கதவு. சோலை வழியிலே, முந்திரிக் கொடிகள் எவ்வளவு விரைவாகத் தளிர்கள் விட்டனவோ அவ்வளவு விரைவாகப் பல்கின கல்லறைகள்.

ஆரான் வீட்டு முன்றிலும் கண்ணீரால் நனைந்து, உவர் நிலம் போன்று துவர்த்துக் கிடந்தது. ஆரான் வமிசத்தார் அழுது புலம்புவதில்லை. அடக்க முடியாது பொங்கி யெழும் சில முனகல்கள் மட்டுமே அவர்கள் நெஞ்சின் ஆழத்திலிருந்து வெளிக்கேட்கும். தங்கள் துயரத்துக்கு அவர்கள் விட்ட போக்கு இதுவே. முரட்டுப் பிடிவாதமும் அசையா மனவுறுதியும்

வாய்ந்த அவ்வமிசத்தவர் பயங்கரமான பழி காரர்கள் எனப் புகழ் பெற்றிருந்தார்கள்.

ஒருநாள் மாலே, நரிகள் அவலக் குரலில் ஊளேயிட்டன. வானில் தாரகைகள் சுடர்ந் தன. அவ்வேளேயில் நான்பா வீட்டு வாயிலுக் குள் புகுந்தான் குதீம் ஆரான் — ஸாலுமான் ஆரானின் தகப்பன். மக்காச்சோள ரொட்டித் துண்டைப் போட்டுக் காவல் நாய்களின் வாயை அடைத்து விட்டு, அரவமில்லாமல் உள்ளே நுழைந்தான் அவன். கிழவர் கான் நான்பா கணப்புக் கெதிரே அமர்ந்து மகனுக்கு ஏதோ பழங்கதை சொல்லிக்கொண்டிருந்தார்.

அந்தச் சமயத்தில் திடுமென அறை வாயி லில் வந்து நின்முன் குதீம் ஆரான். ''வணக்கம். பழைய கடனேத் தீர்க்க வந்திருக்கிறேன்'' என் ஞன்.

சடக்கென்று ரிவால்வரை எடுத்து டுமீ லெனச் சுட்டான் அவன். கான் நான்பா ஏதோ சொல்ல வாயெடுத்தார், ஆனுல் குரல் கிளம்ப வில்லே. முதுகு குப்புற நெருப்பில் மடாரெனச் சாய்ந்தார். மின் வெட்டுவது போல எல்லாம் நடந்து முடிந்துவிட்டது.

கான் நான்பாவின் பிணத்தைக் கட்டிக் கொண்டு நான்கு நாட்கள் அழுது தீர்த்தனர் குடும்பத்தினர். குழந்தை அலெக்ஸாந்தரோ, இறந்த தந்தையின் முகத்தையே நான்கு நாட்

களும் குத்திட்டு நோக்கிக் கொண்டிருந்தான். சில போது தந்தை ஏதோ சொல்வதற்காக உதடுகளை அசைப்பது போல அவனுக்குப் பிரமை தட்டும். தகப்பனூர் ஏற்கனவே கூறியிருந்த சொற்களை அப்போது அவன் நினைவு கூர்வான்.

''குழந்தாய், சூரியன் மலைக்குப் பின்னிருந்து உதிக்கிறுன், கடலுக்குப் பின்னே மறைகிறுன். வெண்பனிக் குவை வெயிலில் ஒளி விடுகிறது, இரவின் இருளில் மங்கிப் போகிறது. வாழ்வும் சாவும் இயல்பானவையே. ஆண் மகன் பழி தீர்த்தபின்பே மரணத்தை எதிர்கொள்கிறுன். என் சொற்களை நினைவில் இருத்திக்கொள்.'' இவை அவர் ஒரு முறை சொன்னவை.

உழுத தரை மழைக்குப்பின் சொத சொதப்பதுபோல ஈரித்து, மப்பும் மந்தாரமுமாயிருக்கும் இரவுகளிலே தகப்பனூர் மகனிடம் மீண்டும் மீண்டும் சொல்வார்:

''இரத்த நாற்றம் கடுமையானது. பருந்து பிணத்தை நுகர்வது போலப் பழிகாரன் இரத்த நாற்றத்தை மோப்பங்கண்டு கொள்வான். அப்புறம் இரத்தத்தை நாளங்களில் வைத்திருக்க எந்தச் சக்தியாலும் முடியாது. என்றைக்கும் நிலவியதும் எப்போதும் நிலவப்போவதுமான விதி இது. என் சொற்களை நினைவிலிருத்திக் கொள்.''

வாழ்வின் மாற்றமுடியாத நியதியைப்பற்றி மகனுக்குத் தந்தையார் இவ்வாறே போதனை அளித்து வந்தார். தீமையும் கொடுமையும் நிறைந்த எத்தனையோ நூற்றுண்டுகளாகத் திரண்டு வந்த அனுபவம் தந்தையால் மகனுக்கு இவ்வாறு வழங்கப்பட்டது.

குழந்தைப் பருவத்தில் தமது நெஞ்சில் பசுமரத்தாணி போலப் பதிந்து போயிருந்த இந்தச் சொற்களை, தந்தையின் போதனைகளை, மறந்தொழிக்கப் பேராசிரியர் நான்பா பட்ட பாட்டை அவரே அறிவார். அவருடைய தந்தை அவர் கனவுகளில் வந்து, பழிதீராமையால் தாம் அழுகிக் கிடப்பதாகக் குறை கூறுவார், பெற்றவன் மீது அன்பு கொள்ளும்படி வேண்டுவார், அச்சுறுத்துவார், இறைஞ்சுவார். ''ஆரான்கள் உலகிலே இன்னும் நடமாடுகிறார்களே'' என அங்கலாய்க்கும் கிழவனாரின் மட்கிய உதடுகள்.

நான்பாவுக்கு இந்தக் கனவுகள் கொடிய சித்திரவதையா யிருந்தன.

1921ம் ஆண்டு பிறந்தது. தொன்று தொட்டு வந்த வாழ்க்கைப் போக்கு நிலைகுலைந்தது. போல்ஷெவிக்குகளைப் பற்றியும், புதிய வாழ்க்கை வழியைப் பற்றியும் பேசத் தலைப்பட்டனர் மக்கள். சிலர் நம்பிக்கையுடனும் அனுதாபத்துடனும் பேசினார்கள், மற்றவர்கள்

பதைபதைப்புடனும் வெறுப்புடனும் குறை கூறினர்கள். அந்த நாட்களில், அப்பப்பா, எத்தனை மாறுதல்கள் நிகழ்ந்தன! தண்மதி கூடத் தரணிமீது புது வகை நிலவு பொழிவது போல் தோற்றியது. அப்போது நகரில் நிறுவப்பட்ட முதலாவது போர்டிங் பள்ளியில் அலெக்ஸாந்தர் நான்பா சேர்ந்துவிட்டான். வலைப்பட்ட ஓநாய்க் குட்டி காட்டை நினைத்து ஏங்குவது போலத் தனது பாழ் வீட்டை எண்ணி மருகினுன் சிறுவன் அலெக்ஸாந்தர். தன்னைப் பேடி என்று மக்கள் நினைக்கக் கூடும் என எண்ணிய போது அவன் உள்ளம் புழுப்போலத் துடித்தது. அவன் ஊர் திரும்பி, வஞ்சம் தீர்த்துக் கொள்வதாகத் தான் தீர்மானித்திருந்தான். ''என்றென்றைக்கும் நிலவியதும் எப்போதும் நிலவப்போவதுமான விதி இது'' என்று அவன் தந்தை கூறியிருந்தார். அச்சொற்களை அவன் நினைவு வைத்திருந்தான்.

...பின்பு அவன் மேல்படிப்புக்காகப் பெரிய நகரத்துக்குச் சென்முன். அங்கே இருக்கும் போதுதான் குதீம் ஆரானை நான்பா வமிசத்தான் எவனே கொன்றுவிட்டான் என்ற செய்தி அவன் காதுக்கு எட்டியது. ஒருநாள் குதீம் ஆரானின் குதிரை அவனைச் சுமந்துகொண்டு வீடு திரும்பியதாம். அவன் முன்புறம் பார்க்காமல் குதிரையின் பின்புறம் பார்த்தவாறு அமர்ந்

திருந்தாலும். கிழவனை அவனுடைய நமுதாப் போர்வையாலேயே கவனமாகப் போர்த்து மூடி, சேணத்துடன் சேர்த்து வரிந்து கட்டியிருந் தாலும் பழி தீர்த்த பகைவன். அவன் முகம் சுண்ணம்பாக வெளிறிப் போயிராவிட்டால் அவன் உயிரிழந்துவிட்டான் என்று யாரும் நினைத் திருக்க முடியாதாம்.

இதன் பின் ஆண்டுகள் உருண்டோடின. முடிவில் அலெக்ஸாந்தர், அவருடைய கிராமத் தார் சொன்னது போலப் ''பெரிய மனி தன்'' ஆகிவிட்டார். நகரத்திலேயே நிரந்தர மாக வசிக்கலானார்.

மகிழ்வற்ற சிந்தனையில் ஆழ்ந்தவராய் அறையிலே உலாவினார் பேராசிரியர் நான்பா. அவருடைய நெஞ்சு பதைத்தது. ''பெரிய மனிதன்'' என்ற சொல் ஏளனம் போலப் பட்டது அப்போது.

''நான் இங்கே வந்தது பெருத்த மடமை. ஆய்ந்தோய்ந்து பாராமல் திடுதிப் பென்று செய்த காரியம். முன்னர் நடந்தவற்றை எல் லாம் எப்படி மறக்க முடிந்தது என்னால்?'' எனத் தமக்குள் சொல்லிக் கொண்டார் நான் பா.

தம்மைப் பற்றி அவருக்குக் கவலையில்லை. அவர் போன்ற பேராசிரியர், படித்த மனிதர்,

இந்தப் பழிதீர்க்கும் படலத்தைக் காட்டு மிராண்டி வழக்கமாகக் கருதாமல் வேறுவித மாக எண்ணி யிருந்தால் கேலிக்கிடமாயிருந் திருக்கும். ஆனால் எதிராளி பழைய வழிகளையே விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டிருக்கலாம், பழைய வழக்கத்துக் கிணங்கப் பழிவாங்கு வதற்கு அறியாமை காரணமாக முயலலாம் அல்லவா? அவ்வகை அறியாமை அகன்று ஒழிந்து விட்டது என்று யார்தான் உறுதிகூற முடியும்? இந்த நிலையில் எதிராளியைக் காணுதிருப்பதே நலம். அவனைச் சந்திப்பதைத் தவிர்ப்பது எப்படி?

கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது. ஹோட்டல் குமாஸ்தாவாயிருக்கும்.

''உள்ளே வாருங்கள்'' என்று குரல் கொடுத்தார் நான்பா.

கதவு திறந்தது. உழவர்களுக்குரிய எளிய உடை அணிந்த ஒருவன் நிலையருகே நின்றான். வலிமைவாய்ந்த உடலை வாயிலுக்குள் புகுத்தும் பொருட்டு இடத்தோளைச் சற்றே துருத்தினான் அவன்.

''தயை செய்து மன்னிக்க வேண்டும். காரியமாக வந்திருக்கிறேன். என்னை மட்டும் பொறுத்த விஷயமாயிருந்தால் உங்கள் அமைதியைக் குலைத்திருக்கமாட்டேன். சில எலுமிச்

சம் பழங்கள் கொணர்ந்திருக்கிறேன், இதோ.''
இப்படித் தடதடவென்று கூறினான்.

பேராசிரியர் அடித்த சிலை போல் நின்றார். அந்த முகத்தையும், எஃகு நிறக் கண்களின் அந்த மினுமினுப்பையும் அவர் அடையாளங் கண்டுகொண்டார்.

''என் பெயர் ஸாலுமான் ஆரான்'' என்று கூறிப் புன்னகையுடன் கையை நீட்டினான் உழவன்.

ஏதோ விசித்திரப் பொருளைப் பார்ப்பது போல் அக்கரத்தை நோக்கிய நான்பா, என்ன நடந்தது என்று தாமே நிதானிக்கு முன் அதைத் தம் கையால் பற்றினார். இயந்திரம் போல அதை இறுகப் பிடித்த போது அதன் கரடுமுரடான காய்ப்புகள் நான்பாவின் கைக்குத் தெரிந்தன. இந்தக் காய்ப்புகளின் பரிசம் மின்சாரம் பாய்வது போன்று அவரைத் தூக்கிவாரிப் போட்டது.

''எனக்குத் தெரியும்'' என்று மென் குரலில் கூறி, வந்தவன் அமர்வதற்காக நாற்காலியை நகர்த்தினார் பேராசிரியர். திடீரென அவர் முகம் வெட்கத்தால் கன்றிச் சிவந்தது.



## தெரெனிக் தெமிர்ச்சான்

தெரெனிக் தெமிர்ச்சான் *(1876-1956)* தலைசிறந்த ஆர்மீனிய எழுத்தாளர்களில் ஒருவர். உரைநடை, கவிதை, நாடகம், கிண்டல், சிறுகதை, பாடல் ஆகிய பல துறைகளிலும் கைதேர்ந்த திறமை வாய்ந்தவர்.

''இலக்கியமும் கலையும் மின்னல் போன்றன, மின்னல் கோழையாக இருக்க முடியாது எனப் பல ஆண்டு அனுபவம் எனக்குக் கற்பித்திருக்கிறது'' என்று தெமிர்ச்சான் ஒரு முறை

கூறினர். கலைஞரின் இந்த விவேகமும் துணிவு மே அவரது மேதையின் சிறப்பியல்புகள்.

தெமிர்ச்சான் சரித்திர நாவல்கள் (''வர்தனுன்'' முதலியன), சமகால விஷயங்கள் பற்றிய கதைகள், தத்துவக் கவிதைகள் முதலியன எழுதியுள்ளார். அவரது வசன கவிதைகள் எல்லாவற்றிலும் மிகச் சிறந்தது ''சர்காய்'' எனலாம். சர்காய் என்ற சொல்லின் பொருள் தாக்குவோர் பாட்டு, அறைகூவும் பாட்டு என்பதாகும்.

## சர்காய்

### ஒரு கவிதை

காரவான்—வர்த்தகக் கூட்டம் — பாலை வனத்தின் லயமாக இலகியது. இந்த லயம் ஒட்டகத் திமில்கள் எழுந்தெழுந்து தணியும் அசைவிலே வெளிப்பட்டது. அவையோ, சுமை யேற்றிய தோணிகள் போன்று மணலலைகளில் ஆடிச் சென்றன.

வழிப்போக்கர்கள் நெடு நேரமாகவே களைத்துப் போயிருந்தனர். இல்லை, களைக்க வில்லை, அவர்கள் உணர்வுதான் மழுங்கிப் போ யிருந்தது, பாலைவனம் அதை மரக்க அடித் திருந்தது.

காரவானுக்கு முன்னே கம்பீரமாக நடந் தது ஒற்றைத் திமில் கொண்ட வழிகாட்டி ஒட்டகம் நார். மேலும் கீழுமாக அசைந் தாடிச் சென்ற அதன் தோற்றத்திலேயே மிடுக் கும் பெருமிதமும் மிளிர்ந்தன. அதன் மேல் அமர்ந்திருந்தாள் அழகிய இளநங்கை நிங்கீல்.

மலைத் தொடர் பெயர்ந்து செல்வது போல ஒன்றன் பின் ஒன்றாக அதைத் தொடர்ந்து நடந்தன மற்ற ஒட்டகங்கள்.

ஒட்டகங்களின் மீது சலங்கைகளும் மணிகளும் ஆரங்களாக அணியப்பட்டிருந்தன. அவை மெல்லெனக் கிணுகிணுத்தன; 'டிங்-டாங்' என இசைத்தன.

மணிகள் ஒன்றை யொன்று அழைத்தன; நலம் விசாரித்தன; ஊசலாடின; வழிப்போக்கர்களைத் தாலாட்டின.

எல்லோருக்கும் முன்னே ஒளிர்ந்தாள் நிங்கீல். வழிகாட்டி ஒட்டகமான நார், அவளை முன்னே, இன்னும் முன்னே, கடலலை போல வாரிச் சென்றது. அடுத்த ஒட்டகத்தின் முதுகில் உட்கார்ந்திருந்த இப்ராஹீம் கான், தூக்கக் கிறுக்கத்தால் துவண்டு துவண்டு குறுகினான்.

பின்பு அலைமேல் அலையாகப் பெருகிவந்தன வர்த்தகச் சரக்குகள்—மலர்வண்ண இரத்தினக் கம்பளங்களும், நறுமணப் பொருள்களும் நிறைத்த பெருந்தொகையான சிப்பங்கள்.

அவற்றின் பின்னே வந்தது அலி நிஜாம் ஏறியிருந்த ஒட்டகம். இப்ராஹீம் கானின் காரியஸ்தன் இவன். கறுப்பேறி, வெப்பத்தால் புகையுண்டு, குரங்கு போல் தோற்றமளித்தான்.

அவனோடு ஒத்தசைந்தாடி வந்தான் கொ

மான்ஷாஹ்ற வர்த்தகனை ஹாசேன், கன்னங்க றேலென்ற சுருட்டைத் தாடியினன்.

குமாஸ்தாவும் தத்துவாசிரியனுமாக ஒரே சமயம் பணிபுரிந்த புர்கான் என்பவன் அவன் பின்னுல் வந்தான். அவனது துருத்திய தாடி தழல் போன்ற செவ்வண்ணம் ஏற்றப்பட்டிருந் தது. அதே நிறங்கொண்ட அவன் தலைமயி ரும் வானைக் குத்துவது போலக் குச்செறிந்து நின்றது.

குமாஸ்தா ஆடியபடி யெல்லாம் தானும் ஆடி வந்தான் மொழி நூல் அறிஞனும் ஈரா னிய விஷய நிபுணனுமான சுவீடன்வாசி.

இவர்களுக்குப் பின்னுல் இன்னும் சரக்கு கள், இன்னும் மனிதர்கள், இன்னும் இரத் தினக் கம்பளங்கள், சலங்கைகள், மணிகள், 'டிங்-டாங்' இசை ஒலி.

இப்ரஹீம் கானின் கண்கள் தூக்க மயக் கத்தால் மூடிக்கொண்டன, கண்களாவது கண் கள். கிழட்டுப் பூனையின் பீளை சாடிய விழிகள். இத்தகைய கண்களை மருத்துவனிடம் காட்டிச் சிகிச்சை செய்துகொள்வது அவசியம். அதற் காகத்தான் இப்ரஹீம் கான் தெஹ்ரான் சென் றிருந்தான். அதோடு அதாக, தனது தானியக் களஞ்சியத்துக்கு நெருப்பு வைத்த மூன்று கலகக்காரர்கள் தூக்கிலிடப்படுவதையும் கண்டு களிக்க விரும்பினன்.

தூக்குண்ட கலகக்காரர்கள் மூச்சுத்திணறி மடிந்தார்கள். இந்தக் காட்சி கிழ இப்ரஹீம் கானுக்கு வேடிக்கையா யிருந்ததாம். அவன் ஒரேயடியாக உற்சாகமடைந்து குழந்தை போலக் குதூகலமாகச் சிரித்தானும். அதன் பின் பும் சில நாட்கள் கலகல வென்று இருந்தானும். அப்புறந்தான் முன்போலவே கவலைகளால் அவ னுக்கு மூச்சுத் திணறியதாம். திணருமல் என்ன செய்யும்? ஏகப்பட்ட செல்வம், அளவு சங்கை யில்லாமல் கொட்டிக் கிடக்கும் சரக்குகள். எண் ணத் தொலையாத இரத்தினக் கம்பளங்கள், அவற்றின் ஒளிமயமான, விஷமயமான வண்ணங் களில் ஒன்றே கண்களைக் கெடுப்பதற்குப் போதுமே! போதாக் குறைக்கு உழவர்களிட மிருந்து பறித்த கோதுமை வேறு அவனுடைய களஞ்சியங்களில் கிடந்து மட்குகிறது....

மணிகள் 'டிங்-டாங்' என ஒலிக்க அசைந் தாடிச் சென்றன ஒட்டகங்கள்.

திமிலுக்குத் திமில் பறந்தன தணிந்த குரலில் வெளிவந்த சொற்கள். காரியஸ்தன் அலி நிஜாம் பேசிஞன். கூட்டாளிக்கு அவன் கூறியது சரியாகக் காதில் படவில்லை. அலி நிஜாம் சொன்ஞன்:

"நிங்கீல் யாரா? உழவன் மகளப்பா! இப் ரஹீம் கானிடம் இவளை ஒப்படைக்க அப் பனுக்கு மனமே இல்லை. கிழவர்தான் கடன்

பணத்துக்குப் பதிலாக இவளை வலியப் பிடுங்கிக்கொண்டார். மகனுக்காக இந்தப் பெண்ணைக் கொண்டு போகிறார் போலிருக்கிறது. ஆனால் யார் கண்டது?... ஊம், அவளும் தாரை தாரையாகக் கண்ணீர் வடித்தாள். வடித்த கண்ணீரெல்லாம் வழியிலேயே சுவறிப் போயிற்று. சுபாவத்திலே பூப் போன்றவள். பொழுது புலர்கையில் கண்ணீர் பெருக்குவாள்; பொழுது சாய்கையில் சிரித்து மகிழ்வாள்.... என்ன? சினிமாவுக்கா? ஆமாம், போயிருந்தேன். ஊஹூம், ஒன்றும் சுவைப்படவில்லை. தெஹ்ரானிலே பாதிமா கானூமைப் பார்த்தது இந்த நஷ்டத்துக்கு ஈடு செய்து விட்டது. அவள் லாலேஜாரில் வசிக்கிறாள். அவளுக்குப் பன்னிரண்டு வயதிலே ஒரு பெண் இருக்கிறாள் பாரு... ஆகா, அற்புதமான சரக்கு....''

இப்படிச் சொல்லி ஹிஹிஹி என நகைத்தான் அலி நிஜாம். அப்புறம் பெருமூச்சுவிட்டு,

''காதல் அரசன்
காட்சிதரும் போதினிலே
ஏது செயும் நாணம்?
என்னாகும் அதனாலே?''...

என்று செய்யுள் படித்தான்.

வழிப்போக்கர்கள் இந்தச் செய்யுளைக் காது கொடுத்துக் கேட்டார்கள்.

மணிகள் மெல்லெனக் கிணுகிணுத்தன.

மீண்டும் எங்கோ பறந்து சென்றன அலி நிஜாமின் வார்த்தைகள்:

''மூன்று கலகக்காரர்களையும் தூக்கிலிட்டு விட்டார்கள். ஊஹூம், எனக்கென்னவோ கொஞ்சமும் சுவைப்படவில்லை. இப்ரஹீம் கான் தான் நானும் பார்க்க வேண்டுமென்று கட்டாயப்படுத்தி அழைத்துப் போனார்.... பகல் சாப்பாட்டிற்கு யார் யார் வந்திருந்தார்கள் என்று கேட்கிறாயா? பிரெஞ்சு விற்பனை ஏஜெண்டு, கனந்தங்கிய கவர்னர், கான் மன்ஸூர் இவ்வளவு பேர் தான்.... என்ன, காட்டுக் கோழியைக் கேட்கிறாயா? எங்களுக்கென்னவோ கொழுப்பே இல்லாதவை போலத் தான் தோன்றின. சமையல்காரன் ஏதோ சூது பண்ணியிருக்கிறான்.... கனந் தங்கிய கவர்னருக்கு எல்லாவற்றையும் விட முக்கியமாகப் போர்ட்வயின் மிக மிகப் பிடித்தது.... அந்த விஷயமா? ஆமாம், மொத்தத்திலே எல்லாம் நமக்கு அனுகூலமாகவே நடந்தது. அவன் மிகவும் அக்கறையோடு முயற்சி செய்தான். கலகக்காரர்களில் ஒருவனுடைய கையை வாளால் துண்டாக வெட்டி விட்டார்கள்.... இல்லை, மருத்துவர் வீடுவரை ஓட அவனால்

முடியவில்லை. சதுக்கம் போய்ச் சேர்ந்ததுமே விழுந்துவிட்டான். இரண்டாவது கலகக்காரன் பக்தியார்களிடம் அடைக்கலம் புகுந்து ஒளிந்து கொண்டிருக்கிறுன். இருந்தாலும் தப்புவ தெங்கே? அவன் கூட்டாளி ஒருத்தனைத்தான் பணங் கொடுத்துக் கைக்குள் போட்டுக் கொண் டாகிவிட்டதே!... என்ன? ஆமாம். மோட்டா ரில் வீடு திரும்பலாம் என்று இப்ராஹீம் கானுக்கு யோசனை சொல்லத்தான் சொன்னேன். அவர் தான் ஒட்டகமே மேல் என்றுவிட்டார். அவ ருடைய தாயார் மோட்டாரைச் 'சைத்தா னின் இயந்திரம்' என்பாள். தன் வீட்டருகே அதைக் காணவே அவளுக்கு ஆகாது. பெரிய வருக்குத்தான் தாயார்மேல் மிகவும் மதிப்பா யிற்றே. ஆமாம், ரொம்ப பக்திமான், துறவி வாழ்க்கை வாழ்பவர். தவிரவும் மோட்டாருக் கேற்றபடி பாதையும் சீராயில்லை அல்லவா? தகப்பனுர், பாட்டனுர் காலத்திலே எப்படி இருந்ததோ அப்படியே தானே இப்போதும் இருக்கிறது?... அதிலென்ன சந்தேகம்? ஒட் டகப் பயணம் சுலபம் தான். தங்கித் தங்கி, அவசரப்படாமல்....''

மேற்கே பகலின் செஞ்சுடர் துடிதுடித் தது. அவ்வளவுதான். தின விளக்கு அவிந்து போயிற்று.

கூன் விழுந்த திமில்களும் தாமிர நிறமும்

வாய்ந்த ஒட்டகங்கள், நூற்றுண்டுகள் போல மெள்ள நகர்ந்தன. துயரந் தோய்ந்த, அவற்றைப் போன்றே தொன்மையான இசைகள் அவற்றின் மணிகளிலிருந்து ஒலித்தன.

''டிங்'' என மணி மணியை அழைத்தது.

''டாங்'' என்று மணிக்குப் பதிலளித்தது மணி.

சலங்கைகள் ஓடைகள் போலச் சிலம்பின. அவற்றின் மென் சிலம்பல் காற்றில் சுழியிட்டது.

பாதை தனது எண்ணங்களில் ஆழ்ந்திருந்தது.

பாதை, துயரம் பொங்கிப் பெருகும் குறுகிய ஆறுகும். நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் போய், நாலா புறமிருந்தும் ஏக்கத்தையும் சிந்தனையையும் வாரித் திரட்டி வருகிறது அது. போகப் போக அகன்று பெருகி, உலகெங்கும் இவற்றைப் பரப்புகிறது. பாலைவனத்தின் இதே பாதை வழியே ஒரு காலத்தில் வீரர்கள் வெற்றி முழக்கத்துடன் அணிவகுத்துச் சென்றுர்கள், பின்னர் தொலை தூரத்திலே பொல பொல வென உதிரும் இலைகளைப் போலச் சிதறி மறைந்து போனுர்கள். மூட்டை மூட்டையாகக் கோதுமை, பன்னீர், குர்மாப் பேரீச்சை, பட்டு, பாஷாணம், அன்பு வாழ்த்துகள், மரணதண்டனை உத்தரவுகள் அடங்கிய முத்

திரை யிட்ட உறைகள் முதலியவற்றை எடுத்துக் கொண்டு எத்தனை எத்தனையோ காரவான்கள் இவ்வழியே சென்றிருக்கின்றன.

இவற்றை யெல்லாம் பற்றி எண்ணமிட்டவனாக நிங்கீலின் ஒட்டகத்தருகே நடந்தான் நாடோடி ரீஜா. அலங்கோலத் தோற்றமும் புழுதி படிந்த மேனியுமாக விளங்கினான் அவன். மணலும் பருக்கைக் கற்களும் அவனது வீங்கிய கால் விரல்களை உறுத்தின. கடல் நுரை போலப் பிய்ந்து சிதைந்திருந்தன அவன் காலணிகள்.

''என்னே பரிதாபம்! இத்தகைய நாயின் வாய்க்குள்ளே தள்ளிவிட்டார்களே குழந்தைப் பெண்ணை!'' என நிங்கீலைக் கடைக் கணித்தவாறே முணுமுணுத்தான் ரீஜா.

அருகே வந்து கொண்டிருந்த ஒட்டகக்காரர்கள் தலைவன் இதைக் கேட்டு முகஞ் சுளித்து, ''உனக்கு என்ன அப்பா வந்தது? உன் தலைவலி அல்லவே!'' என்று தான்.

ரீஜா நாடோடி, பையும் தோளுமாக ஓடு காலியாய்த் திரிபவன். ஆங்கில-ஈரானிய எண்ணெய்க் கம்பெனியில் தொழிலாளியாகவும், பந்தர் புஷீரில் துறைமுகக் கூலியாகவும், கிலானில் பண்ணைக் கூலியாகவும் வேலை பார்த்திருக்கிறான். நாடோடியாக அலைந்து திரிந்தது தான் எல்லாவற்றையும் விட அதிகம். இதோ

காரவானுடன் நடக்கிருன். எங்கே? ஒளிமிக்க புது நாளுக்கோ அன்றித் தூக்கு மேடைக்கோ? இதை அவன் விதியே அறியும். ஒன்றுமட்டும் கூற வேண்டும். ரீஜா தனியன் அல்ல. அவனைப் போன்றவர்கள் எத்தனையோ ஆயிரம் பேர். அவர்கள் ஈரான் முழுவதிலும் சுற்றித் திரிகிருர்கள். காரவான் சாவடிகளில் கதைகள் சொல்வது அவர்கள் வழக்கம். இந்தக் கதைகளை அவர்கள் வெறுமே கற்பனை செய்வதில்லை. உழவர்களின் வாழ்விலிருந்தோ, தங்கள் சொந்த அனுபவங்களிலிருந்தோ, எடுத்துக் கூறுவார்கள். செல்வர்கள் இந்தக் கதைகளைப் பொருட்படுத்துவதில்லை. வறியவர்களும் எளியவர்களுமோ விரும்பிக் கேட்பார்கள். இந்தக் கதைகளில், ஊர் பேர் தெரியாதவர்கள் மூட்டும் தங்க நெருப்பால் தானியக் களஞ்சியங்கள் தீப்பட்டு அழியும்; செங்குருதி பெருகும்; கண்ணீர் ஊற்றெடுக்கும். இந்தக் கதைகளிலே, சொல்லுபவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் அபாயம் பொங்கும்.

ஒட்டகக்காரர்கள் தலைவன் சிடுசிடுத்த முகத்தினன்; வாழ்வில் அடிபட்டவன்; அனுபவம் மிகுந்தவன். ரீஜாவிடம் அவனுக்கு அச்சம் தானே தவிர வெறுப்பு ஒன்றும் கிடையாது.

ரீஜா சற்றுப் பின் தங்கினன், இப்போது அவன் இப்ரஹீம் கானின் ஒட்டகத்துக்குச்

சரியாக நடந்தான். கீழிருந்தபடியே ஓரக்கண் ணுல் இப்ரஹீம் கானேச் சினந்து நோக்கினுன். கான் ஒரேயடியாகக் கூனிக் குறுகி உட்கார்ந் திருந்தான். அவன் முகமோ, வெம்பி உதிர்ந்த காட்டு ஆப்பிள் போலச் சுருங்கிச் சவுங்கியிருந் தது. அவனது தோளோடு தோளாக நடந்த ரீஜாவின் குல்லாய் பிடர்த்தலையில் இருந்தது. கைகள் முதுகுப் புறம் கிடந்தன. உழவனுன அவனது அகன்ற நெற்றி பளபளத்தது, அதி லிருந்து குபுகுபு வெனப் பொங்கி வழிந்தன கொதிப்பும் உவர்ப்பும் நிறைந்த வியர்வைத் துளிகள்.

கணப்போது கண்களே மூடிக்கொண்டான் ரீஜா. கண்களுக்குள்ளே தெரிந்தது ஒரு காட்சி. காட்சியா? அல்ல. ரீஜாவின் கனவில் தோன்றி ஞள் அவன் செல்வ மகள், ஒட்டியுலர்ந்த மேனி யும் எலுமிச்சம் பழ நிறமும் கொண்டவள். பருத்தி விளேயில் உதவியாளாக வேலே செய்து கொண்டு நின்ருள். முற்ற முழுக்கப் பத்து வயது தான் இருக்கும். அதற்குள் எலும்புக் கூடாய் இருந்தாள். குளிர் சுரம் அவளது சத் தை எல்லாம் உறிஞ்சிவிட்டது. குழந்தைப் பெண் இளமை அரும்பு முன்பே கிழடுதட்டி வாடிப் போனுள். சாவின் கொடு நகை அதற் குள் அவள் கண்களில் நிழலாடியது. அவற்றி லோ இன்னும் வாழ்வு வேட்கை ததும்பியது.

பருத்தி விளையருகே சென்றிருந்த போது கடைசி முறையாக இதே கோலத்தில் தான் அவளை ரீஜா கண்டான். அவ்வேளையில் தெரு விலே கல் உடைத்துக் கொண்டிருந்த ஒருவன், எங்கேயோ பார்ப்பவன் போல அவனைச் சை கையால் அழைத்தான். சிகரெட் பற்றவைக்கும் பாவனையாக அவன் பக்கம் குனிந்தான் ரீஜா.

''கிலானிகள் சிறையில் இருக்கிறார்கள்.... 'அரட்டை' தூக்கிலிடப்பட்டான்.... 'திரி' தப்பி ஓடிவிட்டான். நீயும் ஓடிப் போய்விடு'' என்று தணிந்த குரலில் கூறினான் அம்மனிதன்.

ரீஜா தன் அருமை மகளைக் கடைசித் தரம் பார்த்துவிட்டு, திரும்பி வீட்டை நோக்கி நடந் தான்.

வீட்டிலே மனைவி சாகக் கிடந்தாள். எந்த உதவியும் கேட்காமல் வாய்க்குள் முனகினாள். ஒரு மாதமாக அவள் வயல் பக்கமே போக வில்லை. வேலையுமில்லை, கூலியுமில்லை. சாவு தான் நெருங்கிக் கொண்டிருந்தது. அது வந்து தொலைந்தால் ஒரு பாடாய்ப் போகும். அது தான் அலைக்கழிக்கிறதே.

ரீஜா கோழிக் குடிலுக்குள் போனான். அங்கே ஒரு குஞ்சுதானும் இல்லை. சுவர் இடுக் கில் செருகியிருந்த எண்ணெய் தடவிய கத்தி யை உருவினான். பைக்குள் பத்திரமாக வைத்துக் கொண்டான். தன் வாழ்வைப் போலவே கைத்

துப்போன கரும் புகையிலை நறுக்குகளை அரித்துத் திரட்டிக் கொண்டான். வெறுமையாய்க் கிடந்த ரொட்டிக் கூடையைப் பார்வையிட்டான். சிந்தனை செய்தான். பின்பு வீட்டிற்குள் திரும்பி வந்து மனைவியைப் பார்த்தான், விடை பெறும் பொருட்டு அவளிடம் ஏதாவது சொல்ல விரும்பினான். வாயிலிருந்து வார்த்தையே கிளம்பவில்லை. சொல்வதற்கு எத்தனையோ விஷயங்களிருந்தன. எதைச் சொல்வது, எதை விடுவது? பேசாமல் வாயில் புறம் சென்றான். தனக்கு ஓர் இன்ப மலர் கூட அரும்பாத தரைமீது தூ வென்று காறி உமிழ்ந்தான். வீட்டைவிட்டு விடுவிடென நடந்தான்.

பொழுது சாய்ந்துவிட்டது. பண்ணைக் கூலிகள் வீடு திரும்பினார்கள். ரீஜா கால்களைக் கழுவிக்கொள்வதற்காக ஓடையருகே தாமதித்தான்.

சூரியன் மறைந்தான். நிலம் பழுப்புப் போர்வை போர்த்துக்கொண்டது. பின்பு எங்கும் காரிருள் கவிந்தது. அப்போது இரவின் கருமையில் புகுந்து விரைந்தான் ரீஜா. சாலை வழியே நடந்தான். ஆபத்துகள் நிறைந்த நெடுந்தொலை யிடங்களை நோக்கிச் சென்றான்.

சாலையோடு நடந்து கொண்டே, கல் உடைப்பவன் சொல்லிய சொற்களை மனதுக்குள்ளே திரும்பச் சொல்லிக்கொண்டான்:

''கிலானிகள் சிறையில் இருக்கிறார்கள்.... 'அரட்டை' தூக்கிலிடப்பட்டான்.... 'திரி' தப்பி ஓடிவிட்டான்....''

வாழ்க்கைச் சுருள் அவிழத் தொடங்கி விட்டது. அடுத்தாற்போல அவன் முறை போலும். கிராமங்களிலும் நகரங்களிலும் சுற்றித் திரிந்து கொண்டிருந்த மற்றவர்களின் முறை அப்புறம் வரும். துன்புற்றுச் சோர்ந்த போதிலும் சலிப்பின்றி அலைபவர்கள் இவர்கள். புகையிலைச் சுங்கான் குழாயில் படிந்த நஞ்சு போலக் கடுப்பேறியவர்கள் இவர்கள்.

முதுகிலே வாழ்வைச் சுமந்துகொண்டு நடவா நடை நடந்தான் ரீஜா. தன் உதிரத்தைப் பெருக்குவதற்காக நடந்தான். உதிரம் வெறும் நீரல்லவே....

ரீஜா, எண்ணங்களில் உழம்பியவனுகக் காரவானுடன் நடந்தான்.

''டிங்-டாங்'' என ஒலித்தன மணிகள். இந்த ஒலியினுல் திடுக்குற்று, ரீஜா விழித்துக் கொண்டான்.

துயர இருள் கவிந்த ஒட்டகத்தின் முதுகிலே அமர்ந்து, அலைபோன்று முன் சென்றாள் நிங்கீல். கரடுமுரடான பாதையில் கால்கள் வழுன்று தேய, மீண்டும் அவள் அருகாக நடந்தான் ரீஜா.

நிங்கிலைக் காணும் தோறும் ரீஜாவின் நெஞ்சு எதனுலோ சுரீர் என்றது. ஒளிமயமான இன்ப நெருப்பாகச் சுடர்ந்தாள் அவள். அந்தச் சுடர்தான் அவன் கண்களை ஈர்த்ததோ?

அவள் மிகுந்த அழகி. நாண்பூட்டிய வில்லில் தொடுத்த அம்பு போலத் தொடுவானின் நீலத்தைக் கிழித்துச் சென்ருள். ஒட்டகத் தோடு ஒன்றிவிட்டாள் அவள். ஒட்டகமும் அவளும் ஒன்ருக அசைந்த காம்பீரியம் கவிதை போல, காரவானின் சங்கீதம் போல எழில் திகழ்ந்தது.

நிங்கில் ரீஜாவை நோக்கி முறுவலித்தாள். வழிகாட்டி ஒட்டகமோ, கோணலாக முறைத்துப் பார்த்தது.

ஒட்டகம் பிரமாதமாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதன் மீது அணிகள் வீணுனவையாக, வேண்டாதவையாகக் காணப்பட்டன. அவற்றை அணிந்திருந்த ஒட்டகத்திற்கோ, அளவற்ற ஆத்திரம் மண்டிக் கொண்டிருந்தது. மேலிருந்த அற்புதச் சுமை—நிங்கில் அதற்குச் சிறிதும் மகிழ்வூட்டவில்லை. பொன் சலங்கைகளும் பட்டுக் குஞ்சங்களும் மற்ற அலங்காரங்களும் அதற்குக் கொஞ்சமேனும் களிப்புண்டாக்கவில்லை. இந்த வண்ண அணிகளெல்லாம் அதற்குச் சலித்துப் போயிருந்தன. இவற்றை அது லட்சியமே செய்யவில்லை.

செருக்கு மிக்கது அவ்வொட்டகம். எவரையும் அது பார்ப்பது அரிதே. எல்லோரும் தன்னையே நோக்க, தான் எவரையும் பார்க்காது, காலம் போன்று பீடு நடை நடந்தது அது.

திடீரென ஒட்டகம் தலையை நிமிர்த்தியது. இடப்புறமும், பின்பு வலப்புறமும் அதைத் திருப்பியது. அப்புறம் முன்னே தொலையில் பார்வையைச் செலுத்தியது. அகந்தை மிக்க தீர்க்கதரிசி ஒருவன் உலகத்திற்குச் சாபம் கொடுக்க ஆயத்தமாவது போலிருந்தது அதன் பார்வை. வெறுப்பு, ஒரே வெறுப்பு அதன் கண்களிலிருந்து அழல் வீசியது. வாய்க்குள்ளாகவே குமுறிக்கொண்டு, மகிழ்வின்றி நடந்தது அது. எதனுல் குமுறுகிறது? சுமையின் கனத்தாலா? வெப்ப மிகுதியாலா? இல்லை, பசியாலா? களைத்துவிட்டதா? ஒன்றும் விளங்கவில்லை. இருந்தாற்போலிருந்து அது எக்காள முழக்கமிட்டது—தொன்மையான, ஆயிர வருஷத்திய முழக்கம், குமிழியிட்டுப் பொங்கும், வெறுப்பு பீறிடும் முழக்கம்.

இந்த முழக்கத்திலே வேறு ஒன்றும் தொனித்தது. ஆழங்காண முடியாத, அளவற்ற சோகம் அது.

தனக்குள் குமையும் இந்தச் சோகத்தை வேறு எவ்வகையாலும் வெளியிட ஒட்டகத்தால் முடியாது.

மொழிநூல் அறிஞனை சுவீடன்வாசி ஒட்டகத்தைக் கூர்ந்து நோக்கினான். இதன் ''உளவியலை'' எப்படியாவது பகுத்தாராய்ந்து இந்த விந்தை மிருகத்தைப் புரிந்துகொள்ள முடியாதோ என எண்ணமிட்டான் அவன்.

செந்தழல் நிறமுள்ள குத்திட்ட தாடியின னை குமாஸ்தாவை விளித்தான்.

''ஏனப்பா, மிர்ஜா. ஒட்டகம் ஏன் இவ் வளவு ஏக்கமாயிருக்கிறது?'' என்று கேட் டான்.

'தழல் தாடி' அவன் கேள்வியைக் காதி லேயே போட்டுக்கொள்ளவில்லை. எதையோ பற்றிச் சிந்தித்துக்கொண்டு, எதையோ பற்றிக் கனவு கண்டு கொண்டு, வெறும் வெளியை நோக்கியிருந்தான். அவனது மங்கிய கண்கள் இடுங்கியிருந்தன. அவனுக்குப் பதிலாக மொழி நூலறிஞனுக்கு விடையளித்தான் கெர்மான் ஷாஹ் வர்த்தகன் ஹுசேன்.

''ஒட்டகத்துக்கு வேறு என்ன பொழுது போக்கு? ஏங்குவதும் சுமை தாங்குவதும் தான் அதன் வேலை'' என்றான் அவன்.

ஒட்டகங்கள் ஆடி அசைந்தவாறு நடந் தன. வழிகாட்டி ஒட்டகமான நார் மணி கிணு கிணுக்க முன் சென்றது. அதன் முதுகின் மீதிருந்த நிங்கீல் கடலலை போன்று அசைந் தாடினாள்.

நிங்கிலைக் கண் ஜாடையால் காட்டி, ''எத் தகைய மாமணியைச் சுமந்து செல்கிறோம் என்று ஒட்டகம் மட்டும் அறியுமானால்!'' என மறுபடியும் குமாஸ்தாவிடம் கூறினான் மொழி நூலறிஞன்.

'தழல் தாடி' புன்னகை பூத்தான். தத் துவச் செய்யுள் அவன் வாயிலிருந்து வெளிப் பட்டது.

''வளரிருளும் ஏக்கமுமே
மண்டுமிரா அதன்மேலே
ஒளிரோஜா நகையரும்ப
உதயமலர் பூத்திடுமே!
களியெங்கும் பரப்பிடுமே,
கவலை யெலாம் மாய்த்திடுமே.
உளமார்ந்த என் நண்பா,
நம் வாழ்வும் இத்தகைத்தே''

எனப் பாடினான்.

மொழிநூலறிஞன் புன்னகையுடன் சிந்தித் தவாறு, ''நம் வாழ்வும் இத்தகைத்தே'' என்று வாய்க்குள்ளாகவே முணுமுணுத்தான்.

'தழல்தாடி' செய்யுளைத் தொடர்ந்தான்:

''இதயத்தின் ஏக்கமெலாம்
திரண்டிருண்ட இரவின்றேல்
உதயத்தின் மகிழ்பொங்கும்
ஒளிச்சிறப்பை உணர்வார் யார்?
கதையில்லை, உண்மையப்பா,
நம் வாழ்வும் இத்தகைத்தே....''

அவன் மேலே தொடருமுன் மொழி நூலறிஞன் குறுக்கிட்டு, "அப்படியானல் துன்புற்ற பின்பே வாழ்வு இன்படைகிறது என்றல்லவா ஆகிறது? இது முரணுயிருக்கிறதே, மிர்ஜா?" என்ருன்.

மிர்ஜா மறுபடியும் புன்னகைத்து, செய்யுளிலேயே விடை பகர்ந்தான்:

"ஏனோதான் துன்பத்தில்
இவ்வாழ்க்கை நகைக்கிறது?
ஏனோதான் இன்பத்தில்
கவல்கிறது? யாரறிவார்?"

"டிங்-டாங்" எனக் கிணுகிணுத்தது காரவான்.

மிர்ஜா செய்யுள் படிப்பதைத் தொடர்ந்தான்:

"தழல் போலும் செவ்வண்ணம்
மலருக்குத் தந்தவன்தான்
அழல் போலும் வெவ்விடத்தை
அதனுள்ளே நிறைத்துவிட்டான்.
எழிலாரும் எப்பொருளும்
நஞ்சார்ந்த பொருளேயாம்,
அழகென்னும் எதற்குள்ளும்
அடங்கிய சத்திது கண்டாய்.
களிபொங்கும் சிரிப்புடனே
கண்ணீரும் கலந்துவரும்.

துளிமல்கும் விழிநீரைச்
சுடருறுத்தும் இன்ப நகை!
ஒளிர் மகிழ்வும் உகுநீரும்
ஒன்ருகக் கலந்திசைந்து
மிளிர்வதுவே எழில், இன்றேல்
வாழ்வு வெறும் விழலேயாம்.''

காரவான் ''டிங்-டாங்'' எனக் கிணு கிணுத்தது.

இதென்ன? பாலேவனத்தில் இருந்தாற் போலிருந்து துயர கீதம் முழங்குகிறதே! ஆ, ரீஜாவின் குரலல்லவா இது! அவன் காரவானுக்கு வெகுதூரம் முன்னே போய்விட்டான். வழிநடந்தவாறே உரக்க வாய்விட்டுப் பாடினுன்.

வழிப்போக்கர்கள் அவனது பாட்டைக் கேட்டனர்.

''சர்காய்'' எனப்படும் பாட்டு அது. தாக்கு நடத்தும் போர்வீரர்கள் பாடுவது. அதனுல் தான் அது கேட்போர் குலே பதறும்படி முன்னே முழங்கியது. பாட்டில் குமுறலும் கோபமும் பொங்கின. அடிகளும் சீற்றமும் அதிர்ந்தன. வெஞ்சினமும் போருக்கு அறைகூவலும் ஆர்ப்பரித்தன.

இந்தப் பாட்டு முழக்கத்தில் காரவான் வேறுவிதமாக அசைந்தது. சலங்கைகளும்

ும் வேறுவிதமாக ''டிங்-டாங்'' என ஒலித்தன. ஒட்டகங்களோ, முற்றிலும் வேறு விதமாக அசைந்தாடின.

வெகுட்சி நிறைந்த தனது பாட்டின் கடைசி அடிகளை அகவலாக, ஏளனக் குரலில் பாடி முடித்தான் ரீஜா. பின்பு கடுகடுப்புடன் ஏதோ உறுமினான். துப்பினான். வழியிலே நிலைத்து நின்றான். மீண்டும் காரவானுடன் சேர்ந்து நடந்த வண்ணம் ஓரளவு வெளிக் கேட்கும் படியாகவே முணுமுணுத்தான்:

'' 'கிலானிகள்' சிறையிலிருக்கிறார்கள்.... 'அரட்டை' தூக்கிலிடப்பட்டான்.... 'திரி' தப்பி ஓடிவிட்டான்....' ஐயோ, நிங்கீல்!''

இப்படிக் கூறி, பொறி பறக்கும் கண்களால் நிங்கீலை உறுத்துப் பார்த்தான்.

இப்ரஹீம் கானின் காரியஸ்தனான அலி நிஜாம், ''அங்கே என்னப்பா பாடினாய்?'' என்று ரீஜாவிடம் கேட்டான். அவன் குரலில் கலவரம் தொனித்தது.

''இப்படித்தான், ஏதோ ஒரு பாட்டு....''

''எனக்குத் தெரியும். திருடர்களும் வழிப் பறி செய்பவர்களும் பாடுவதல்லவா இந்தப் பாட்டு?''

''இருக்கலாம்: ஆனாலும் வழிநடைக்கு ஏற்ற பாட்டு. நடக்க நடக்க வழிக்கு முடிவையே காணோம். இந்தப் பாட்டைப் பாடுகிறோம்,

பார்க்கிறோம், சேர வேண்டிய இடம் வந்தாகி விட்டது! அப்படிப்பட்டதாக்கும் இது!''

அலட்சியமாகப் புன்னகை செய்தான் அலி நிஜாம்.

''பாதை முடிய வேண்டிய அவசியந்தா னென்ன உனக்கு? ஊம்? காரவாளேடு நடந்து கொண்டே இரேன்!''

''நீ ஒட்டகத்தின் மேலே இருக்கிறாய். என் விருப்பத்தை எப்படிக் காண்பாய்? இறங்கி நடந்து பார், அப்போது தெரியும் வழி முடிவ தன் அவசியம் என்ன என்று.''

''இறங்கி நடந்தால் என்ன ஆகுமோ?''

''பிரமாதமாக ஒன்றும் ஆகாது. மிதியடி கள் தேய்ந்து, காலுறைகள் நைந்து, உள்ளங் கால் தோலெல்லாம் வழன்று போகும், அவ் வளவுதான்.''

''தோல் வழன்று போகுமாக்கும், போ கட்டுமே. என்ன குடிமுழுகி விடும்? புதிய தோல் முளேக்கிறது!''

''இறங்கி நடந்தால் ஆன்மாவே வழன்று போகிறதப்பனே. ஆன்மாவுக்குத் தோல் கிடை யாதே!''

''வழன்று போகட்டுமே ஆன்மா? உனக் கெதற்காம் அது?''

இப்படிச் சொல்லி விஷச் சிரிப்புச் சிரித் தான் அலி நிஜாம். கெர்மான்ஷாஹ் வர்த்தகன்

ஹுசேன் இதைக் கேட்டு மகிழ்ச்சி பொங்க உரக்க நகைத்தான்.

சலங்கைகளும் மணிகளும் ''டிங்-டாங்'' இசையைத் தொடர்ந்து

''இந்தா அப்பா, நிறுத்து! இங்கேயே தங்குவோம்!''

இவ்வாறு உத்தரவிட்டவன் இப்ரஹீம் கான். அவனுக்கு இளைப்பாற விருப்பமுண்டாகி விட்டது. ஒரு கோப்பை காப்பி பருக வேட்கை கொண்டான் அவன். பாலைவனத்தின் குளுகுளு வென்னும் இரவில் கொஞ்சம் படுத்து உறங்கவும் அவனுக்கு ஆசை.

ஒட்டகக்காரர்கள் தலைவன், வழிகாட்டி ஒட்டகமான நாரின் மூக்குக் கயிற்றைப் பிடித்துத் தொங்கினன். அலைகள் போன்று ஆடிக் கொண்டு ஒட்டகங்கள் ஒன்றன் பின் ஒன்ருக நின்றுவிட்டன. சலங்கைகள், மணிகளின் இசையொலி அடங்கிவிட்டது. ஏதாவது ஒற்றைக் கிணுகிணுப்பு மட்டுமே பொருபொருத்த மணலில் துளித் துளியாக விழுந்து சுவறியது.

''இறங்குங்கள்!''

ஒட்டகங்கள் உரக்க உறுமியவாறு முழங்கால்களை மடித்துக் குனிந்துகொடுத்தன.

களைப்பினால் தூங்கி வழிந்த பிரயாணிகள் மணலில் இறங்கினார்கள்.

ஆட்கள் வழியை விட்டு ஒதுங்கிப் பல வண்ணக் கம்பளங்களை மணல்மீது விரித்தார்கள். இப்ராஹீம் கான் தங்குவதற்குக் கூடாரம் அடிக்கப்பட்டது.

நிங்கீல், நாரின் முதுகிலிருந்து இறங்கி, கானின் கூடாரத்துக்குள் சென்றாள். போனதுமே இரத்தினக் கம்பளங்களில் அப்பாடா என்று படுத்துக்கொண்டாள்.

மற்றவர்கள் நெகிடித் தீ மூட்டினார்கள். அதைச் சுற்றி உட்கார்ந்துகொண்டனர் வியாபாரிகள். அவர்களோடு காரியஸ்தன் அலி நிஜாம், குமாஸ்தா 'தழல் தாடி', சுவீடன் வாசியான மொழி நூல் அறிஞன் மூவரும் அமர்ந்தார்கள்.

அவர்களுக்குச் சற்று அப்பால் ஒட்டகக் காரர்களும் சாதாரண வழிப் போக்கர்களும் படுத்தனர்.

சில நிமிடங்கள் கொஞ்சம் களேபரம். அப்புறம் சந்தடி அடங்கிப் போயிற்று.

பாலைவனம் மௌனத்தில் ஆழ்ந்தது. நெகிடி நெருப்பு மெல்லெனச் சடசடப்பதும் ஜெபமாலைகள் ஒரே நிதானத்துடன் டக்டக்கென ஒலிப்பதும் மட்டுமே கேட்டன.

ஒட்டகங்களில் ஒன்று மாத்திரம் நெடு நேரம் அமைதியுறவில்லை. அதை முழங்கால் படியிடச் செய்யும் பொருட்டுக் கயிறுகளால் பளார் பளாரென அடித்தார்கள். அப்படியும் அது குனியாமல் நிமிர்ந்தே நின்று பெரு முழக்கமிட்டது.

அதன் முழக்கத்தைக் கூர்ந்து கேட்டான் சுவீடன்வாசி.

''கனவான்களே, இந்த முழக்கத்தில் எதிர்ப்பு தொனிப்பதாக எனக்குப் படுகிறது. இது குறைபாட்டின் குமுறல் தான், சந்தேக மே இல்லை. இப்படித்தான் இந்த முழக்கத் துக்கு நாம் பொருள் செய்துகொள்ள வேண்டும்'' என்று விளக்கம் கூறினான்.

கெர்மான்ஷாஹ் வர்த்தகனான ஹுசேன் தனது சிப்பங்கள்மீது சாய்ந்தவாறே நிதான மாகப் பதிலளித்தான்.

''இது குறைபாட்டின் குமுறல் அல்ல. வாழ் வில் என்ன நேர்ந்தாலும், எல்லாச் சந்தர்ப்பங் களிலும், சுமையுடனும் சுமையின்றியும், பசித்தபோதும் வயிறு நிறைந்திருக்கும் போ தும், ஒட்டகம் இப்படித் தான் முழக்கமி டும்....'' சுங்கானை வாயில் வைத்துப் புகையை இழுத்து விட்டுவிட்டு ஹுசேன் தன் பேச்சைத் தொடர்ந்தான். ''ஒட்டகம் வெறுமே, எவ் வித அர்த்தமும் இல்லாமலே முழக்கமிடும்.

எதற்காகக் கத்துகிறோம் என்று அதற்கே தெரியாது. அதற்குத்தான் தன் குரல் கேட்பதே கிடையாதே'' என்றான்.

''இருக்கலாம். ஆயினும் எதையோ வேண்டத்தானே செய்கிறது!'' என்று குறித்தான் மொழிநூல் அறிஞன்.

''அது நெடுங்காலமாகவே வேண்டுகிறது. எதை என்பதுதான் விளங்கவில்லை. ஆயிரமாயிரம் ஆண்டுகளாகக் காரவான்களில் அது நடந்த வண்ணமா யிருக்கிறது. மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது ஒட்டகம் எப்படிப்பட்டது எனத் தெரிந்துவிட்டதுபோல நமக்குத் தோன்றும். உண்மையிலோ, ஒட்டகத்தைப் புரிந்துகொள்ள எவராலுமே முடியாது. விளங்காப் புதிர் இந்தப் பிராணி!'' என்று ஜெபமாலையை உருட்டிக்கொண்டே அவசரப்படாமல் கூறினான் வியாபாரிகளில் ஒருவன்.

ஜெபமாலையின் மணிகள் டக்டக்கென ஒலித்தன.

''இந்த மிருகம் இருக்கிறதே, இது பேசா விலங்கு. குறை சொல்லுவதே கிடையாது. இந்த முழக்கம் அதன் உள்ளத்திலிருந்து எழுவதல்ல போலும். நாள் கணக்காக, வாரக் கணக்காக, மாதக் கணக்காக அது இடைவிடாமல் நடந்துகொண்டே இருக்கும். தீனியோ, தண்ணீரோ, இளைப்பாறலோ எதுவுமே கேட்

காது. ஒரே மௌனம். ஒரு தொந்தரவு கிடையாது அதனால். உள்ளத்தில் இருப்பதென்ன என்பதை ஒருபோதும் வெளிக் காட்டாது. ஒட்டகம் எப்படித் தூங்குகிறது என்று பாருங்களேன். அது தூங்குவதே அபூர்வந்தான். நிமிட நேரம் கண்ணயரும், அவ்வளவே அதன் தூக்கமெல்லாம். ஒட்டகம் சாவதும் விந்தை தான். முழங்கால்களை மடிக்கும், மணலில் தலையைக் கிடத்தும், ஒரு முறை உறுமும், அதோடு சரி, அதன் காலம் முடிந்துவிடும்....''

ஒட்டகத்தைப் பற்றிய இச்சொற்களை மொழிநூல் அறிஞன் ஆர்வத்துடன் கேட்டான்.

''ஒருகால் ஒட்டகம் மிகவும் கர்வம் பிடித்த பிராணியோ? அகந்தை கொண்டதோ?'' என்று பதற்றப்படாமல் வினவினான்.

''யாருக்குத் தான் தெரியும் இது?''

சுவீடன்வாசி 'தழல் தாடி'யின் பக்கம் திரும்பினான்.

''நீ என்ன சொல்கிறாய், மிர்ஜா? ஒட்டகத்தின் முழக்கத்தில் துயரத்தின் தொனி உனக்குக் கேட்கவில்லையா என்ன?'' என்று கேட்டான்.

குமாஸ்தா-தத்துவாசிரியன் கையிலிருந்த ஜெபமாலை அவன் கருத்துத் தொடரைப் போலவே நீண்டது. ஜெபமாலையை உருட்டியபடியே அவன் தணிந்த குரலில் விடை பகர்ந்தான்.

''ஒட்டகத்தின் துயரம் இருளடர்ந்தது; எனவே அதை இனங்கண்டுகொள்ள யாராலும் ஆகாது. அது எதனுலோ மனத்தாங்கல் கொண்டிருக்கிறது. விதியினுல் புண்படுத்தப்பட்டிருக்கிறது. எப்போது, எதனுல் என்பதொன்றும் அதற்கு நினைவில்லை....''

மிர்ஜாவின் எண்ணத் தொடர் அறுந்துவிட்டது. அவன் ஜெபமாலை மட்டுமே 'டக்டக்' கென ஒலித்தவண்ணம் முன்போன்றே உருண்டது.

மொழிநூல் அறிஞன் சிந்தித்தான்.

''எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் ஒட்டகம் பெருமை வாய்ந்த ஏதோ துயரால் பீடிக்கப்பட்டிருப்பது தெளிவாகப் புலப்படுகிறது'' என்று தனது முடிவை வெளியிட்டான்.

''இது பாலைவனத்தின் பெருமை'' என்று முணுமுணுத்தான் மிர்ஜா.

மெல்லிளங்காற்று கணப்பு நெருப்பின் பொன்னிறக் கூந்தலை வீசியாட்டியது. நிழல்கள் பாலைவனத்தின் மீது நடனமாடின. நட்சத்திரங்கள் வானத்தின் நீல விதானத்தில் சுடர்ந்தன.

''ஒட்டகம் ஒரே முட்டாள் பிராணி!'' என்று திடீரெனக் கூறினுன் காரியஸ்தன் அலி நிஜாம்.

அருகிருந்தவர்கள் திடுக்குற்று விழித்து அவனை ஏறிட்டு நோக்கினார்கள்.

''முட்டாள் பிராணியா?'' என்று கேட்டான் அவர்களில் ஒருவன்.

''ஆம், முட்டாள் பிராணி'' என்று மீண்டும் கூறினான் அலி நிஜாம். ''பாருங்களேன். ஆயிரமாயிரம் ஆண்டுகளாக, தலைமுறை தலைமுறையாக, வேலை செய்துவருகிறது. இருந்தாலும் அது வேலைக்குப் பழக்கப்படவுமில்லை, தன் கடமைகளைப்பற்றி உடன்பாட்டுக்கு வரவும் அதனால் முடியவில்லை. பாரம் சுமப்பது ஒட்டகத்தின் வேலை. ஆனால் அது செய்வதென்ன, பாருங்கள். எப்போதும் உறுமுவதும் எப்போதும் இடக்குப் பண்ணுவதும் தான். பாரம் ஏற்றும் பொழுதும் சரி, இறக்கும் பொழுதும் சரி. அதன் கவலையெல்லாம் தனது மர்மமான இரைப்பையை அதிகத்திலும் அதிகமாக எவ்வளவு முடியுமோ, செம்மச் செம்மத் தீனியால் நிரப்பிக்கொள்வது தான். அதன் பின்பே அது வழி நடக்கும். கொஞ்சலோ, பராமரிப்போ எதுவும் அதனிடம் செல்லாது. சொந்தக்காரனுக்கு அது பழக்கப்படுவதுமில்லை, முதுகில் உட்கார்ந்திருப்பவன் எஜமானனா, வேற்றாளா என்பதை உணர்வதுமில்லை. சவாரி செய்பவனைத் தூக்கி எறிவதற்கு வேண்டிய புத்தியும் தந்திரமும் அதற்குக் கிடையாது. என

வே தான் பேசாமல் சுமக்கிறது. ஆனால் மேலே இருப்பவன் விழுந்து விட்டாலும் அது நிற்பதில்லை. திரும்பிப் பார்ப்பது கூட இல்லை. கண்ணுக்குத் தென்படும் திக்கில் தன் பாட்டில் போய்க்கொண்டே இருக்கும். பிடித்து நிறுத்தினால் தான் நிற்கும். அதுவும் எவனாயிருந்தாலும் சரி, வழியில் முதன் முதலாக எதிர்ப்படுபவன் நிறுத்தினாலும் நின்றுவிடும். ஒரு விஷயத்தைக் கூர்ந்து கவனியுங்கள்: நாம் அதன் மேல் ஏறி உட்காரும் போதெல்லாம் மாட்டேன் மாட்டேன் என்னும். அவலட்சணம் பிடித்த கழுத்தை வளைத்துத் திருப்பி, நம் காலைக் கடிக்கப் பார்க்கும். ஒவ்வொரு தடவையும் இந்தச் சந்தர்ப்பத்தில் அதன் உச்சி மண்டையில் மடார் மடாரென்று சாத்தினால் தான் பற்களை அப்பாலே நகர்த்தும்....''

அலி நிஜாமின் கோபப் பேச்சு இடையிலேயே முறிந்துவிட்டது.

''இதெல்லாம் இருந்தாலும் — அல்லாவின் அருள் வாழ்க — ஒட்டகம் பொறுமையுள்ள உழைப்பாளி, பணிவுள்ள பிராணி'' என்று வியாபாரிகளில் ஒருவன் மெதுவாகச் சொன்னான்.

கழுதைப்புலி போலப் பல்லிளித்தான் அலி நிஜாம். ''பணிவுள்ளதா? வாழ்ந்தது போங்கள். அறிவற்றது என்றால் ஒப்புக்கொள்கி

றேன். பணிவுள்ளது என்று ஒப்புக்கொள்ளவே மாட்டேன்'' எனக் கூறினன்.

மீண்டும் மௌனம். பாலைவனம் சிந்தனையிலாழ்ந்தது.

ஜெபமாலைகள் 'டக் டக்' கென ஒலித்தன.

'தழல் தாடி' தலையை நிமிர்த்திச் செய்யுள் படித்தான்:

''தன்மேல் வாழ்வைச் சுமந்து வரும்,
தானும் வாழ்வாய்த் தழைத்திலகும்.
என்னும் பாலை அஃதின்றேல்?
எல்லாம் மண்ணாய் மடியாதோ?''

''ஆமாம். விந்தையான மிருகம் இது'' என்று பின்னும் உரைத்தான் மொழிநூல் அறிஞன்.

''தான்தோன்றித்தனமும், முரண்டுகளும் எல்லாம் மனிதன் போலவே'' என்றான் ஒரு வியாபாரி.

''சுபாவத்திலே ஓரளவு பண்ணைக் கூலியாள் போல'' என வெறுப்புடன் உறுமினன் அலி நிஜாம்.

பக்கத்தில் ஏதோ அசைவு ஏற்பட்டது. எவனோ எழுந்து நின்றான். அதுதான் ரீஜா.

''ஒட்டகத்தைப் பண்ணைக் கூலியாட்களுக்கா ஒப்பிடுகிறீர்கள்? ஆகா, தாராளமாக

ஒப்பிடுங்கள். தடையொன்றுமில்லை. ஆனால் ஒன்று. எங்கேனும் அசதி மறதியில் தவறு செய்துவிடப் போகிறீர்கள், ஜாக்கிரதை'' என்று வர்த்தகர்களைப் பார்த்துக் கடுப்பும் ஏளனமுமாகக் கூறினான்.

அவன் குரல் சிறைச் சுவரின் பின்னிருந்து ஒலிப்பது போல ஆழ்ந்து அதிர்ந்தது.

பிறகு ரீஜா புகை குடிப்பதன் பொருட்டு நெருப்புக் குச்சியைக் கிழித்தான். அவனது கரடு தட்டிய, துடுக்கான முகம் அதன் ஒளியில் துலக்கமாகத் தெரிந்தது.

வர்த்தகர்கள் ஒருவரையொருவர் பார்த்தார்களே தவிர, பதிலொன்றும் பேசவில்லை. மறுபடியும் ஒட்டகங்களைப் பற்றியே உரையாடலுற்றார்கள்.

''பொறுமையுள்ள பிராணி, ஒட்டகம். அதனாலேதான் மிக ஜாக்கிரதையாக அதனுடன் பழகவேண்டும்'' என்றான் ஒரு வர்த்தகன்.

''இல்லாவிட்டால் என்ன செய்துவிடுமாம்?''

''மூஞ்சியில் துப்பிவிடும். அதன் எச்சிலில் நஞ்சு உண்டு.''

''வெறும் பிதற்றல்! அதன் எச்சிலில் நஞ்சுமில்லை கிஞ்சுமில்லை. ஒரே ஆபாசம் மட்டுமே'' என்று அருவருப்புடன் கூறினான் அலி நிஜாம்.

அப்படியே ஓர் ஒட்டகத்தின் பக்கம் திரும்பி, விரலால் அதைச் சுட்டிக்காட்டி, "இதோ நிற்கிறதே நார்; நீங்கள் பார்த்துப் பூரித்துப் போகும் ஒட்டகம்! நான் இதை அடித்த அடியில் சென்ற இரண்டு நாட்களாகக் கையெல்லாம் நோகிறது" என்ருன்.

"எதற்காக அடித்தீர்கள்?"

"அதன் மேல் சுமையேற்றிஞர்கள், இப்ர ஹீம் கானின் • சாமான்களே. இந்த ஒட்டகம் என்னடா என்ருல் ஆணி அறைந்தது போல உட்கார்ந்துகொண்டு, எழுந்திருக்கவே மாட்டேன் என்று சண்டித்தனம் செய்தது. போட்டேன் போடு. பண்ணைக் கூலியாட்கள் போலவே தான் இதுவும். உச்சி மண்டையிலே போடாவிட்டால் சரிப் படாது."

இவ்வாறு சொல்லி, ரீஜாவைப் பொறி பறக்கப் பார்த்தான் அலி நிஜாம்.

ரீஜாவோ புகை குடித்துக் கொண்டிருந் தான். அவன் வாயிலிருந்து குபு குபுவெனச் சுருள் சுருளாக வெளி வந்த மென்புகை மேலே எழும்பிச் சிதைந்து காற்றில் கரைந்தது.

திடீரென ரீஜாவின் குரல் ஒலித்தது. சிந்தனை நிறைந்த, தாழ்ந்த குரலில், அவன் தனக்குத் தானே பேசிக்கொள்வது போலிருந்

"மழையில்லாமல் வறண்ட கடைசி வரு

ஷம் உங்களுக்கெல்லாம் நன்ருக நினைவிருக்குமே. அப்போது பலர் திடீரெனப் பணக்காரர்கள் ஆனுர்கள். இப்ரஹீம் கானின் தானியக் கிடங்குகளில் இரண்டாயிரம் 'ஹல்வார்' கோதுமை கிடந்து மட்கியது. அவனுடைய களஞ்சியங்களில் என்னதான் விந்தை நிகழ்ந்ததோ! தானியம் நிறைத்து வைக்க இடம் போதவே இல்லை அவனுக்கு. மக்களோ எங்கு பார்த்தாலும் ஈக்களைப் போல மடிந்தார்கள்....''

ரீஜா மௌனமாஞன். காரியஸ்தன் அலி நிஜாம் மறுபடியும் ரீஜாவை அனலெழ விழித்து நோக்கி, ''ஏனப்பா, நீ கதைகாரன் போலிருக்கிறதே. அப்படித்தாஞ?'' என்று கேட்டான்.

''எப்போதாவது கதைகள் சொல்ல நேர்ந்ததுண்டு.''

''நெருப்பெரியும் கதைகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பாயே?''

''அவை என்ன கதைகளப்பா? எனக்குத் தெரியவே தெரியாதே?''

அலி நிஜாம் கோணலாக முறுவலித்து, ''தெஹ்ரானில் தெரிந்துகொள்வாய் இந்தக் கதைகளைப் பற்றி'' என்ருன்.

இவ்வாறு கூறி, வர்த்தகர்களை நோக்கிக் கண்சிமிட்டி மீண்டும் சிரித்தான் அலி நிஜாம்.

மொழிநூல் அறிஞனை சுவீடன்வாசிக்கு ஒன்றும் பிடிபடவில்லை.

"நெருப்பெரியும் கதைகள் என்று சொல்கிறீர்கள்? அவை என்னவாம்?" என வினவி

நஞ்சு தோய்ந்த குரலில் விடையிறுத்தான் காரியஸ்தன்:

"இந்த நெருப்பெரியும் கதைகள் பெரும்பாலும் தானியக் களஞ்சியங்களில் தொடங்கி, சோப்புத் தடவி வழுவழுப்பான சுருக்குக் கயிற்றில் போய் முடியும். இப்போது ஈரான் எங்கிலும் எத்தனை எத்தனையோ கொள்ளைக்காரர்கள் சுற்றித் திரிகிறார்கள். கான்களுடைய தானியக் களஞ்சியங்களின் அருகாமையில் உழவர்கள் நடுவே உட்கார்ந்து தங்கள் கதைகளை நடத்துகிறார்கள் இவர்கள். இந்தக் கதைகளிலிருந்து நெருப்புப் பொறிகள் வெடித்துச் சிதறுகின்றன, களஞ்சியங்களைத் தீக்கிரையாக்குகின்றன. இந்தக் கதைகாரர்கள்..." அலி நிஜாமுக்குப் புரை யேறி மூச்சுத் திணறியது. "இந்தச் சாக்கடைப் புழுக்கள்! இந்த..." என்று கூவினவன், சொல்லத்தகாத சில ஆபாச வசவுகளைப் பொழிந்தான். பாலைவனத்தின் மெல்லென அசைந்த காற்றிலே மிதந்தன அச்சொற்கள்.

ரீஜா வாயே திறக்கவில்லை. பாலைவனம் மௌனத்தில் ஆழ்ந்தது.

ஜெபமாலைகளின் 'டக் டக்' என்ற வெற்றொலி மட்டுமே மெதுவாகக் கேட்டது.

காரவான் உறங்கியது.

பாலைவனத்தில் இருள் சூழ்ந்திருந்தது. கற்பனைக் கதைகளின் காட்சிகள் இருட்டில் நிழல் வடிவில் நடமாடின. ஒட்டகங்களினது போன்ற இனந்தெரியாத சோகம் நாற்புறமும் பொங்கிப் பெருகியது.

காரிருள்.

பாலைவனம் பிரம்மாண்டமான ஒட்டகம் போல, முழங்கால்களை மடக்கி ஆயாசந்தீர அமர்ந்து, ஏக்கம் நிறைந்த தன் கருந்திமில்களால் வான் முகட்டை முட்டுக்கொடுத்துத் தாங்கியது.

இரவு தனது ராட்டினத்தைச் சுழற்றியது. ராட்டினம் சற்றே காதில் படும்படி மெல்லென ஊங்காரமிட்டது.

பொன் பசலை படிந்த மதி, எங்கோ தொலைவிலுள்ள சவக்குழியிலிருந்து எட்டிப் பார்ப்பது போல உலகின் மீது கண்ணோட்டியது.

மேலே, பிரமாண்டம் என்னும் ஏட்டிலே, கருத்துப் பொறிகள் சுடர்ந்தன. வாழ்க்கையே அக்கருத்துக்கள். அனந்தம் என்னும் மினுமினுக்கும் கந்தக எழுத்துக்களிலே வானத்தில் வரையப்பட்டிருந்தன அவை.

தொடுவானத்துக்கு மேலே, ஆகாயத்திரை மீது தெளிவாகத் தீட்டப்பட்டிருந்தது ஒற்றைத் திமில் ஒட்டகத்தின் நிழலுருவம். அது தான் நார். உறங்கும் பொருட்டுக் கால்களை மடக்கி அமர ஏனே அது விரும்ப வில்லை. சிலையே போல் நிமிர்ந்து நின்றது. இரவுக் கடிகாரத்தின் ஓட்டத்தைக் கூர்ந்து கேட்பது போல, காலத்தின் போக்கைக் கவனிப்பது போலத் தோற்றமளித்தது.

காரியஸ்தன் அலி நிஜாம் எழுந்து, இப்ரஹீம் கானும் நிங்கீலும் உறங்கிக் கொண்டிருந்த, இரத்தினக் கம்பளங்கள் விரித்த பெரிய கூடாரத்துக்கு அருகே சென்றுன். ஜாக்கிரதையாக அடிவைத்துக் கூடாரத்தின் வாயிலை அணுகினுன்.வாயிலில் வேட்டை நாய்போல உடலைப் பரப்பி உறங்கிக் கொண்டிருந்தான் ஆஜானுபாகுவான முகம்மது, இப்ரஹீம் கானின் பணியாள். அவனை உற்று நோக்கினுன் அலி நிஜாம்.

கூடாரத்தை ஒட்டினுற்போல நின்று, கான் விழித்துக் கொண்டிருக்கிருனே என்று

காது கொடுத்துக் கேட்டான் அலி நிஜாம். இல்லை, உறங்கிவிட்டான் என்று தெரிந்தது. அதே சமயம், கூடாரத்துக்குள்ளிருந்து மூச்சு இழையும் ஓசையோடு ஏதோ இரகசியப் பேச்சும் காதில் விழுவது போல அலி நிஜாமுக்குப் பிரமை உண்டாயிற்று. கட்டுக் கடங்காத ஆவல் அவன் உள்ளத்தில் பொங்கி யெழுந்தது. இன்பமும் துன்பமும் ஒருங்கே வாய்ந்த பொறுமை அவன் நெஞ்சை அழுத்தியது. மீண்டும் கவனமாகக் கேட்டான்.

பிறை மதியின் நிலவு மங்கியதும், எல்லா ஒலிகளும் அடங்கிப் போயின.

காரியஸ்தன் மணல் மேல் உட்கார்ந்தான். சமீபத்தில்தான் தெஹ்ரானில் இளம் பெண்ணொருத்தியுடன் தான் விருந்தாடிக் களித்த இன்ப நிகழ்ச்சி சட்டென அவனுக்கு நினைவு வந்தது. அவளது கதகதப்பான மேனியை உடனே நினைவுகூர்ந்தான்....

திடீரென மொண்ணை இடுக்கி யொன்று அலி நிஜாமின் பிடரியைக் கவ்விப் பிடித்து நசுக்கியது. அவ்விடுக்கி யென்னவெனில் ஓட்டகப் பற்கள். நிர்க்கதியாக ஓலமிட்டான் அலி நிஜாம். அப்புறம்... பாலைவனம் எங்கோ ஓடி ஒளிந்தது. உண்மையாகவே, வானம் நாலாபுறமும் சுழன்றது, தாரகைகள் காலடியில்

மினுமினுத்தன, தரையோ தலைக்கு மேலே போய்விட்டது.

குறுகிச் சுருங்கி, குரங்கு போன்றிருந்த அலி நிஜாமின் உடல் பந்தாய்ச் சுருண்டது, மீண்டும் நீண்டு மறுபடி சுருண்டது, பின்பு காற்றிலே ஊசலாடியது.

அவனது குற்றுயிரான உடலை ஒரு சுண்டு சுண்டி உதறியெறிந்து, மணலில் கிடத்தியது ஒட்டகம். அதே கணத்தில் பயங்கரமாக விறைத்து நிமிர்ந்து, முன்போலவே அசையாது நின்றது.

காரவான் விழித்தெழுந்தது. நாற்புறமும் துள்ளிக் குதித்தார்கள் ஆட்கள். ஒட்டகக்காரர்களும் கானின் பணியாட்களும் நாரின் மீது பாய்ந்தார்கள். ஒட்டகமோ, அவர்கள் பாய்ச்சலுக்கெல்லாம் அஞ்சாமல் அசையாது நின்றது. முதலாவது தடியடிகள் மேலே பொழிந்த போதும் அது இடத்தை விட்டு நகரவே இல்லை.

ஒட்டகக்காரர்கள் தலைவன் நாரின் கழுத்தைப் பற்றிக்கொண்டு தொங்கி அதன் மேல் அடிகள் படாமல் காத்த வண்ணம் வெறிகொண்டவன் போல கானின் பணியாட்களை உரக்கத் திட்டினான்.

அவனுக்கும் பணியாட்களுக்குமிடையே கடும் போர் மூண்டது. தன் மீதும் ஒட்டகத்

தின் மீதும் விழுந்த அடிகளைத் தாங்கிக் கொண்டு, ஒட்டகக்காரர்கள் தலைவன் காட்டு மிருகம் போலச் சீறினான், உறுமினான், கர்ஜித்தான்.

நிங்கீல் குலைபதறக் கூடாரத்துக்கு வெளியே ஓடி வந்தவள், நாரை எதற்காக அடிக்கிறார்கள் என்று தெரியாமல் பரக்கப் பரக்க விழித்தாள்.

எல்லோரையும் இடித்து விலக்கிக் கொண்டு முன்னே பாய்ந்தான் இப்ராஹீம் கானின் தலைமைப் பணியாள் முகம்மது. இந்த வேட்டை நாயின் கன்னங்கள் சுருங்கி விரிந்தன. அவனைப் பார்க்கவே பயங்கரமா யிருந்தது. கையிலே கோடரி வைத்திருந்தான்.

ஒட்டகக்காரர்கள் தலைவனை அதே நொடியில் ஒட்டகத்திலிருந்து பிரித்து அப்பால் தள்ளிவிட்டார்கள்.

மனிதக் குரங்கு போலக் குதித்துக் குதித்து முன்னே ஓடிவந்த முகம்மது, கூர்மையான கோடரியை ஓங்கி ஒட்டகத்தின் நடு நெற்றியில் சதக் கென்று பலத்த அடி போட்டான்.

ஒட்டகம் சத்தமே இன்றித் துவண்டு மண்டியிட்டது.

மனிதத்தன்மைக்குப் புறம்பான சீற்றத்துடனும் கோப வெறி பொங்கும் வேட்கையுடனும் கோடரியைச் சுழற்றிச் சுழற்றி ஒட்

டகத்தைச் சதக் சதக்கென்று தாக்கி முகம்மது.

ஒட்டகம் முணுக் கென்று தானும் கத்த வில்லை. எப்போதோ உயிர் போய்விட்டது அதற்கு. மணல் மேல் பரப்பிக் கிடந்தது அதன் உடல். அது இறந்து போனது முகம்மதுக்கு இன்னும் அதிக ஆத்திர மூட்டியது போலும். ஒரே வெறியுடன் கோடரியால் ஓங்கி ஓங்கிப் போட்டான். அவன் வெட்டிச் சிதைக்கச் சிதைக்க, முன்னிலும் மிகுந்த பயங்கரமாகக் காட்சி யளித்தது உயிரிழந்த நார்.

ஒன்று மட்டும் எல்லோருக்கும் தெளி வாகப் புலப்பட்டது. ஒட்டகம் தோல்வி யுற வில்லை. மௌனமும், ஏக்கமும், பயங்கரமுமாக அது தனது அளவற்ற பகைமையை வெளிக் காட்டியது. துண்டு துண்டாக வெட்டுண்டு சிதைந்திருந்த ஒட்டகத்தின் உருவம் முழுவதி லும் கொடூரமான வெறுப்பு பருமை பெற்று இறுகிவிட்டது போல் தோற்றியது.

நார் அணிந்திருந்த சலங்கைகள் சில்லுச் சில்லாக உடைந்து போயின. மணிகளெல்லாம் நாவிழந்தன. அவற்றின் இசையொலிகள் யாவும் பாலை மணலில் கொட்டிச் சுவறிப் போயின.

அங்கமெல்லாம் தாறுமாறாய்ச் சிதைந்து, அசைவின்றி நிலத்தில் பரந்து கிடந்த ஒட்டகத்

தின் உடலிலிருந்து பரவிய ஈர நெடி, நனைந்த மணலின் வாடையுடன் கலந்தது.

அலி நிஜாமின் உடலைத் துணியால் இறுக்கமாகச் சுற்றிப் போர்த்தினார்கள். இப்போது அவன் 'மம்மி' எனப்படும் பதனிட்ட எகிப்தியப் பிரேதம் போல் காட்சி யளித்தான்.

''பாழும் மிருகம், வாயே திறவாத பாவி மிருகம்!'' என்று பொங்கும் சினத்துடன் சீறி ஒட்டகத்தைத் திட்டினான் முகம்மது.

''தனது நோக்கத்தை மனிதர்களுக்குத் தெரியாமல் மறைத்துவிட்டது. மர்மமாக மூடி வைத்திருந்தது. ஒருவருமே புரிந்துகொள்ள வில்லை. கடைசிவரை அழுந்தச் சாதித்துவிட்டது பார்!'' என்றான் வியாபாரிகளில் ஒருவன்.

''இதெல்லாம் எப்படி நேர்ந்தது, கனவான்களே? இதற்குக் காரணம் என்ன?'' என்று கேட்டான் மொழிநூல் அறிஞன். அவன் உள்ளப் படபடப்பு குரலில் தொனித்தது.

''இது பழி தீரலாகும். ஒட்டகம் வஞ்சம் தீர்த்துக்கொண்டது, அவ்வளவே.''

இப்படிச் சொன்னவன் ரீஜா.

...காரவான் மேலே சென்றது. காரவானுக்குப் பின்னே, கருங்குன்று போலக் கிடந்தது உயிரிழந்த ஒட்டகம்.



## ஓலேஸ் கொன்சார்

ஓலேஸ் கொன்சார் (பிறப்பு 1918) திறமை வாய்ந்த உக்ரேனிய எழுத்தாளர்.

சோவியத் யூனியனில் தொழில் பெருக்கமும் விவசாய வளமும் மிகுந்த பெரிய குடியரசுகளில் உக்ரேனியா ஒன்றாகும். நாட்டின் ஐரோப்பியப் பகுதியில் உள்ள இக்குடியரசு நிலப்பரப்பில் பிரான்சைவிடப் பெரியது. இதில் வாழும் மக்கள் ஸ்லாவ் இனத்தினர்; வம்ச வழியில் ருஷ்ய மக்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள். உக்ரேனிய சோவியத் சோஷலிஸக்

குடியரசு ஐக்கிய நாடுகள் சங்கத்தில் அங்கம் வகிக்கிறது.

குடியானவரின் புதல்வரான ஒலேஸ் கொன்சார், சோவியத் உக்ரேனியாவில் பிறந்தார். 1941 முதல் 1945 வரை, யுத்தகாலம் முழுவதும் அவர் செருமுனையில் போர் புரிந்தார்.

கொன்சாரின் முதல் படைப்பு (1946-1948ல் எழுதப்பட்டது), ''பதாகை ஏந்துவோர்'' என்ற முத்தொகுதி நாவலாகும். உலகத்தை பாசிஸத்திலிருந்து விடுவிப்பதில் பெரும் பங்காற்றிய சோவியத் மக்களின் வீரம் இதில் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. இந்த நூலுக்கு இலக்கியப் பரிசு கிடைத்தது. பல அயல்மொழிகளில் இது பெயர்க்கப்பட்டிருக்கிறது. அடுத்த படைப்புக்களுக்கெல்லாம் உக்ரேனிய வாழ்க்கையிலிருந்தே விஷயங்கள் எடுத்துக் கொண்டிருக்கிறார் ஆசிரியர். மேதை வாய்ந்த நாவலாசிரியரான கொன்சார் தாம் பிறந்த நாட்டின் மக்களைப் பற்றியும் அதன் செழுமையையும் அழகையும் பற்றியும் எழுதுகிறார். கூட்டுப்பண்ணையினரின் புதுவாழ்வுப் போக்கை வருணிப்பது ஆசிரியருக்கு மிகப் பிடித்த விஷயங்களில் ஒன்று. இந்தக் கோவையைச் சேர்ந்ததே ''சூரியகாந்தி'' என்னும் கதை.

# சூரியகாந்தி

ட்டுப்பண்ணைத் தலைவரை ஆட்கள் தேடி அழைத்துவருவதற்காகக் காத்திருந்த சிற்பி, காரியாலய வாயிற்படியில் அப்பாடா என்று உட்கார்ந்து கனிய ஊற்று நீரைப் பருகலானார். வெக்கை மிகக் கடுமை. இளமரங்கள் ஆயாசத்துடன் கிளைகளைத் தொய்யவிட்டவாறு தங்கள் நிழலுக்குள்ளேயே ஒரேயடியாக ஒண்டிக் கொள்ளப் பார்ப்பவை போலக் காணப்பட்டன. மணல் நிறைந்த முன்முற்றம் கொதித்துப் போய் வெறிச்சோடிக் கிடந்தது. ஆளரவமற்ற கட்டாந்தரையான பாலைநிலப் பகுதியை அது நினைவூட்டியது. பகல் சாப்பாட்டிற்கான இடைவேளை யாதலால் ஜீவன்கள் எல்லாம் நிழலில் சரண் புகுந்து பேச்சு மூச்சின்றி அடங்கிப் போயிருந்தன. காரியாலய அறைக்குள் கூட்டல் மணிச்சட்டம் திடீர் திடீரென்று டக்டக்கென ஒலிப்பதும், களைப்பறியாத தேனீக்கள் மலர்களின் இடையே ஙொய் ஙொய் யென்று ரீங்காரமிடுவதும் மட்டுமே கேட்டுக்

கொண்டிருந்தன. நகரின் இரைச்சலுக்கும், ஓட்டசாட்டத்துக்கும், சலிப்பூட்டிய நீண்ட பயணத்துக்கும் பிறகு சிற்பிக்கு இந்த அமைதி இதமாயிருந்தது. 'டை'யை அவிழ்த்தார்; சட்டைப் பொத்தான்களைக் கழற்றிவிட்டுக்கொண்டார். சொந்த வீட்டில் போல விட்டாற்றியாகக் களையாறினார்.

வெயிலில் பழுப்பேறிய அரைநிர்வாண மேனியரான சிறுவர்களின் கூட்டமொன்று சிற்பியின் அமைதியைத் திடீரெனக் கலைத்தது. சுவருக்குப் பின்னால் எங்கிருந்தோ வந்த அந்தப் பையன்கள் வெள்ளை வெளேறென்ற ஆடையணிந்த முகமறியாத முதியவரைக் கண்டதும் சடக்கென்று நின்று, ''இவர் யாராயிருக்கக் கூடும்?'' என்று விவாதிக்கலானார்கள்.

பல பல அனுமானங்கள் மளமளவென்று வெளிவந்தன.

''யாரோ பிரசங்கி போலிருக்கிறது. ஒரு வேளை மறுபடியும் விஞ்ஞானியாயிருக்குமோ?'' என்றான் ஒருவன்.

''நமது பச்சைக் கன்வேயரைப் பார்ப்பதற்காக வந்திருப்பார்'' என்றான் மற்றொருவன்.

''இல்லாவிட்டால் மெரீனோ ஆடுகளைப் பார்ப்பதற்காக இருக்கும்'' என்றான் மூன்றாமவன்.

''அவர் வழுக்கை மண்டையைப் பார்த் தாயா, சறுக்கி விளையாடலாம் போல!''

சிறுவர்கள் மீது அன்பு பொங்க இனிமை யாகப் புன்னகை பூத்தார் சிற்பி. அவரது கற்பனை அவர்களது கடைச்சல் பிடித்தவை போன்ற உருவங்களைக் களிமண்ணில் அமைத்து, வெண்கலத்தில் வார்த்து நகரப் பூங்காவில் நிறுவிவிட்டது.

அந்த நேரத்தில் வந்து சேர்ந்தார் கூட் டுப்பண்ணைத் தலைவர். செக்கச் சிவந்த கன்னங் கள், இனிய பார்வை, பளிச்சுப் பளிச்சென்று ஓயாமல் சுழன்று கொண்டிருக்கும் விழிகள். பெயர்பெற்ற கூட்டுப்பண்ணைக்காரி மெலானி யா சோபித்கோவின் உருவைச் சிற்பத்தில் வடிப்பதற்காகச் சிற்பி வந்திருக்கும் செய்தி அவருக்கு யாரிடமிருந்தோ தெரிந்திருந்தது.

''இதோ எல்லா ஏற்பாடுகளும் செய்து விடுவோம். நான் சொல்லியனுப்பிவிட்டேன். மெலானியா இங்கேயே வருவாள். வாருங்கள் உள்ளே போவோம்'' என்று விருந்தாளியை நட்பு மிளிரப் பார்த்தவண்ணம் காரியாலய அறைக்கு அழைத்தார் தலைவர்.

வெயிலொளி நிறைந்த விசாலமான அறை அப்பழுக்கின்றித் துப்புரவாயிருந்தது. செங்கொடிகள் அதற்கு அழகு செய்தன.

அறையில் எல்லாம் ஒழுங்காகவும், சுத்தமாக வும், பளிச்சென்று கண்ணைக் கவர்ந்தன.

''உங்கள் அறை என்ன, மந்திரி காரியா லயம் போல ஜமாய்க்கிறதே!'' என்று வியந் தார் சிற்பி.

தலைவர் இந்தப் பாராட்டை மிக அமைதி யாக ஏற்றுக்கொண்டார்.

''ஒன்றும் பிரமாதமில்லை. போலந்து தூதுக் கோஷ்டி வந்திருந்தது. அதற்காகப் போட்ட நாற்காலிகளை இன்னும் அகற்ற வில்லை, அவ்வளவு தான். உட்காருங்கள்.'' இவ்வாறு கூறித் தமது நாற்காலிக்கு எதிரே யிருந்த ஆசனத்தைக் காட்டினார்.

இருவரும் அமர்ந்து சிறிது நேரம் ஒரு வரை யொருவர் மௌனமாக நோட்டமிட் டனர். தலைவர் மேஜை யருகே வேட்டைப் பருந்து போல அசையாமல் விறைப்பாக உட் கார்ந்திருந்தார். அவரது மலர்ந்த முகம் கவன மாகப் பார்த்துக்கொண்டிருந்தது. மேஜைமேல் மழமழப்பாக ஒளிர்ந்த கண்ணாடிப் பாளம். அதன் மீது செதுக்கு மைக்கூடும் எழுது கருவி களும். இவற்றின் அருகே தலைவரின் பழுப் பேறிய கரங்களும் கறுப்புச் சொக்காய்க் கை களும் சிற்பிக்குக் கண நேரம் பொருத்தமற்ற வையாகத் தோன்றின. மறு கணமே இந்தக் காட்சியில் அதற்கே உரிய ஒரு தனிக் கவர்ச்சி

யும் இசைவும் அவருக்குத் தென்பட்டது. உழைப்பால் காய்ப்பேறியிருந்த அக்கரங்கள் சிற்பமாகச் செதுக்கத் தக்கவையே என எண்ணினார் அவர்.

''உங்களுடைய வீராங்கனையைப்பற்றிக் கொஞ்சம் சொல்லுங்கள், கேட்போம். அவளைப் பற்றி நான் அறிந்ததெல்லாம் செய்தித் தாள்களிலிருந்து தான்'' என்று கால்மேல் கால் போட்டுக்கொண்டு கேட்டார் சிற்பி.

''அவளைப் பற்றிச் சஞ்சிகைகளிலும் எழுதியிருந்தார்களே....''

''அவற்றையும் படித்தேன். புகைப் படங்களையும் கத்தரித்து எடுத்துக் கொண்டேன். எல்லாம் பக்கவாட்டிலிருந்து எடுத்தவைதாம். முழு முகமும் எந்தப் படத்திலும் பார்க்க முடியவில்லை.''

''ஹூம். அவளைப் பற்றி உங்களுக்கு என்ன தெரிந்துகொள்ள வேண்டும்?'' என்று தயக்கத்துடன் கேட்டார் தலைவர். வழுக்கைத் தலையும் வெளிறிய முகமும் வாய்ந்த இந்த மனிதன் வேண்டுவதென்ன என்று அவருக்குப் புரியவில்லை. ''தங்கமான பெண். கடும் உழைப்பாளி. உண்மையான நாட்டன்பு கொண்டவள். இங்கே எல்லோருக்கும் அவள் மீது மரியாதை. தகப்பன் போரில் கொல்லப்பட்டான். ஏழாவது வரை படித்துத் தேறினாள்.

மக்காச்சோளம் பயிரிடுவதில் காட்டிய திற மைக்காக அவளுக்கு வீர உழைப்பாளிக்குரிய பொன் நட்சத்திரப் பதக்கம் கிடைத்தது. இவ் வாண்டு அவள் சூரியகாந்தியும் பயிரிடுகிருள்'' என்று தொடர்ந்து கூறினுர்.

''அதெல்லாம் நன்ருய்த்தான் இருக்கிறது. ஆனுல் எனக்கு இது போதவே போதாது. புரி கிறதா, தலைவர் அவர்களே? உங்களுக்கு இதை எப்படி விளக்குவது? ஒரு வார்த்தையில் சொல் வதானுல் எனக்கு அவளுடைய வாழ்க்கைக் குறிப்புகள் ஒன்றும் தேவையில்லை. நான் வேண் டுவதெல்லாம் அவளுடைய ஆன்மா, அவளது இயல்பு.''

தலைவர் நீண்ட பெருமூச்சுடன் சிந்திக்க லானுர். எவனுக்கு என்ன வேண்டும் என்பதை அவர் எப்படித்தான் தெரிந்துகொள்வதோ? ஒருவனுக்கு வாழ்க்கைக் குறிப்புகள் வேண்டும், மற்றவன் ஆன்மாவைக் கொண்டா என்கிருன். அடுத்தாற்போல் வருபவன் என்ன கேட்பானே யார் கண்டது?

''அவளுடைய சுபாவத்தை நீங்களே பார்ப்பீர்கள். மென்மையானவள், அன்பு நிறைந்தவள். அவளது ஆன்மாவைப் பொறுத்த வரையில்....'' இவ்வாறு கூறி முகட்டைப் பார்த்தவாறே, ''அவள் அதை உங்களுக்குக்

காட்டுவாளோ மாட்டாளோ எனக்குத் தெரியாது'' என்ருர் தலைவர்.

''காட்டமாட்டாள் என்று ஏன் நினைக்கிறீர்கள்?''

''இந்த ஆன்மா இருக்கிறதே, இது மிக நுண்மையானது. அதைத் திறந்து காண்பதற்கு விசேஷமான திறவுகோல் வேண்டும். ஒன்று கேட்க விரும்புகிறேன். உங்களுக்கு எதற்காக அவளுடைய ஆன்மா? நீங்கள் செய்யப் போவதெல்லாம் அவளுடைய மார்புவரையுள்ள சிற்பந்தானே? அதற்காக உங்களுக்கு வேண்டியது அவளுடைய வடிவம், முக அமைப்பு, அவ்வளவு தானே?'' என்ருர் தலைவர்.

''இல்லவே இல்லை. இவை மட்டும் போதா'' என்று உக்கிரமாக மறுத்துக் கூறினுர் சிற்பி. தமக்குத் தகுதியற்ற விஷயத்தில் தலையிட்டுவிட்டோம் என உடனே உணர்ந்துகொண்டார் தலைவர். சிற்பி மேலும் தொடர்ந்து, ''வெளி உருவமும் அமைப்பும் எங்களுக்கு மிக அவசியமானவைதாம். ஆயினும் அழகின் உள்ளார்ந்த ஊற்றுக் கண்கள்...'' என்று சொல்லிக் கொண்டுபோனுர்.

அவர் தமது எண்ணத்தை முழுவதும் வெளியிட இயலவில்லை. கதவை யாரோ தட்டியதால் அவரது சொற்கள் அரைகுறையாக நின்றுவிட்டன.

அந்தத் தட்டலிலிருந்தே வந்திருப்பது யார் என்று தெரிந்துகொண்டவர் போல, ''உள்ளே வா!'' என்று கூவினார் தலைவர்.

கட்டுக்குட்டான பெண்பிள்ளை ஒருத்தி தயக்கத்துடன் உள்ளே வந்தாள். கருநிறக் கம்பளிச் சொக்காய், தலையில் தூய வெள்ளைக் குட்டை, சொக்காய் மார்பில் மின்னும் தங்க நட்சத்திரப் பதக்கம். இந்தக் கோலத்தில் அவள் இலகினாள். அவள்தான் மெலானியா சோபித்கோ என்று அடையாளங் கண்டு கொள்வதற்கு முன்பே ஊகத்தால் உணர்ந்து கொண்டார் சிற்பி.

''நீங்கள் என்னை அழைத்தீர்களா, இவான் ப்யோதரவிச்?'' என்று கேட்டாள் மெலானியா.

''ஆமாம். இவரை அறிமுகம் செய்து கொள். இவர் ஒரு சிற்பி. உன்னுடைய உருவத்தைச் சிற்பம் செதுக்குவதற்காக வந்திருக்கிறார்'' என்றார் தலைவர்.

அறிமுகமானதும் சிற்பி தமது தொழிலுக்கு உரிய கூர்மையான நோக்குடன் அவளை ஏற இறங்கப் பார்த்தார். செய்தித்தாள்களில் வந்திருந்த அவளுடைய புகைப் படங்களில் எல்லாம் பக்க உருவம் மட்டுமே ஏன் கொடுக்கப் பட்டிருந்தது என்பது அவருக்கு உடனே தெற்றெனத் துலங்கிவிட்டது. மெலா

னியாவிடம் அழகு என்று சொல்லிக்கொள்வதற்கு ஒன்றுமே இல்லை. உண்மையாக இருப்பதைவிட அதிக அழகுடையவளாக அவளைப் படம் பிடிக்கும் பொருட்டுப் புகைப்பட நிருபர்கள் அரும்பாடு பட்டிருக்க வேண்டும் என்று சிற்பி ஊகித்துக்கொண்டார். புகைப் படத்தில் இவ்வாறு செய்யலாகும், சிற்பத்தில் எப்படி முடியும்?

தலைவர் ,மெலானியாவைத் தமது வலப்புறம், கொடித் தோரணங்களுக்கும் உலர்ந்த நெற்கதிர்க் குஞ்சங்களுக்கும் அடியிலே அமரச் செய்து, பேரெழிலாளைப் பார்ப்பது போல உற்சாகமூட்டும், வியப்பு நிறைந்த பார்வையை அவள்மீது செலுத்தினார். ஒருகால் அவர் கண்களுக்கு அவள் வனப்பு வாய்ந்தவளாகவே தோன்றியிருக்கலாம், யார் கண்டது? ஆனால் மெலானியா தனது குறைபாடுகளை நன்கு உணர்ந்திருந்தாள் என்பது தெரிந்தது. சிற்பியின் கூர்ந்து ஆராயும் பார்வைக்குமுன் அவள் ஒரேயடியாகக் கூசிக் குன்றிப் போனாள். தான் அவருக்கு ஏதோ குற்றம் இழைத்துவிட்டவள் போலப் பார்த்தாள். உட்கார்ந்திருப்பது அவளுக்குப் பொறுக்க முடியாத வேதனையாயிருந்தது. தோள்களும் கைகளும் கால்களும் சுமையாயிருப்பது போல உணர்ந்தாள். தானே தனக்குச் சுமை போல அவளுக்குப் பட்டது.

''இதைக் கேள், மெலானியா, நமது மதிப்பிற்குரிய விருந்தினர் ஒரு சிற்பி. கண்காட்சியில் வைப்பதற்காக உனது சிற்பம் செதுக்க விரும்புகிருர்'' என்று எதற்காகவோ மீண்டும் விளக்கினுர் தலைவர்.

மெலானியாவைத் தலைவர் சாமர்த்தியமாகப் பார்த்தார்; சிற்பியும் நோக்கினுர்; அவளும் தன்னையே பார்வையிட்டுக்கொண்டாள்.

''நல்ல யோசனைதான் போங்கள். போயும் போயும் நான்தான கிடைத்தேன் உங்களுக்கு?'' என்று நாணத்தால் முகமெல்லாம் கன்றிச் சிவக்கத் தரையைப் பார்த்தவாறே மொழிந்தாள் மெலானியா.

தேர்ந்த கலைஞனின் இரக்கமற்ற கூர் விழிகளால் அவளைப் பார்வை யிட்டார் சிற்பி. அவருடைய படைப்புத் திட்டங்களை எல்லாம் பாழ்படுத்துவதற்கு, தன்னுல் முடிந்தது அனைத்தையும் மெலானியா செய்வது போல அவருக்குப் பட்டது. அசடு வழிய விறைப்பாக உட்கார்ந்திருந்தாள். நேரம் ஆக ஆக அவளுடைய வனப்பின்மை குறையாதது மட்டு மல்ல, அதிகரித்துக்கொண்டும் போவது போல அவருக்குக் காணப்பட்டது. தலைநகரிலிருந்து வந்திருக்கும் சிற்பிக்கு எதிரே உட்கார்ந்திருப்பது அவளுக்கு எளிதல்ல என்பது அவருக்குப் புரியத்தான் செய்தது. அவர் வேண்டு

வது என்ன என்பது அவளுக்கு முன்னதாகவே தெரியும். அவரைத் திருப்தி செய்ய வேண்டும் என்றும் அவள் விரும்பினுள். ஆனுல் எப்படிச் செய்வது என்பதுதான் அவளுக்கு விளங்க வில்லே. இதைப் புரிந்துகொண்ட சிற்பி, விரைவி லேயே அவளுக்குக் கூச்சம் போய்விடும், அவள் கட்டிப் போட்டது போலில்லாமல் சுபாவமாக இருப்பாள் என்று எதிர்பார்த்தார். எல் லாம் வீண்! ஏதோ ஊசி முனேயில் உட்கார்ந் திருப்பவள் போல அமர்ந்து, இவான் ப்யோதர விச்சை நோக்கிச் செயற்கையாகப் புன்னகை புரிந்தவாறே தலேக்குட்டையின் நுனியை உதடு கள் மீது அழுத்திக் கொண்டிருந்தாள் அவள். ஆரம்பத்தில் இது வேடிக்கையா யிருந்தது. பின்போ மண்டிக்கொண்டு வந்தது எரிச்சல். இந்தப் பெண்ணுல் வேறுவிதமாக நடந்துகொள் ளவே முடியாது போலும். அழகோ அந்தமோ அற்ற இந்த கிராமிய இயல்புகள் இவளுடைய இயற்கை வழக்கங்களாகிவிட்டன போலும்! இப்போது இவற்றை எவ்வகையிலும் மாற்ற முடியாது போலிருக்கிறது. எல்லாங் கிடக்க இதென்ன அலங்காரம் செய்து கொண்டிருக் கிருள், மணப்பெண் மாதிரி? ஐயோ, மெலானி யா, மெலானியா, உன்னுடைய சிற்பம் செதுக் குவது கடினந்தான்!

இந்தக் கதையை ஒருவகையாக ஓய்ப்பது எப்படி? உண்மையில் பார்க்கப் போனால் இதில் அவளுடைய தவறு ஒன்றுமில்லை. அதே போல என் தவறும் இல்லை.''—இவ்வாறு மனக் கசப்புடன் எண்ணமிட்டார் சிற்பி.

நிலவிய மௌனத்தைத் தலைவரின் மகிழ்ச்சி நிறைந்த குரல் கலைத்தது. ''இதோ பார் மௌனியா, உனக்கு நல்ல தருணம் வாய்த்திருக்கிறது. ஒரு காலத்திலே தேவிகளின் சிலைகள் மட்டுமே வடித்தார்கள். இப்போதோ நமது முறை வந்திருக்கிறது. முன்னேறுகிறோம், இல்லையா?'' என்றார் அவர்.

''என் தோழி கான்யாவைத் தெரிந்தெடுத்திருந்தீர்களானால் நன்றாயிருந்திருக்கும்.''

''கான்யாவின் முறை வரும் போது கான்யா. நீ நிரம்பத் தானே கூச்சப்பட்டுக் கொள்ளாதே. உருவச் சிலை செய்ய விடு. இப்போது நமக்கு முன் இன்னொரு பிரச்சினை. விருந்தாளி தங்குவதற்கு எங்காவது ஏற்பாடு பண்ண வேண்டுமே'' என்றார் தலைவர்.

''நான் ஒன்றும் அப்படி நீண்ட காலம் தங்கப் போவதில்லை. நாளைக்கே திரும்பினாலும் திரும்பிவிடுவேன்'' என்று முன்யோசனையோடு சொல்லி வைத்தார் சிற்பி.

''அது எப்படி முடியும்? இரவுக்கிரவே சிற்பம் தயாரித்துவிடுவீர்களா என்ன?'' என்று ஒரே வியப்புடன் கேட்டார் தலைவர்.

''சிற்பம் செதுக்குவதெல்லாம் நான் என் சொந்த வீட்டில், என்னுடைய சிற்பசாலை யில் தான். இங்கே வெறுமே சில மாதிரிகள் வேண்டுமானால் தயாரித்துக்கொள்வேன். அவ் வளவே.'' இவ்வாறு சொல்ல ஆரம்பித்த சிற் பியின் குரல் ஏதோ சப்பைக் கட்டுக் கட்டு வது போலத் தொனித்தது. ''என்னுடைய வழியே அலாதி. எனக்கு எல்லாவற்றிலும் முக்கியமானது உயிருள்ள மனிதரை நேரில் பார்த்து அவருடைய வடிவமைப்பை நினைவில் பதிய வைத்துக்கொள்வது தான். அதற்குப் பின்பு...'' என்று தொடர்ந்து சொல்லிக் கொண்டு போனார்.

தலைவர் இடைமறித்து, ''அதென்னவோ உங்கள் பாடு. உங்கள் வழியைப்பற்றி அபிப் பிராயம் தெரிவிக்க நான் யார்? நீங்கள் தங்கு வதற்கு எங்கேயாவது ஏற்பாடு செய்ய வேண் டியது எங்கள் கடமை. இதோ, நொடிப் போ தில் ஏதாவது யோசனை செய்கிறோம்'' என்றார்.

''இதில் யோசிப்பதற்கு என்ன இருக் கிறது? என்னைப் பார்க்கத் தானே நீங்கள் வந்திருக்கிறீர்கள்? என்னுடனேயே தங்குங் களேன். என் வீட்டில் இடத்திற்குக் குறைச்ச லில்லை'' என்று மென்மையாக மொழிந்தாள் மௌலானியா.

அவள் இப்படிச் சொல்லவேண்டுமென்று தலைவர் எதிர்பார்த்தார் என்பது தெரிந்தது. ''நீ சொல்வது நிரம்பச் சரி. உன் வீட்டில் இடமும் நிறைய, அமைதியாகவும் இருக்கும். குஞ்சு குழந்தைகள் கிடையாதல்லவா? நல்லது. நீ இப்போதே எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிடு'' என்றார் அவர்.

''நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம். அவரைப் பட்டினி போட்டுவிட மாட்டேன்'' என்றாள் மெலானியா.

எல்லோரும் எழுந்தார்கள். மூலையில் வைத்திருந்த தன்னுடைய பெட்டியை எடுப்பதற்காகப் போனார் சிற்பி. ஆனால் மெலானியா அவரை முந்திக்கொண்டு விட்டாள். அவர் மூலை வரை செல்வதற்குள்ளாகவே பெட்டி மெலானியாவின் கையிலிருந்தது. விருந்தினர் வேண்டாம் வேண்டாம் என்று சொன்னதைக் காதிலேயே போட்டுக் கொள்ளாமல் பெட்டியும் கையுமாக நடந்தாள் அவள்.

''கையில் எடுத்ததை விடவே மாட்டாள். ஆமாம். எங்கள் ஆட்கள் அப்படியாக்கும்'' என்று நகைத்தார் அவர்களை வாயில்வரை வழியனுப்ப வந்த தலைவர்.

சுறுசுறுவாகவும் விரைவாகவும் வாயில் முற்றத்தைக் கடந்தாள் மெலானியா. இவ்வளவு வேகமாக நடந்து பழக்கமில்லாத சிற்பி,

பாவம், மிகுந்த சிரமத்துடன் அவள் பின்னே போனார். தான் நொய்ந்து, தளர்ந்து, கிழடு தட்டிப் போய்விட்டதாக முன் எப்போதை யும் விட அதிகமாக இப்போது தான் அவருக் குப் பட்டது.

மெலானியாவின் வீடு அழகிய பூஞ்சோலை போலக் குளுமையும், பசுமையும், தூய்மையு மாகத் திகழ்ந்தது. தரையில் புல் பரப்பியிருந் தது. பரண் அடுப்பு, சேவல்கள், பெடைகளின் படங்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. மேஜைமீது பூவேலை செய்த துணி விரிக்கப்பட் டிருந்தது. தெய்வப் படம் வைத்த மாடப் பிறைக்குப் பதில் ஒரு சிறு புத்தக அலமாரி யிருந்தது. அதற்கு மேலே, ஏதோ சஞ்சிகை யிலிருந்து கத்தரித்த ஊல்யா க்ரோமோவா வின்* படம் இலகியது.

விரைவிலேயே உணவுப் பாத்திரங்களும் தட்டுக்களும் மேஜைமீது வைக்கப்பட்டன. உணவு விஷயத்தில் எப்போதும் பத்தியத்தைக் கடைப் பிடிப்பவருக்கு இயல்பான மருட்சி

* **ஊல்யா க்ரோமோவா** — க்ராஸ்னதோன் பிரதேசத்தை பாசிஸ்ட் படைகள் கைப்பற்றியிருந்த போது அவர்களுக்கு எதிராகப் போரிட்ட இளம் காவல்படையின் வீரர்களில் ஒருத்தி.

யுடன் கீழ்நோக்காக அவற்றைப் பார்வையிட்டார் சிற்பி.

''தயவு செய்து ரொம்ப நிறைய வட்டித்து விடாதீர்கள். எனக்குப் பத்தியம் இப்போது'' என்று முனகினூர்.

கணப்போது மெலானியா கலக்கமுற்ருள்.

''அடாடா. அப்படியானுல் என்ன செய்வது?''

''செய்வதென்ன? ஒன்றுமில்லை. கவலைப் படாதீர்கள்.''

''அப்படிச் சொல்லக்கூடாது. உங்களுக்கு எது ஆகும் என்று சொல்லுங்கள், இதோ தயாரிக்கிறேன். பாலடை சாப்பிடுவீர்களா? முட்டை, பால், தேன்? எது ஒத்துக்கொள்ளுமோ நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள். எனக்குத் தெரியாதல்லவா?'' இவ்வாறு சொல்லிக்கொண்டே எல்லாப் பொருள்களையும் மேஜைமேல் வைத்தாள். விருந்தாளிக்குத் தூய 'நாப்கின்' கொடுத்தாள். ''இதை உங்கள் வீடாகப் பாவித்துக் கொள்ளுங்கள். இங்குள்ளதெல்லாம் உங்களதுதான்'' என்ருள்.

சிற்பி உணவைக் கொறிக்கலானூர். ஒவ்வொரு கவளமும் அவரது தொண்டைக்குக் கீழ் இறங்க மறுத்தது. நாளைக்கே அவர் திரும்பிச் செல்வார், உருப்படியாக ஒன்றுமே செய்யாமல், படைப்புத் தொழிலில் இன்னெரு

தோல்வியுடன். அந்தோ! போருக்குப் பிந் தைய ஆண்டுகளிலே அவருக்குத்தான் எத்தனை தோல்விகள்! 'வடிவநவிற்சி' யாம், முதியோர் வழிபாடாம், இன்னும் ஏதேதோ இழவெடுத்த தாம். இப்படி விமர்சகர்கள் அவர் படைப்புக் களைக் குறை கூறினார்கள். ''ஒருகால் என் கண்கள் கூர் இழந்து போயினவோ? ஏதாவது நுட்பத்தை நான் காணாது விட்டுவிடுகிறேனோ?'' மெலானியா செய்த மணங்கமழும் வெள்ளை ரொட்டித் துண்டைவாய் கொள்ளாமல் மென்று கொண்டே இப்படி எண்ணமிட்டார் சிற்பி. ''பெரிய பெரிய படைத் தலைவர்களின் சிற்பங் களை எல்லாம் சுளுவாகச் சமைத்த எனக்கு இந்தச் சாதாரண உழைப்பாளிப் பெண்ணின் வடிவைப் படைப்பதில் ஏன் இத்தகைய மலைப்பு? இவளை ஆழ்ந்து ஆராய வேண்டும், இவளது உயர்ந்த, மாண்பு வாய்ந்த ஊக் கத்தை உட்புகுந்து பார்க்க வேண்டும் என்றெல் லாம் எண்ணி யல்லவா இங்கு வந்தேன்! ஆனால் விளைந்தது என்ன? அவமானம்! ஏமாற்ற மடைந்து நழுவி ஓடுகிறேன்! இதற்குப் பின் கூட் டுப் பண்ணைத் தலைவர் என்னைப் பற்றி என்ன சொல்லுவார்? எளிமையும் வெகுளித்தனமும், நல்லியல்பும் அன்பும் திகழும் இந்தப் பெண் மெலானியா தான் என்ன நினைப்பாள்?'' இவ் வாறு சிற்பியின் எண்ணங்கள் ஓடின.

முன்பெல்லாம் இத்தகையவர்களைச் சிற்பி பொருட்படுத்தியதே கிடையாது. இப்போதோ, இவர்கள் அவரது அமைதியைக் குலைத்தார்கள், இவர்களுடைய அபிப்பிராயம் அவருக்கு எல்லா வகையிலும் முக்கியமானதாகி விட்டது.

''ஒருகால் வேறொரு சிற்பிக்கு மெலானியாவின் வடிவைப் படைக்க இயன்றிருக்குமோ?'' சட்டென்று எழுந்த இந்த எண்ணம் சிற்பியின் உள்ளத்தை வதைத்தது. தம்முடன் வேலை செய்யும் மற்றச் சிற்பிகளை, முக்கியமாகத் திறமை வாய்ந்த இளைஞர்களை அவர் நினைவுபடுத்திக்கொண்டார். ''ஒருவேளை அவர்கள் என்னைவிட நுட்பமாகப் பார்க்க முடியுமோ? நான் கிழடுதட்டிப் போய்விட்டேனே? இல்லை, எனது முறையிலுள்ள ஏதேனும் தவறு காரணமாகத் துலக்கமான பார்வையை இழந்து விட்டேனே? அதனால் தான் இவளுடைய ஆன்மாவை வெளிக்கொணர எனக்கு இயலவில்லையோ? இது உண்மையானால், ஐயோ, எத்தகைய கோரம்!'' என்று எண்ணி மறுகினார்.

இதற்கிடையில் மெலானியா பக்கத்து அறைக்குச் சென்று வேலைக்கான உடையணிந்து கொண்டு வெறுங்காலுடன் ஒரே ஊக்கமும் கவர்ச்சியுமாக வந்து நின்றாள்.

''நான் போக வேண்டும். சூரியகாந்தி

முன்பெல்லாம் இத்தகையவர்களைச் சிற்பி பொருட்படுத்தியதே கிடையாது. இப்போதோ, இவர்கள் அவரது அமைதியைக் குலைத்தார்கள், இவர்களுடைய அபிப்பிராயம் அவருக்கு எல்லா வகையிலும் முக்கியமானதாகி விட்டது.

''ஒருகால் வேறொரு சிற்பிக்கு மெலானியாவின் வடிவைப் படைக்க இயன்றிருக்குமோ?'' சட்டென்று எழுந்த இந்த எண்ணம் சிற்பியின் உள்ளத்தை வதைத்தது. தம்முடன் வேலை செய்யும் மற்றச் சிற்பிகளை, முக்கியமாகத் திறமை வாய்ந்த இளைஞர்களை அவர் நினைவுபடுத்திக்கொண்டார். ''ஒருவேளை அவர்கள் என்னைவிட நுட்பமாகப் பார்க்க முடியுமோ? நான் கிழடுதட்டிப் போய்விட்டேனோ? இல்லை, எனது முறையிலுள்ள ஏதேனும் தவறு காரணமாகத் துலக்கமான பார்வையை இழந்து விட்டேனோ? அதனால் தான் இவளுடைய ஆன்மாவை வெளிக்கொணர எனக்கு இயலவில்லையோ? இது உண்மையானால், ஐயோ, எத்தகைய கோரம்!'' என்று எண்ணி மறுகினார்.

இதற்கிடையில் மெலானியா பக்கத்து அறைக்குச் சென்று வேலைக்கான உடையணிந்து கொண்டு வெறுங்காலுடன் ஒரே ஊக்கமும் கவர்ச்சியுமாக வந்து நின்றாள்.

''நான் போக வேண்டும். சூரியகாந்தி

வயலில் வேலை யிருக்கிறது. நீங்கள் இங்கே இளைப்பாறுங்கள். இதோ கட்டில். போர்வைகள், துப்பட்டிகள் இதோ இருக்கின்றன'' என்ருள்.

''நன்றி.''

மெலானியா வெளியே சென்றதுமே வீடு இருளடைந்து விட்டது போல் தோன்றியது: விருந்தாளிக்குக் குளுகுளுவென்றிருக்க வேண்டும் என்பதற்காக அவள் வெளிப் புறமிருந்து ஜன்னல் கதவுகளை ஓசைப்படாமல் மூடியது தான் அதற்குக் காரணம்!

மாலை யாவதற்குள் சிற்பி பல காரியங்களை மளமளவென்று செய்து முடித்தார். சிறிது நேரம் களையாறிஞர், பின்பு காரியாலயத்தின் அருகே தாம் கண்ட சிறுவர்களின் உருவ வரைப் படங்கள் தயாரித்துக்கொண்டார். அப்புறம் கூட்டுப்பண்ணைத் தலைவருடன் பால்பண்ணை, கொல்லுலைக் கூடம், மின்சார நிலையம் ஆகியவற்றைச் சுற்றிப் பார்த்தார். சிற்பி வந்திருக்கும் செய்தி ஊர் நெடுகிலும் வாய் மொழியாகவே பரவியிருந்தது. எங்கும் மக்கள் விருந்தாளியை இன்முகத்துடன் உபசரித்தார்கள். கலகலப்பான பால்பண்ணை மகளிரோ, அவர் இது வரை யார் யாருடைய சிற்பங்கள் செதுக்கியிருக்கிருர், அவருடைய சிற்பங்கள் நன்ருக வாய்த்திருக்கின்றனவா, மெலானியா சோபித்

கோவின் சிற்பத்தை எந்த வாகில் செதுக்கப் போகிறுர் என்றெல்லாம் ஆர்வம் பொங்கக் கேள்விமேல் கேள்வியாகப் போட்டுத் துளைத்து விட்டார்கள்.

''பார்ப்பவர்களெல்லாம் வைத்த கண்ணை வாங்க முடியாதபடி வடிவாகச் செதுக்குங்கள் எங்கள் மெலானியாவின் சிற்பத்தை. அவள் இதற்கு ஏற்புடையவள்!'' என்று கூட்டுப்பண்ணைக்காரர்கள் வேண்டிக்கொண்டார்கள்.

உலைக்கூடத்திலே சிற்பியைக் கண்டதும் கொல்லர்கள் சுத்திகளைக் கீழே வைத்து விட்டு, புகைபிடித்தவாறே அவருடைய கேள்விகளுக்கெல்லாம் சட் சட்டென விடையளித்தார்கள்.

''இங்கே மலர்கள் மீது இத்தகைய அன்பு கொண்டவர்கள் யார்?'' என்று கேட்டார் சிற்பி.

''எல்லாம் எங்கள் பெண்கள் தாம். அவர்கள் தாம் எங்கு பார்த்தாலும் பூச்செடிகளாக நட்டு வளர்த்திருக்கிறுர்கள் — காரியாலயத்திற்குப் பக்கத்திலும் கிளப்பின் பக்கத்திலும், இங்கே, உலைக்கூடத்திற்கு வெளியே கூட. இதெல்லாம் தொடங்கியது எப்பொழுதென்றுல் மெலானியா....''

மீண்டும் மெலானியாவா? எங்கு போனுலும் அவளுடைய அடிச் தடங்கள் கண்ணில் பட்ட வண்ணமா யிருக்கின்றனவே!

''உங்கள் மெலானியா ரொம்பக் கெட்டிக்காரியாக்கும், அப்படித் தானே?'' என்று சிற்பி கேட்டார்.

''ஓகோ! அவளை உங்களுக்கு நன்றாய்த் தெரியாது போலிருக்கிறது. இல்லாவிட்டால் இந்த மாதிரிக் கேட்பீர்களா? சோர்வே அறியாதவள், ஈடுபாடு உடையவள், தங்கமான பெண்.''

''அவளுக்குப் பொழுது புலர்வது வயலிலே தான் என்றைக்கும்.''

''இதோ பாருங்கள், சிற்பியாரே! அவள் வடிவத்தைக் கோளாறுபடுத்தி விடாதீர்கள். முழுத் திறமையையும் காட்டி வேலை செய்யுங்கள்.''

முழுத் திறமையையும் காட்டுவதாம்!... தன் மீதும் தன் கலை மீதும் கூட்டுப்பண்ணைக் காரர்கள் காட்டிய ஆர்வமும் மரியாதையும் சிற்பியின் உள்ளத்தைத் தொட்டன. அதே சமயம் அவருக்கு ஏக்கமும் உண்டாயிற்று. இத்தகைய மதிப்பிற்கும் நம்பிக்கைக்கும் தாம் அருகரல்ல என்று அவருக்குப் பட்டது. அவர் மனம் அமைதியற்றுத் தவித்தது. தனக்கு உரியதல்லாத ஒரு பொருளைத் தன் விருப்பமின்றியே ஏற்றுக்கொள்பவனின் மனநிலையில் அவர் இருந்தார்.

நேரம் ஆக ஆக, தான் அங்கிருந்து விரை

வாக வெளியேறிவிட வேண்டும் என்ற சிற்பியின் எண்ணம் முன்னிலும் அதிகமாக உறுதிப்பட்டது. ''இவர்கள் நேர்மையுள்ள உழைப்பாளி மக்கள். இவர்களுக்குச் சுமையாக இங்கே உட்கார்ந்துகொண்டு, எனது படைப்புத் திறனின்மையை இவர்களிடமிருந்து மறைத்து, இவர்களது விருந்தோம்பலை இன்பமாகத் துய்த்துக்கொண்டிருப்பதில் பயன் ஏதுமில்லை. இவர்கள் என்னை ஊட்டி உபசரிப்பது எதற்காக? என்னிடமிருந்து எதையோ எதிர்பார்ப்பதனுல் தானே! நானே? நான் இவர்களை எவ்வகையில் மகிழ்விப்பேன்? இவர்களுக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்? வெளியேறுவதே நல்லது. அது ஒன்றே எனக்கு மிகச் சிறந்த வழி. அப்புறம் இவர்கள் இதைப்பற்றி என்ன நினைப்பார்கள் என்பது என் மனத்தை உலப்புகிறது. என்ன நினைப்பார்களென்று இப்போதே ஊகிக்க முடியுமே. இவர்கள் கண்களுக்கு நான்தான் எல்லா வகையிலும் குற்றவாளியாகப் படுவேன், மெலானியா அல்ல. இவர்களுக்கு அவள் 'தங்கமான பெண்' தான்—நான் சிற்பம் செதுக்கினுலும் சரி, செதுக்காவிட்டாலும் சரி.'' சிற்பி இவ்வாறு எண்ணி உழம்பினுர்.

அவர்கள் அணையின் அருகே வந்துவிட்டார்கள். அதன் மறு கோடியில் பிரம்மாண்

டமான சிவப்புக் கட்டிடம் ஒன்று கம்பீரமாக நின்றது. அதைச் சுட்டிக்காட்டி, ''இதுதான் எங்கள் மின்சார நிலையம். அழகியது, அல்ல வா?'' என்ருர் தலைவர்.

''அழகியது தான். கட்டி வெகுகாலமாயிற் ே?'' என்று கேட்ட சிற்பி பொங்கிப் பாயும் நீர் வீழ்ச்சியையும், குமிழியிட்டு ஒளிரும் வெண் நுரையையும் நோக்கியவாறு நின்ருர்.

''சென்ற ஆண்டுக்கு முந்திய ஆண்டு தான் கட்டிமுடித்தோம். கட்டிட வேலை தொடங்கியது 1944ம் ஆண்டு, போர் மும்முரமாக நடந்து கொண்டிருந்த போது. இந்த அணை முழுவதும் எங்கள் பெண்கள் கைகளால் நிர்மாணிக் கப் பட்டது என்று சொல்லலாம். எண்ணிப் பார்த்தால் எங்கள் பெண்கள் அற்புத மானவர்கள். எனக்கு மட்டும் உங்களுடைய ஆற்றல் இருக்குமாளுல் எங்கள் கூட்டுப்பண்ணை மகளிர் எல்லோருக்கும் சிற்பங்கள் சமைத்து நிறுவிவிடுவேன். ஆமாம். நமது யுகத்தின் வீரமாதர்கள் அவர்கள் ஒவ்வொருவரும்!''

தலைவரின் இவ்வார்த்தைகளைக் கேட்ட சிற்பி புன்னகையுடன், ''முயன்று பாருங்கள். இது அவ்வளவு எளிதல்ல என்பதைக் கண்டு கொள்வீர்கள்'' என்ருர்.

''எளிதென்று நான் சொல்லவில்லையே! அவர்கள் இதற்கு அருகதை யுள்ளவர்கள்

என்பது மட்டும் உண்மை, ஆணையிட்டுச் சொல்கிறேன். சென்ற வருடங்களில் நடந்ததைத் தான் எடுத்துக் கொள்ளுங்களேன். ஓடர் நதி என்ன, பலத்தோன் ஏரி என்ன என்று பல முனைகளில் நாங்கள் போரிட்டுக் கொண்டிருந்தோம். எங்கள் பெண்களோ, காவல்படை வீரர்கள் போல இங்கே பணியாற்றினார்கள். கதிரடிக்கும் இயந்திரத்தை வயல் வயலாக இழுத்துச் சென்றார்கள். எங்கள் வருகையை எதிர்பார்த்து இந்த அணையைக் கட்டித் தயாராக வைத்திருந்தார்கள். நூற்றுக்கணக்கான கன மீட்டர் மண்ணை அகழ்ந்தெடுப்பது எளிதான வேலை யென்று எண்ணுகிறீர்களா? பேச்சோடு பேச்சாக இன்னொன்று: இந்த வேலையிலும் மெலானியா தனிச் சிறப்புப் பெற்று விட்டாள். இரவு பகல் ஓய்வு ஒழிவின்றி மண்ணை அகழ்ந்து அகழ்ந்து கொட்டிய வண்ணமா யிருந்தாளாம்....''

பலவகை வேலைகளில் ஈடுபட்டிருக்கையில் மெலானியா எப்படித் தோற்றமளித்திருப்பாள் என்று உருவகப் படுத்திப் பார்த்துக் கொண்டார் சிற்பி. என்ன முயன்றும் அவர் மனத்தில் முதலில் ஏற்பட்ட எண்ணம் மாறவே யில்லை. வயலில் கதிரடிக்கும் இயந்திரத்தை இழுத்து வரும்போதும் சரி, அணை கட்டும் பொருட்டு மண்ணை அகழ்ந்தெடுக்கும்போதும்

சரி, காரியாலயத்தில் அவர் முதன்முறை கண்டபோது இருந்தது போலவே அழகோ அந்தமோ இல்லாதவளாய், கட்டிப் போட்டது போன்று அசடு வழியத் தோற்றமளித்தாள் மெலானியா. இந்த உருவப்பதிவைச் சீர் படுத்தி, மெலானியா சிற்பியின் கண்களுக்கு உயர்வானவளாகத் தோற்று மாறு செய்யும் பொருட்டுத் தலைவர் பட்ட பாடெல் லாம் வீணாயிற்று. ''தினசரி நடைமுறையில் அவள் காட்டும் வீரத்துக்கும், அவளது அற்புதச் செயல்களுக்கும் உரிய வணக்கம் செலுத்துகிறேன். ஆனால் அவளது தோற்றத் தில் காணும் குறைபாடுகளை இவற்றால் சீர்படுத் தவோ ஈடுகட்டவோ முடியாதே, என்ன செய் வது?'' என்று எண்ணமிட்டார் சிற்பி.

''உங்கள் ஆட்கள் எல்லாம் வியக்கத் தக்க மாண்பு வாய்ந்தவர்கள் தாம். அவர் களைப்பற்றி நீங்கள் பெருமை கொள்வது நியா யமே. இதை நான் அறிகிறேன், இவான் ப்யோ தரவிச். நீங்களும் என் நிலைமையைப் புரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்....''

''புரிந்து கொள்வதற்கு இதில் என்ன இருக்கிறது? போவதென்று தீர்மானித்துவிட் டீர்களாக்கும். அப்படித்தானே?''

''ஆம்,''

''ரொம்ப சரி. நாளைக்கு நான் காரியமாகப் பட்டணம் போக வேண்டியிருக்கிறது. வழியில் உங்களை ஸ்டேஷன்வரை கொண்டு விடுகிறேன். குதிரைகளை அதிகப்படியாக ஒரு முறை பூட்டி விரட்டுவானேன்?'' என்றார் தலைவர்.

விட்டாற்போலப் பிரிந்தார்கள் இருவரும். டிராக்டர் ஓட்டிகளிடம் வேலையிருப்பதாக முணுமுணுத்து விட்டு அணை வழியே ஸ்தெப்பியை நோக்கி நடையைக் கட்டினார் இவான் ப்யோதரவிச். சிற்பி தனியாக வீடு (மெலானியாவின் குடிலை மனதுக்குள் அப்படி அழைத்தார் அவர்) திரும்பினார்.

வரும்போது சிற்பிக்குச் சிறு தடுமாற்றம் ஏற்பட்டது. அவருக்கு வழி தவறிவிட்டது. எல்லா வீடுகளும் ஒருப்போலத் தோற்றமளித்தன. நாற்புறச் சுவர்களிலும் வெள்ளைக்குக் கீழே நீலச் சாயம். இறப்புகளுக்கடியில் வெண்மையாக மிளிரும் இன்ஸுலேட்டர்கள். உட்புறம் சென்று மறையும் மின்சாரக் கம்பிகள். ஆற்றின் மறுகரையில் மலைக்குப் பின்னே அஸ்தமிக்கும் தறுவாயில் இருந்த சூரியனின் செங்கதிர்கள் பட்டுத் தகதகக்கும் பலகணிகள். எல்லாம் மெலானியாவின் வீட்டில் போலவே.

''இப்படியும் நேர வேண்டியிருந்ததே!

பட்டப் பகலில் வழி தவறிவிட்டேனே! இப்போது எங்கு போவது?'' என்று மனத்துக்குள் அங்கலாய்த்தார் சிற்பி.

அந்த நேரத்தில் தெருவின் மறுகோடியில் செந்நிறப் புழுதிப் படலம் எழுந்தது. மாட்டு மந்தை மேய்ச்சலிலிருந்து திரும்பிவருகிறது என்று ஊகித்துக்கொண்டார் சிற்பி. விரும்பினாலும் இல்லாவிட்டாலும் அவர் இந்தத் தெருவை விட்டு அப்பால் சென்றாக வேண்டும்.

ஆனால் செல்வது எங்கே?

தமக்கு அருகே, முதுகுப் புறம் உதவியாளர்கள் தயாராக நிற்பது சிற்பிக்குத் தெரியாது. எவர்களுடைய உருவ வரைப்படங்களைப் பின்னால் உபயோகிக்கும் பொருட்டுச் சிற்பி தயாரித்தாரோ அந்தச் சிறுவர்கள்தாம் அவர்கள். அலட்சியமாயிருப்பது போன்ற பாவனையுடன் கைகளைப் பின்புறம் ஒன்றன் மேல் ஒன்றாக வைத்தவாறு நின்றிருந்தார்கள். ஆனால் உதடுகள் மட்டும் இறுக்க மூடியிருந்தன—பக்கெனச் சிரித்துவிடக் கூடாதே என்பதற்காக. அவர்கள் ஆரம்பத்திலிருந்தே அவரைத் தொடர்ந்து வந்திருக்க வேண்டும், அவர் மெலானியாவின் வீட்டைக் கடந்து சென்றதையும், எதிரே வழி முழுவதையும் அடைத்துக்கொண்டு மாட்டு மந்தை வருவது கண்டு அவர் செய

விழுந்து நிற்பதையும் அவர்கள் கவனித்திருக்க வேண்டும் என்று தென்பட்டது.

''நாங்கள் உங்களுக்கு வழி காட்டுகிறோம். உங்களுக்கு எங்கே போக வேண்டும் என்று எங்களுக்குத் தெரியும்'' என்றான் சுமார் எட்டு வயதுள்ள பொன்மயிர்ப் போக்கிரி ஒருவன்.

''எங்கேயாம், சொல்லு கேட்போம்.''

''மெலானியா சோபித்கோ வீட்டுக்கு.''

''சபாஷ். ரொம்ப சரி.''

''வேகமாக வாருங்கள் போவோம். இல்லாவிட்டால் மாட்டு மந்தை உங்கள் மேல்காலெல்லாம் புழுதியாக வாரிக் கொட்டிவிடும்.''

''உங்கள் மேல் கொட்டாதோ?''

''எங்களுக்குப் பயமில்லை.''

பணிவான பார்வையுடன் பையன்களைப் பின்தொடர்ந்தார் சிற்பி.

''உங்கள் ஊரில் எல்லா வீடுகளும் ஒரே மாதிரியிருக்கின்றன அல்லவா? அதனால் தான் வழி தப்பிவிட்டது எனக்கு'' என்று விளக்கினார்.

''பார்ப்பதற்குத்தான் உங்களுக்கு ஒரே மாதிரியாகத் தெரிகின்றன. உள்ளே போனீர்களோ, ஒவ்வொரு வீடும் தனித் தனி!'' என்றான் அந்த வாண்டு.

''இருக்கலாம். நான் மறுத்துப் பேச வில்லை.''

''எல்லா வீடுகளிலும் வெள்ளையும் நீல முமாகச் சாயம் பூசி யிருக்கிறதே என்று பார்க் கிறீர்களா? மே தின விழாவிற்காக அப்படி.''

''எல்லோரும் எனக்கு இது எனக்கு அது என்று சண்டை பிடிக்கக் கூடாது என்பதற் காக நீலச் சாயம் மட்டுமே தருவித்தார்கள்.... இதோ உங்கள்'வீடு வந்துவிட்டது.''

''புரிகிறது, இப்போது புரிகிறது. வழி காட்டியதற்கு நன்றி.''

''இதென்ன பிரமாதம்!''

வளைவுக்குள் போய் வாயிற் கதவை மூடி விட்டு அப்பாடா என்று பெருமூச்சு விட்டார் சிற்பி.

மெலானியா இன்னும் வீடு திரும்பவில்லை.

பொழுது சாய்ந்த பிறகு புற்கட்டும், வழி யில் பறித்த பூக்கொத்துமாக அவள் வந்து சேர்ந்தாள்.

அவளுடைய விருந்தாளி தோட்டத்தில் கண்ணில் பட்டதை யெல்லாம் நெருடுவதும் முகர்ந்து பார்ப்பதுமாகச் செடிகளுக்கிடை யே வெறுமே உலவிக் கொண்டிருந்தார்.

''ஆராய்ச்சி நடக்கிறதாக்கும்?''

''ஊம்? இல்லை. இப்படி ஏதோ பார்ப்

போமென்று.... ஆமாம், உங்களுக்குச் சொந்தமான நிலம் இவ்வளவுதானா?''

''இதற்கு மேல் எனக்கு எதற்காம்? என்னுடைய முக்கியமான நிலம் அதோ, அங்கே இருக்கிறது'' என்று மெலானியா மலைப் பக்கமாகக் கையைக் காட்டினாள். ''இது எனக்குப் பொழுது போக்கு.''

''இங்கே பார்க்கிறேன், எல்லாம் பான்ஸி மலர்களும் வயலெட் பூக்களுமாகவே இருக்கின்றனவே. உங்கள் சூரியகாந்தி எங்கே, மக்காச்சோளம் எங்கே?''

''அதோ, அங்கே'' என்று புன்னகையுடன் மீண்டும் மலைப்புறம் சுட்டிக்காட்டினாள் மெலானியா.

சிற்பி சிரிக்கவில்லை.

''அப்புறம் சீமைத்தக்காளி, முட்டைக் கோஸ், மற்றக் காய்கறிகள் இவை எல்லாம்?''

''அவையெல்லாம் பண்ணையிலிருந்து வாங்கிக்கொள்கிறேன். இங்கே அநேகமாக எல்லோருமே பண்ணையிலிருந்துதான் வாங்கிக் கொள்கிறோம். பண்ணையில் காய்கறிகள் இங்கே விட மேல், முன்னதாகவும் விளைந்துவிடுகின்றன.''

''ஏன், அங்கே பருவநிலை இங்கே விட மேலோ?''

சிற்பியின் இந்த வறட்டுக் கேலியைப் பொருட்படுத்தாமல், ''பருவநிலை இதுவே தான்.

ஆனால் அங்கே பாசன விவசாயம். வீட்டிலே ஒரு சில முட்டைக்கோஸ்களுக்காகக் கோடை காலமெல்லாம் பாடுபட வேண்டும். தண்ணீர் சுமந்து சுமந்து கொட்டி இடுப்பு முறிந்து போம். யாருக்கு வேண்டும் இந்தப் பாடு? படிக்க முடியாது, சினிமா பார்க்க முடியாது. நேரமெல்லாம் இதற்கே.... பண்ணையிலே என்றால் இறைவைப் பம்பு வைத்திருக்கிறோம்'' என்று விளக்கினாள் மெலானியா.

''இது விந்தையான சேதிதான்! குடியானவர்களின் நிலங்கள் தங்கள் தோற்றத்தையும் இயல்பையும் மாற்றிக்கொண்டுவிட்டன என்பது தெளிவாகிறது. அப்படியானால் புல்லரிசியும் கேழ்வரகும் வீட்டு நிலத்தில் ஒருவரும் பயிரிடுவதில்லை என்று சொல்லுங்கள்!''

''எதற்காக? எங்கள் புல்லரிசி வயலிலே. எங்கள் கேழ்வரகும் வயலிலே. வீட்டு நிலத்திலே ஒன்றுக்குப் பின் வேறொன்றாக வகைவகையான பயிர்களை எப்படி விளைப்பதாம்? பூச்செடிகளுக்கும் பழமரங்களுக்கும் இங்கே இடமளிப்பதற்குக் காலம் வந்துவிட்டது. இவற்றை வேண்டுமானால் வளர்க்கலாம். தானியங்களும் காய்கறிகளுமோ... அவற்றையெல்லாம் நான் பண்ணை வயலின் பொறுப்பில் விட்டுவிட்டேன். பண்ணையிலிருந்தால் என்னிடமும் இருக்கும்!''

''ஆக, உங்களுடையதெல்லாமே அங்கே தானே?''

''என்னுடையதெல்லாம் மட்டுமல்ல நானே எல்லாம் அங்கேதான்!'' என்று சிரி தாள் பெண்மணி.

மாண்பும், மகிழ்ச்சியும் ஒளிர்ந்த அவளை சிற்பிக்கு இப்போது மிகவும் பிடித்தது. அ ளுடைய முகத் தோற்றம் இப்பொழுது எப்ப யிருக்கிறதென்று பார்க்க விரும்பினர். மங்கு கருண்டுவிட்டதால் புறகட்டும் கையுமாக அ ளுடைய நிழலுருவம் புலப்பட்டதே தவிர முகம் தெரியவில்லை.

''உள்ளே போக வேண்டியதுதான்'' என் வீட்டை நோக்கித் திரும்பியவள், ''இன் கம்யூனிஸ்ட் இளைஞர் சங்கத்தின் கூட்ட வேறு உண்டு. சாவி உங்களிடம் இருக்கிறத லவா?'' எனக் கேட்டாள்.

''இருக்கிறது—நான் கெட்டுப் போக் யிராவிட்டால்.''

''அடுத்த தடவை வெளியே போகு போது சாவியை இதோ, இங்கே, ஜன்ன கதவுக்குப் பின்னல் வைத்துவிடுங்கள்.''

''ஆகட்டும். ஆனல் நான் தான்.. நாளைக்குப் போய்விடுவேனே.''

''அதற்குள்ளாகவா?''

''ஆமாம். ஒருகால் இலையுதிர்காலத்தில் திரும்ப வருவேன்.''

''இலையுதிர் காலத்திலோ, நன்றாய்ச் சொன்னீர். ராசா வருவார் என்று ரோசாப்பூ வாங்கி வைப்போம். நேரடியாகச் சொல்லி விடுவது தானே 'நீ சிற்பத்துக்குத் தகுந்தவளில்லை, உன்னை எனக்குப் பிடிக்கவில்லையென்று?''' என நினைத்துக்கொண்டாள் மெலானியா.

கதவுப் பூட்டைத் திறந்துகொண்டே, ''உங்கள் இஷ்டம்'' என்று முணுமுணுத்தாள். பொங்கிய துயரம் அவள் தொண்டையை அடைக்கிறது என்பது குரலிலிருந்தே தெரிந்தது.

குற்றவாளி போல மௌனம் சாதித்தார் சிற்பி. எப்படியாவது அவளைத் தேற்றி, அவளுக்கு விஷயத்தை விளக்க விரும்பினார். ஆனால் அவள் புரிந்துகொள்வாளா?

உள்ளே போக வெட்கமாயிருந்தபடியால் வெளிச்சுவரோரமாக இருந்த மண்மேட்டின் மீதே உட்கார்ந்திருந்தார் சிற்பி. உள்ளே ரேடியோ ஒலித்தது. களைப்பறியாத மெலானியா வீட்டுக் காரியங்களில் ஈடுபட்டு விட்டாள் என்று தெரிந்தது. அவரைப் பற்றி அவள் என்ன நினைக்கிறாள்? இப்போது அவளுக்கு எல்லாம் புரிந்துவிட்டதென்பது தெளிவு. ஆரம்பத்தில் அவருக்குத் தென்பட்டது போல

அப்படி வெகுளி ஒன்றுமில்லை அவள், ஆமாம்.

சிறிது நேரத்தில் சில பெண்கள், அவளுடன் வேலை செய்பவர்களாயிருக்கும், அவளைப் பார்க்க வந்தார்கள். வெள்ளையுடை அணிந்திருந்த சிற்பியைக் கண்டு அச்சங் கொண்டவர்கள் போல நடித்து அவர்கள் அவர் அருகாகச் சென்று அறைக்குள் புகுந்தார்கள். அக்கணமே வீடு முழுவதும் சிரிப்பொலியும், பெண்களுக்குரிய கீச்சுக் குரலும், வேடிக்கைப் பேச்சுக்களுமாகக் கலகலத்தது. ''க்விலீ கோம்யூனிஸ்மா'' கூட்டுப்பண்ணையைச் சேர்ந்த யாரோ திமீத்ரோ என்பவனின் பெயர் அவர்கள் பேச்சில் மீண்டும் மீண்டும் அடிபட்டது. இந்த திமீத்ரோ மெலானியாவின் காதலன் என்பது அப்புறம் தெளிவாயிற்று. மெலானியாவை ஒருவன் காதலிக்கிறான் என்பது சிற்பிக்கு இப்போது வியப்பாக இல்லை.

தாரகைகள் மிளிர, இசையொலிக்க, இன்பமாய்த் திகழ்ந்தது மாலை. குளுகுளுவென்று வீசிய காற்றில் இரவில் பூக்கும் மலர்களின் இன் மணம் கமழ்ந்தது.

அருகேயிருந்த கிளப்பில் ஒலிபெருக்கி முழங்கியது. மாஸ்கோ பல்ஷோய் தியேட்டரில் நடந்து கொண்டிருந்த கதம்ப நிகழ்ச்சிகள் அதன் மூலம் வந்தன.

மெலானியா திருவிழாவுக்குப் போலச் சிங்காரித்துக்கொண்டு, தோழிகளுடன் வெளியே வந்தாள். இரவுச் சாப்பாடு மேஜைமேல் வைத்திருக்கிறது என்று விருந்தாளியிடம் சொல்லிவிட்டுத் தோழியர் கைகளில் கைகள் கோத்துக் கொண்டு நடந்தாள். இவ்வாறு அவர்கள் கூட்டமாக நெருங்கிக் கலகல வென நகைத்தவண்ணம் சென்று இருளில் மறைந்தனர்.. அவர்களது உரத்த சிரிப் பொலி நெடுநேரம் வரை சிற்பிக்குக் கேட்டுக் கொண்டிருந்தது. அவர்கள் தம்மைத் தான் நகையாடுகிறார்கள் என்று சிற்பி எண்ணிக் கொண்டார். எனினும் அவருக்கு வருத்த முண்டாகவில்லை. எழுந்து தள்ளாடி நடந்து படுக்கைக்குச் சென்றார்.

மறுநாள் இவான் ப்யோதரவிச்சுடன் வண்டியில் அமர்ந்து ஊரை விட்டு வெளியேறினார் சிற்பி.

மெலானியாவிடம் அவர் சொல்லிக்கொள்ளக் கூட இல்லை. அவர் கண் விழித்த போது மேஜை மீது பத்தியமான காலையுணவு தயாராக வைத்திருந்தது. மெலானியாவின் சுவட்டையே காணோம். எப்போதோ வேலைக்குப் போய்விட்டாள். தமக்குப் பரிவுடன் விருந்தளித்த வீட்டின் கதவைப் பூட்டி, தலைக்கு நாள் மெலானியா சொல்லி யிருந்தது போலவே

பலகணிக் கதவுக்குப் பின்புறம் வைத்துவிட்டுப் புறப்பட்டார் சிற்பி.

வண்டியில் இவான் ப்யோதரவிச்சின் அருகே உட்கார்ந்திருந்தார் சிற்பி. வண்டியோ குலுக்கிக் குலுக்கிப் போட்டது. மெலானியா விடம் விடை பெருமல் இப்படி வெளியேறுவது எக்கச் சக்கமாகப் பட்டது சிற்பிக்கு. தப்பி யோடுவது போல இருந்தது.

''இவான் ப்யோதரவிச், 'ஒரு நிமிடம் மெலானியாவிடம் போக முடியுமா? அதாவது அவள் வேலை செய்யும் வயலுக்கு?'' என்று தலைவரிடம் கேட்டார்.

''முடியாமலென்ன? எல்லாம் முடியும். சுற்று வழியாகப் போக வேண்டியிருக்கும், உண்மை தான்.... ஆனுல் ஒன்றும் பிரமாத மில்லை'' என்று பதிலளித்த தலைவர், வண்டி யோட்டி பக்கம் திரும்பி, ''மீஷ்கா, இரண் டாம் தொழிற் குழு இருக்குமிடத்துக்கு விடு'' என்று உத்தரவிட்டார்.

வழியில் தளதளப்பான புதர்கள் அடர்ந்த வயல் ஒன்றைக் காட்டி, ''இது என்ன பயிர்?'' என்று கேட்டார் சிற்பி.

''அதுவா? அராகிஸ்.''

''கேள்விப்படாத பெயராயிருக்கிறதே!''

''வேர்க்கடலை. 'வறுத்த சீனக் கொட்டை' என்று உங்கள் மாஸ்கோவாசிகள் சொல்லு

கிறார்களே, அதுதான் இது. வறுபட்டதாகவே விளைகிறதென்று நினைத்துவிடாதீர்கள்'' எனத் தெளிவு படுத்தினார் தலைவர்.

களிமண் நிறைந்து புதர்கள் மண்டிய மலைச்சரிவுகளுக்கு இடையே குறுகிய பாதை செங்குத்தாக ஏறிச் சென்றது. எதிரே, மிக மிக அருகாமையில், பாதையின் குறுக்கே நீல எழில் காட்டியது வானம். கீழே, அகன்ற பள்ளத்தாக்கில், மைல் கணக்காக நெடிது பரந்திருந்தன ஆற்றுப்படுகைப் புல்வெளிகள். புல்வெளிகளுக்குக் கீழே அமைதியாக ஒளிர்ந்தது ஆறு. அதன் இரு கரைகளிலும் கிராம வீடுகள் புள்ளிக் கோலம் போட்டது போல வெண்மையாக மினுமினுத்தன. அதோ தெரிந்தது சிறகுகள் போன்ற பலகணிக் கதவுகள் கொண்ட வீடு—மெலானியாவினது. சிறிது திறந்த அதன் ஒளிசுடரும் ஜன்னல்கள் ஓரிரவே தங்கிவிட்டுப் போகும் விருந்தாளியைக் கீழ் நோக்காகப் பார்த்துவிட்டுத் திரும்பிக்கொள்பவைபோலத் தென்புறம் பார்த்தன.

ஏற்றத்தில் வண்டியை இழுத்துச் சென்ற களைப்பினால் குதிரைகள் செருமின. எல்லோரும் இறங்க வேண்டியதாயிற்று. பாதையோரமாக நடந்த சிற்பி, களிமண் கட்டிகளைக் கையிலெடுத்து விரல்களால் பிசைந்து கொண்டே, ''செழுமையான களிமண்! சிற்

பம் சமைப்பதற்கு ஏற்றது'' என்று தலைவரிடம் கூறினார்.

''பார்த்தீர்களா! நீங்கள் என்னடா என்றால் ஓர் இரவு தங்கிவிட்டு 'ஆச்சு' என்கிறீர்களே. அப்பட்டமாகச் சொல்வதானால் நான் உங்கள் வரவைப் பயன்படுத்திக் கொள்ளத் திட்டமிட்டிருந்தேன். எங்கள் கிளப்பில் வைப்பதற்காக நீங்கள் நல்ல மாதிரியாக... அதாவது ஏதேனும் சிறந்த சிற்பங்கள் செய்வீர்களென்று... களிமண்ணோ ஏராளம் இங்கே!'' என்று இழுத்தார் தலைவர்.

மலைமீது ஏறி வயலை அடைந்ததும் சிற்பி சட்டென நிலைத்து நின்றுவிட்டார்.

'உங்களைத் தானே! இது என்ன?'' என்று வியப்பே வடிவாய் வினவினார்.

இன்ப மிகுதியால் சிற்பிக்கு மூச்சு முட்டியது. அவர் கண்ட காட்சி அவரைக் கண நேரம் மெய் மறக்கச் செய்து குருடாக்கி விட்டது. பெருவியப்பினால் திக்குமுக்காடிப் போனார். விசாலமான பள்ளத்தாக்கு முழுவதும் கண்ணுக்கு எட்டிய தொலைவரை பொன்னொளி பரப்பிச் சுடர்ந்தன சூரியகாந்திப் பூக்கள். தகதகக்கும் தலைகளும், மெல்லிய மேனிகளுமாகக் கணக்கற்ற செடிகள் தொடுவானம் வரை பல்கிப் பரந்து மண்டிக் கிடந்தன. ஒன்று போல எல்லாம் வானில் சுடரும் தங்கள் நாய

கனே—கதிரவனே — நிமிர்ந்து நோக்கியவாறு நின்றன. தாமே தங்கள் மஞ்சள் மிளிர் முடிகளினுல் அவை ஒளி வீசுவது போலவும், அதனுல் தான் நாற்புறமும் மிகத் தெளிவான விளக்கமும், உணர்வை மயக்கும் இன்பப் பெருக்கும், விழாக்காட்சியும் புலப்படுவது போலவும் பிரமை தட்டியது. கதிரவன் விளையாடுங்களமோ இது என்ற மலைப்பு உண்டாயிற்று. இங்கே காற்றுங்கூடப் பொன் மெருகேறி யிருக்கிறது போலும் என்று தோன்றியது.

வண்டிக்காரன் குதிரைகளை நிறுத்திவிட்டு, சாவகாசமாகச் சிகரெட் புகைக்கலானுன். கூட்டுப்பண்ணைத் தலைவரும் சிற்பியும் சூரியகாந்திகளை நோக்கி நடந்தனர். வர்ணனைக் கெட்டாத இனிமை கமழும் நறுமணம், ஒளி விடும் மலர்களிலிருந்து வந்து அவர்களைப் போதை கொள்ளச் செய்தது.

"இவை மெலானியா பயிரிட்டவை. அதைக் குறிக்கும் விளக்கப் பலகைகூட இங்கே இருக்கிறதே. படித்துப் பாருங்கள். அப்பால், தொலைவிலே மற்றக் குழுவினரின் வயல்கள்" என்றுர் தலைவர். மெலானியாவின் வயலைப் பற்றிப் பேசுவதிலேயே அவருக்கு மகிழ்ச்சி உண்டாவதாகக் காணப்பட்டது.

அந்தக் காட்சி யெழிலில் சொக்கிப்போயிருந்த சிற்பியோ, தொடுவானம் வரை

செறிந்து பரந்திருந்த சுடர்முடிச் சூரியகாந்திக் குடும்பத்தாரையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்தார்.

''இல்லை. இது ஏதோ நிலவுலகிற்கு அப்பாற்பட்டது! ஒளியும் முழுமையும் தெய்விகமும் திகழும் இந்த அழகு எல்லாம் சாதாரணமான பழுப்புப் பொருளிலிருந்து, புழுதியிலிருந்து, இந்த நிலத்திலிருந்து வளர்ந்தது என்று நம்பவே முடியவில்லை!'' என்று வியந்தார்.

''தாமாக வளர்ந்துவிட வில்லை இவை'' என்று நையாண்டி செய்த தலைவர்,'' நாங்கள் நட்டோம்; பேணி வளர்த்தோம்; அதன் விளைவே இவை... உயிர்த் துடிப்புள்ள மக்களும், விவசாய நுட்பக்கலையும் இவற்றோடு கூட இயற்கையும் சேர்ந்து உருவாக்கிய சிற்பங்களாகும் இவை!'' என்றார்.

தங்கவயலின் ஆழத்திலிருந்து வெண்புறு போன்று மேலே எழுந்தது ஒரு தலைக்குட்டை. அதைத் தொடர்ந்து எழுந்தன இரண்டாவது, மூன்றாவது....

''உருவாக்கிய சிற்பங்கள் என்றா சொன்னீர்கள்?'' என வினவினார் சிற்பி.

''இல்லாவிட்டால் வேறு எப்படி?அதுவும் தேர்ந்த சிற்பி உருவாக்கியவை இவை. ஒவ்வொரு தொழிலிலும் அதற்கென்று தனியான தேர்ந்த ஆசான்கள் உண்டு, ஆன்மாவைத்

தூண்டிவிடும் பிரேரண சக்தியும் உண்டு! அல்லவா?''

செடிவரிசைகளுக்கிடையே மெல்ல நடந்து பாதையை நோக்கி வந்தனர் பெண்கள். அவர்கள் கடந்து சென்ற இடங்களிலே சூரிய காந்தி மலர்களுக்கு ஏதோ விந்தை நிகழ்ந்தது. தங்கள் ராஜ கம்பீரமான அமைதியைக் களைந்தெறிந்து விட்டு திடீரென உயிரோட்டங் கொண்டு ஒன்றுக் கொன்று முகமன் கூறி, கணப்போது ஒன்றை யொன்று தழுவி முத்தமிட்டுவிட்டு, மீண்டும் சடக்கென்று விலகித் தம்தம் இடங்களுக்குத் திரும்பி, நிமிர்ந்து, மறுபடியும் விட்டாற்றியாகப் புன்னகை புரிந்து ஒய்யாரமாக அசைந்தாடிக் கொண்டே கதிரவனை நோக்கிக் கண் சிமிட்டின அம்மலர்கள்.

இதைக் கண்டு வியப்படைந்த சிற்பி, ''இந்தப் பெண்கள் என்ன செய்கிறார்கள்?'' என்று தலைவரைக் கேட்டார்.

''அடே, இது தெரியாதா உங்களுக்கு? செயற்கை மகரந்தச் சேர்க்கை முறை இது. இயற்கையின் அருள் என்பார்களே, அதை எதிர் பார்த்துக் காத்திருந்தால் எங்களுக்குக் கட்டி வராது. அதற்காகத்தான் இப்படி'' என்று விளக்கினார் தலைவர்.

எல்லாருக்கும் முன்னே வந்த பெண்

மெலானியா என்று சிற்பி அடையாளங் கண்டு கொண்டார். ஓகோ, உண்மையான மெலானியா இத்தகையவளா! என வியந்தார். இப்போது அவளுடைய தோற்றத்திலே, பார்வையிலே, அங்க அசைவுகளிலே ஒரு பெருமிதம் திகழ்ந்தது. அவள் நடக்கவில்லை, நறுமணம் கமழும் பொற்கடலிலே, தனது பொற்றுள மலர்களை லயத்துடன் மெல்லென இசைத்த வாறு இறுமாப்புடன் நிமிர்ந்த' நிலையில் நீந்தி வந்தாள். காரியத்திலேயே கண்ணுயிருந்த அவள் சிற்பியைக் கவனிக்கவில்லை. ஆன்மிகப் பிரேரணையின் ஒளியைப் பிரதிபலித்த அவள் முகம், ஏதேதோ புதுக் கருத்துக்களால் ஒளிர்ந்து, மென்மையும் அறிவுச் சுடரும் பொலிந்து விளங்கியது. எதிர்பாராத பல சாயல்கள் அதிலே தென்பட்டன.

சிற்பிக்கு இளமை வந்துவிட்டது போல வும், தம் திறமையும் சக்தியும் திரும்பிவிட்டன போலவும் திடீரென உணர்வுண்டாயிற்று. 'அவளுடைய இந்த வடிவை நினைவிலே பதித்துக் கொள், கெட்டியாகப் பிடித்துக் கொள், சிற்பத்தில் உருவாக்கு! இங்கேயே, இப்போதே, இதே கணத்தில்!' என்று சிற்பியின் உள்ளம் மீண்டும் மீண்டும் அவரை ஊக்கியது.

தலைவர் கெந்துகாலில் எம்பி நின்று, ''வணக்கம், பெண்களே! தேனீக்கள் உங்கள்

மேல் புகார் செய்கின்றன. அவற்றின் உணவை எல்லாம் நீங்கள் பறித்து விடுகிறீர்களாம்!'' என்று இரைந்து கூறினர்.

மகரந்தத் தூள் பெண்களுக்கு மேலே தங்கப் பனிப்படலம் போலப் பறந்து, அவர் களது தலைக்குட்டைகள் மீதும், இமைகள் மீதும், புருவங்கள் மீதும் படிந்தது.

மௌனமாகச் சிற்பியை நோக்கினள் மெலானியா. இவர் யார், எதற்காக இங்கே வந்திருக்கிறார் என்று நினைவுபடுத்திக்கொள்ள முயல்பவள் போலிருந்தது அவள் பார்வை. மகிழ்ச்சியால் சிவப்பேறிப் பூரித்திருந்த அவள் உடலும் உள்ளமும் எல்லாம் வேறோர் உலகி லே இருந்தன. அவள் ஆட்சி செலுத்தும் உல கம் இது. இங்கே அவள் கட்டுப்பாடின்றி, இயல் பாக இருக்கலாம். முந்திய நாள் சிற்பிக்கு ஒரேயடியாக எரிச்சலூட்டிய அசட்டுப் பிசட் டுத்தனம் இன்று இருந்த சுவடு தெரியாமல் மறைந்துவிட்டது.

''மெலானியா! மெலானியா!'' என்று சிற்பி முணுமுணுத்தார்.

உணர்ச்சிப் பெருக்கினால் அவருக்கு வா யடைத்துப் போயிற்று.

மேலே என்ன வரப் போகிறது என்று பெருமிதத்துடன் எதிர்பார்த்திருந்தாள் மெ லானியா. அவளது கண்கள் ஒளிவீசின. மென்

மையான சூரியகாந்திச் செடிகள் அவளது தோள்களேயும் மார்பகத்தையும் மணங்கமழும் மலர் முடியால் கொஞ்சலாக வருடின.

சிற்பியின் சங்கடத்தைத் தீர்க்க விரைந்தார் தலைவர். ''மெலானியா, நமது மதிப்பிற்குரிய விருந்தினர் இப்போதே திரும்பிப்போகிருர். இதை உன்னிடம் சொல்லி விடை பெற வேண்டுமென்று...''

''விடையுமில்லை, கொடையுமில்லை'' என்று எதிர்பாராதபடி கண்டிப்பான குரலில் தலைவரின் பேச்சை இடைமறித்தார் சிற்பி. ''நான் எங்குமே போகப் போவதில்லை. இங்கேயே தங்கப் போகிறேன். எனது சிற்பச்சாலையை இந்த நீல வானத்தின் கீழ் திறக்கப் போகிறேன். விளங்குகிறதா?'' என்று கர்ஜித்தார்.

மெலானியா தோழிகளைக் கடைக்கண்ணுல் பார்த்து மென் முறுவலுடன், ''உங்கள் இஷ்டம்'' என்ருள்.

புதிய செடி வரிசைகளுக்கிடையே புகுந்தாள் மெலானியா. அடுத்த நிமிடமே அவளது சதைப் பிடிப்புள்ள, பழுப்பேறிய கரங்கள் மலர்ச் செடிகளின் நடுவே நுழைந்து, இளநங்கைக்குரிய மென்மையுடனும் புராண மகளிரின் ஒயிலுடனும் மலர்த்தட்டுகளை ஒன்ருேடொன்று இசைக்கலாயின.

அவளது உதாரணத்தைப் பின்பற்றி மற்

றப் பெண்களும் விட்ட இடத்திலிருந்து வேலையைத் தொடர்ந்தனர். தங்கப் பூங்கா மீண்டும் சிலிர் சிலிர்த்தது. மகிழ் பொங்கும் சூரிய காந்தி மலர்கள் மறுபடியும் ஒன்றையொன்று ஆரத் தழுவி முத்தங் கொஞ்சின. மகளிர் வயலின் மறுகோடிக்குச் சென்றுவிட்டனர்.

''என் பெட்டியைக் கொண்டுவரச் சொல்லுங்கள். நீங்கள் போகலாம்'' என்று வண்டியின் பக்கம் திரும்பாமலே கூறினார்

மந்திரத்தால் கட்டுண்டவர் போல அசையாது நின்றார் அவர். மற்ற விஷயங்கள் யாவும் மறைந்துவிட்டன. அவர் கண்களுக்குத் தென் பட்டவை சூரியகாந்திக் கடல், வெள்ளைத் தலைக்குட்டைகள், பொற்றுளங்களை லயத்துடன் பொருத்தும் மென்கரங்களின் ஓயிலான அசைவு இவை மட்டுமே.

வாசக நேயர்களுக்கு

இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தை அறியவும், அடுத்து வரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தாங்கள் கூறும் யோசனைகளை வரவேற்கவும் அயல் மொழிப் பதிப்பகம் மகிழ்வுடன் காத்திருக்கிறது.

கடிதங்களைத் தயை செய்து "Foreign Languages Publishing House, 21, Zubovsky Boulevard, Moscow, U.S.S R." என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.

